# உங்கள் குஜராத்தி ஜடைச்சிங்காரத்தின்

அழகை பூர்த்திசெய்ய

நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்

★ கூந்தல் தைலம் உபயோகியுங்கள்

இனும்!

இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் தெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி தெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதைக் குறிப்பிடவும். மற்ற ஜடைச்சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப்பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு



இராஸ்மிக் கம். லிட., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

CBP 12-X30 TM

கல்கி

# பொருளடக்கம்

மலர் 13 இதழ் 8 | 1953 செப்டம்பர் 20 | விஜய புரட்டாசி 4வ



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

செப்டம்பர் **18**-ந் தேதி முதல்

சென்னை சித்ரா—பிராட்வே—லக்ஷ்மி (பெரம்பூர்)

மற்றும் தென்னாடெங்கும்




அஸோஸியேடட் ப்ரொட்யூஸர்ஸ் :: சென்னை - 17



மலர் 13 } தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் { இதழ் 8

# தெற்கே புயல் வீசுகிறது!

சென்ற ஆண்டிலே தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் பெரும் புயல் அடித்தது. அதனால் ஜனங்களுக்குச் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்கள் நேர்ந்தன.

சில தினங்களுக்கு முன் கோதாவரி வெள்ளம் காரணமாக ஆந்திரப் பிரதேசத்தில் மகத்தான சேதம் ஏற்பட்டுள்ளது.

இப்போதோ இந்தியாவின் தென் கோடியில் உள்ள திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்தில் புயல் வீச ஆரம்பித்திருக்கிறது.

மேற்படி புயலின் விளைவாக என்ன நேரும் என்பது பற்றி அதற்குள் யாரும் எதுவும் கூறுவதற்கில்லை.

தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் வீசிய புயலும், ஆந்திரப் பிரதேசத்தை அல்லோல கல்லோலப் படுத்திய வெள்ளமும் இயற்கையால் சிருஷ்டிக்கப் பட்டவை.

ஆனால் திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்தில் அடிக்கத் தொடங்கியுள்ள அரசியல் புயல் மனிதரால் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறது!

எனவே, இந்தப் புயல் யாதொரு விபரீதமுமின்றி அடங்கி விடுமா? அல்லது பெரும் அரசியல் நெருக்கடிக்குக் காரணமாக அமையுமா?

இந்தக் கேள்விகளுக்குப் பதில் என்ன என்பது இயற்கையின் கையில் இல்லை; மனிதர் கைக் கொள்ளும் முறைகளையே பொறுத்திருக்கிறது.

* * * *

சென்ற பதினாறு மாதங்களாகத் திருவாங்கூர்-கொச்சி ராஜ்ய மந்திரி சபையில் திருவாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ ஏ. சிதம்பரநாத நாடார் பதவி வகித்து வந்தார்.

ஆனால் இனி மேற்படி மந்திரி சபையை ஆதரிப்பதில்லை என்று தி. த. நா. கா. கமிட்டி ஏகமனதாகத் தீர்மானித்திருப்பதால், ஸ்ரீ சிதம்பரநாத நாடார் தமது பதவியை ராஜிநாமா செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

திருவாங்கூர்-கொச்சி ராஜ்ய சட்ட சபையில் தி. த. நா. காங்கிரஸ் கட்சிக்கு ஒன்பது ஸ்தானங்கள் இருக்கின்றன. மேற்படி கட்சியினர் தி. கொ. ராஜ்ய சர்க்காரை ஆதரித்து வந்ததால் சட்ட சபையில் அவர்களுக்குப் பெரும்பான்மை பலம் இருந்தது.

இனிமேல் அந்த ஒன்பது அங்கத்தினர்களும் எதிர்க் கட்சியில் சேரப் போவதாக அறிவித்திருக்கின்றனர்.

எனவே, மொத்தம் நூற்றொன்பது அங்கத்தினர்கள் அடங்கிய சட்ட சபையில், தி. த. நா. கா. கட்சியினரைச் சேர்த்து எதிர்க் கட்சியினருக்கு ஐம்பத்தேழு ஸ்தானங்கள் கிடைத்து விடும்.

இந்த நிலைமையில் மற்றொரு கட்சியின் பலமின்றித் திருவாங்கூர்-கொச்சி காங்கிரஸ் கட்சிக்குப் பெரும்பான்மையான ஸ்தானங்கள் கிடைக்க முடியாது.

அதை அடுத்து நம்பிக்கையில்லாத் தீர்மானம், மந்திரி சபை ராஜிநாமா, புதிய தேர்தல் முதலிய உற்பாதங்கள் எழக் கூடும்.

* * * *

திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்தில் உள்ள எட்டுத் தாலுக்காக்களில் தமிழர்கள் பெருவாரியாக இருக்கிறார்கள். எனவே, அந்தப் பிரதேசங்களைத் தமிழ் நாட்டுடன் சேர்க்க வேண்டும் என்று திருவாங்கூர்த் தமிழர்கள் பல ஆண்டுகளாகக் கிளர்ச்சி செய்து வருவது யாவரும் அறிந்த விஷயம்.

அவர்கள் தங்களுடைய மேற்படி கோரிக்கையைப் பூர்த்தி செய்து கொள்ள அத்துமீறிய காரியம் எதையும் இது வரையில் செய்யவில்லை.

அவர்கள் அதற்காகப் பிரதம மந்திரி ஜாகைக்கு ஆர்ப்பாட்ட ஊர்வலம் போகவில்லை; ரயில் வண்டிகளை நிறுத்தவில்லை; பட்டினி விரதம் மேற் கொள்ளவில்லை.

பல தடவை புது டில்லிக்குச் சென்று தங்களுடைய கோரிக்கைகளைச் சாத்விகமாகத் தெரிவித்துக் கொண்டனர்.

கடைசியில், ஐக்கிய கேரளம் ஏற்படும்போது, தி. கொ. ராஜ்யத்தில் உள்ள தமிழ்த் தாலுக்காக்களைத் தமிழ் நாட்டுடன் சேர்த்தால் போதும் என்று விண்ணப்பம் செய்து கொள்வதுடன் திருப்தி அடைந்தார்கள்.

சென்ற தேர்தலில் மேற்படி தாலுக்காக்களில் தமிழ்ப் பிரதிநிதிகள் பெரும்பான்மையான வோட்டுக்கள் பெற்று வெற்றி அடைந்தார்கள்.

அவர்களுடைய கோரிக்கை நியாயமானது; பெரும்பாலான ஜனங்களின் ஆதரவைப் பெற்றது என்பது சென்ற தேர்தலில் நிரூபணமாகிவிட்டது.

அப்படியிருந்தும் அவர்கள் தி. கொ. காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து அவர்களுக்கு மெஜாரிட்டி பலம் கிடைக்கும்படி செய்தார்கள்.

இப்போது அவர்கள் கோரியதெல்லாம், திருவாங்கூர்த் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தனியாக இயங்குவதற்கு அனுமதி தர வேண்டும் என்பதைத் தவிர வேறு எதுவுமில்லை.

சென்னையில் ஆந்திரப் பிரதேச காங்கிரஸ் கமிட்டி பல வருஷங்களாக இருந்து வரவில்லையா!

அப்படியிருந்தும், திருவாங்கூர்த் தமிழர்களின் சர்வ சாதாரணமான அக் கோரிக்கையை இந்திய தேசிய மகாசபைப் பொதுக் காரியதரிசி நிராகரித்து விட்டார்.

அவ் விஷயமாகத் திருவாங்கூர்த் தமிழர்கள் எடுத்துக் கொண்ட நியாயமான முயற்சிகள் எதுவும் பலிக்கவில்லை.

எனவே, அவர்கள் தி. கொ. காங்கிரஸ் மந்திரி சபையிலிருந்து விலகிக் கொள்வதென்ற கடுமையான முறையைக் கைக் கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

அவர்களுடைய கோரிக்கையை அங்கீகரிப்பதால் காங்கிரஸுக்கோ, சர்க்காருக்கோ எவ்விதக் கஷ்ட நஷ்டமும் நேராது.

தி. கொ. ராஜ்ய சட்டசபை கூடுவதற்கு இன்னும் சில தினங்களே இருக்கின்றன.

இப்போது ஏற்பட்டுள்ள புயலை நீடிக்கவிடாமல் தடுப்பதற்கான முறைகளைக் காங்கிரஸ் மேலிடத்தார் கைக் கொள்வார்கள் என எதிர்பார்க்கிறோம்.

அதற்குள் தி. கொ. காங்கிரஸ் கட்சியினரோ, தி. த. நா. காங்கிரஸ் கட்சியினரோ மேற்கொண்டு தீவிர நடவடிக்கை எதையும் கைக் கொள்ள மாட்டார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# துறைமுகத்தில் கண்ட காட்சி!

சென்றவாரம் ஒரு நாள் சென்னைத் துறைமுகத்திலே எழுந்த பேரொலி கடல் அலைகளின் ஒலியைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. அங்கு 'பாரத மாதாவுக்கு ஜே' என்ற கோஷம் வானளாவியது. ராஜாஜி உள்படச் சென்னை சர்க்கார் மந்திரிகளும், உயர்தர இராணுவ அதிகாரிகளும், ஏராளமான பிரமுகர்களும் பிரசன்னமாகி இருந்தார்கள். இராணுவ வாத்தியங்கள் இன்னிசை முழங்கின. இந்தியத் துருப்புகள் அடங்கிய கடைசி கோஷ்டியினர் "ஜலகோபால்" கப்பலில் சென்னையிலிருந்து கொரியாவுக்குப் பிரயாணமான வைபவம் அவ்விதம் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. இந்தியத் துருப்புகள், இந்தியரான காப்டனின் தலைமையில், இந்தியாவுக்குச் சொந்தமான கப்பலில் வெளிநாட்டுக்குச் செல்லுவது இதுதான் முதல் தடவை ஆகும்!

கொரியாப் போரில் ஈடுபட்ட இரு கட்சியினராலும் அங்கீகரிக்கப்பட்ட நடுநிலைமைக் கமிஷனின் அலுவல்கள் கொரியாவிலே ஆரம்பமாகி விட்டன. அந்தக் கமிஷனின் தலைவராக நியமிக்கப்பட்டுள்ள லெப்டினண்ட் ஜெனரல் கே. எஸ். திம்மய்யா ஏற்கெனவே கொரியாவுக்குச் சென்றுள்ளார். மேற்படி கமிஷனின் தலைமைப் பதவியை ஒப்புக் கொண்டதன் மூலம் இந்தியா மகத்தான பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறது. கொரியாப் பிரச்னை சம்பந்தமாக மற்றெந்த நாட்டையும் காட்டிலும் இந்தியா வகிக்க வேண்டிய பொறுப்புத்தான் மிகவும் தர்ம சங்கடமானது.

உலக சமாதானத்தில் உள்ள ஆர்வம் காரணமாகவே அத்தகைய கஷ்டமான பொறுப்பைத் தட்டிக் கழிக்காமல் இந்தியா ஒத்துக் கொண்டது. அப்படியிருந்தும் கொரியா அரசியல் மகாநாட்டில் இந்தியா கலந்து கொள்ளும் விஷயமாக அமெரிக்கா உலக மகா சபையில் பெரும் தகராறைக் கிளப்பி விட்டது வருந்தத் தக்கது.

*　*　*

சென்ற சில நாட்களாக ஐக்கிய நாடுகள் சபையில் நடந்து வந்த விசித்திரமான மேடைப் போர் ஒரு வழியாக முடிந்து விட்டதை யாவரும் அறிவார்கள். அந்தப் போரின் விளைவாகப் பல விபரீதங்கள் எழலாம் என்று தோன்றியது. கொரியாப் போர் மறுபடியும் ஆரம்பமாகி விடாமல் தடுக்கும் கைங்கரியத்தில் ஈடுபட்டுள்ள நாடுகள் தங்களுக்குள்ளேயே வாய்ச் சண்டையை நீடிக்கவிடுவது கைக்கத் தக்க விஷயம் அல்லவா!

ஆனால், அந்தச் சண்டைக்கு இந்தியா முற்றுப் புள்ளி வைத்து விட்டது.

கொரியா சமாதான ஒப்பந்தத்தின்படி, கொரியாப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக ஓர் அரசியல் மகாநாடு நடைபெற வேண்டும்.

அந்த அரசியல் மகாநாட்டில் இந்தியாவுக்கு ஸ்தானம் அளிக்கும் விஷயமாக ஐ. நா. சபையில் விவாதம் ஏற்பட்டது. அதில் இந்தியாவுக்கும் ஸ்தானம் அளிக்க வேண்டும் என்பதைப் பிரிட்டன், ஆஸ்திரேலியா, கனடா, நியூஸிலந்து உள்படப் பல நாடுகள் ஆதரித்தன. பாகிஸ்தானைத் தவிர சகல ஆசியா நாடுகளும் இந்தியாவுக்கு ஸ்தானம் அளித்துத்தீரவேண்டும் என்று வற்புறுத்தின.

ஐ. நா. சபையில் ஆலோசனைக்கு வரும் எல்லா விஷயங்களை ஒட்டியும் அமெரிக்காவின் கட்சியை ஆதரித்து வோட்டுக் கொடுக்கும் லத்தீன் அமெரிக்க நாடுகளில் கூடப் பெரும்பாலானவை, கொரியா சமாதான அரசியல் மகாநாட்டில் இந்தியா முக்கிய ஸ்தானம் பெறத் தகுதியுள்ளது என்று கருதின. எனவே, மகாநாட்டில் இந்தியாவுக்கு ஸ்தானம் அளிக்க வேண்டும் என்ற தீர்மானம் கமிட்டியில் பெரும்பாலான வாக்குகள் பெற்று நிறைவேறியது. அது நிறைவேறாமல் தடுக்க அமெரிக்கா செய்த முயற்சி எல்லாம் பலிக்காமற் போய் விட்டன.

*　*　*

கொரியா அரசியல் மகாநாட்டில் இந்தியா கலந்துகொண்டால் தாம் அதைப் பகிஷ்காரம் செய்யப் போவதாகத் தென்கொரியாத் தலைவர் ஸிங்மென் ரீ கூறினார். எனவே அந்த மகா நாட்டில்

இந்தியா கலந்து கொள்ளாமல் தடுக்க அமெரிக்கா பெருமுயற்சி செய்தது; இந்தியா கலந்து கொள்ளக் கூடாது என்பதற்கு என்ன வெல்லாமோ சாக்குகள் கூறியது.

ஐ. நா. சபையில் குடியரசு சீனா ஸ்தானம் பெற வேண்டும் என்பதைப் பிரிட்டன் முதலிய பல நாடுகள் ஆதரிக்கின்றன. அவ் விஷயத்தில் உலகத்தில் உள்ள பெரும்பாலான நாடுகளின் அபிப்பிராயத்தையும் துச்சமாகக் கருதி அதை எதிர்க்கும் அமெரிக்கா, சாதாரண மனிதரான சிங்மென் ரீயின் மனம் கோணாமல் நடந்து கொள்ள வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருப்பது பெரும் மர்மமாக இருக்கிறது!

அந்தத் தீர்மானத்தை அமெரிக்கா எதிர்த்ததன் காரணமாக உலக நாடுகளிடையே பெரும் பிளவு ஏற்படலாம் என்று தோன்றியது.

அவ் விஷயமாக மேற் கொண்டு விவாதத்தையும் அபிப்பிராய பேதத்தையும் நீடிக்க விடாமல் தடுப்பதற்காக இந்தியா கொரியா மகாநாட்டுக்குத் தன் பெயர் பிரேரேபிக்கப் பட்டிருப்பதை வாபஸ் செய்து கொண்டு விட்டது.

அமெரிக்காவை எதிர்த்து ஐ.நா. சபை அரசியல் கமிட்டியில் இந்தியா பெற்ற வெற்றியைக் காட்டிலும், தன் பெயரை வாபஸ் செய்து கொண்டதன் மூலம் இந்தியாவுக்குக் கிடைத்த ஆத்மீக வெற்றி ஆயிரம் மடங்கு மேலானது.

எனினும் கொரியா அரசியல் மகாநாட்டுப் பிரச்னை இத்துடன் முடிந்து விடவில்லை என்பது இப்போது கிடைத்துள்ள செய்திகளிலிருந்து சந்தேகமின்றித் தெரிகிறது.

மேற்படி அரசியல் மகாநாட்டில் இந்தியா, இந்தோனேஷ்யா முதலிய நாடுகளின் பிரதிநிதிகளும் இடம் பெற வேண்டும் என்று சீனக் குடியரசு சர்க்கார் வற்புறுத்தி யிருக்கிறார்கள். அவர்கள் கலந்து கொள்ளாத எந்த அரசியல் மகாநாட்டுத் திட்டத்தையும் தாங்கள் ஏற்க முடியாது என்று கூறியிருக்கிறார்கள்.

எனவே, கொரியாப் போர் நின்று விட்டதெனினும், கொரியாப் பிரச்னை தீருவதற்கு இன்னும் எத்தனையோ முட்டுக்கட்டைகள் ஏற்படலாம் என்று தோன்றுகிறது.

இவ்வாறாக, இந்தியா விஷயத்தில் அமெரிக்கா செய்த பெரும் தவறு இப்போது கிளைவிடத் தொடங்கி யிருக்கிறது!

அமெரிக்காவின் போக்கு எவ்விதமாயினும், உலக நாடுகளுக்கு இந்தியா மீது எவ்வளவு மதிப்பு இருக்கிறது என்பதற்குக் கடைசியாகக் கிடைத்துள்ள செய்தியே சான்று ஆகும்.

ஐக்கிய நாடுகள் மகா சபைக்கு (General Assembly) ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். அவரை ஆதரித்துப் பெரும்பாலான தேசங்கள் வோட்டுக் கொடுத்ததிலிருந்து மேற்படி சபையில் இந்தியாவுக்கு உள்ள ஆதரவையும் அபரிமிதமான செல்வாக்கையும் ஊகித்துக் கொள்ளலாம்.

## சில்லறைத் தொந்தரவு !




மாஹி, புதுச்சேரி முதலிய இடங்களிலுள்ள பிரெஞ்சு - இந்திய அரசாங்கத்தார் இந்தியாவுக்குச் சில்லறைத் தொந்தரவுகளை விளைவித்து வருகின்றனர்.

# கிராமணியாருக்கு வயது நூறு

தமிழ் மொழி சொல் வளம் மிகுந்த ஆற்றல் நிறைந்த மொழி. ஆயினும் ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியாரைத் தாக்கிக் காயப்படுத்திய கயவர்களின் செயலைக் கண்டிப்பதற்கு வேண்டிய ஆற்றல் உள்ள சொற்கள் தமிழிலே கூட இல்லையென்றே சொல்ல வேண்டும். இத்தகைய நீசத்தனமான காரியத்தைச் செய்யக் கூடியவர்களும் தூண்டிவிடக் கூடியவர்களும் தமிழுக்கும் தமிழர் நலத்துக்கும் பாடுபடுவதாகச் சொல்லிக் கொள்வது வேடிக்கையிலும் வேடிக்கை. தமிழைப் பற்றியோ, தமிழரின் மேன்மையைப் பற்றியோ, தமிழர் பண்பாட்டைப் பற்றியோ இவர்கள் ஏதும் அறியார்கள். தெய்வத் திருக்குறளின் ஒரு பாடலாவது ஒரு வரியாவது இவர்கள் செவியில் விழுந்து உள்ளத்தில் பதிந்திருந்தால் இத்தகைய மிருகத்தனமான செயலைப் புரிவார்களா?

அரசியல் தொண்டு செய்ய முன் வருவோரில் பற்பல ரகங்கள் உண்டு. பாட்டாளி வர்க்கத்தின் பெயர்களைச் சொல்லிக் கொண்டு அரசியல் தலைவர்களாகத் திகழ்வார்கள். தங்கள் சொந்த வாழ்க்கையில் பாடுபட்டே அறிந்திருக்க மாட்டார்கள். அரசியல் துறையில் தங்கள் முன்னேற்றத்துக்காகப் பாட்டாளி வர்க்கத்தைக் கருவியாக உபயோகப்படுத்திக் கொள்வார்கள்.

திரு ம. பொ. சிவஞானம் பாட்டாளி வர்க்கத்தில் பிறந்து, பாட்டாளியாக இருந்து பாடுபட்டு வாழ்ந்தவர். தமது அறிவினாலும் ஆற்றலினாலும் ஒழுக்கத்தினாலும் உறுதியுள்ள உழைப்பினாலும் அரசியல் தலைவராக உயர்ந்தவர். தெய்வத் தமிழ் மொழியைத் தமது சொந்த முயற்சியினால் கற்று உணர்ந்து, பழந்தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி அறிவுடன் கற்றுத் தேர்ந்து, புலவர்களும் பாராட்டக்கூடிய தமிழ்ப் புலமை பெற்றவர். பிரசங்க மேடைகளில் இணையற்ற வன்மையுடன் தமிழைக் கையாளும் திறமை பெற்றவர். அரசியல் வாழ்க்கையில் புகுந்தது முதல் தமக்கென எதையும் வேண்டாது பொது மக்களுக்கே ஓயாது உழைத்துப் பாடுபட்டு வருகிறவர்.

உழைப்பினாலும் ஊக்கத்தினாலும் தொண்டினாலும் தியாகத்தினாலும் உயர்ந்த ம. பொ. சி. யைப் பற்றித் தமிழ் நாட்டில் தமிழராகப் பிறந்த ஒவ்வொருவரும் பெருமை கொண்டு தோள்கள் பூரிக்க வேண்டும்.

அதற்கு மாறாக, அவரைக் கூட்டத்திலேயிருந்து கோழைத்தனமாகத் தாக்க முற்பட்டவர்களைப் பற்றித் தமிழராகப் பிறந்த ஒவ்வொருவரும் வெட்கித் தலை குனிய வேண்டும்.

இத்தகைய கொடிய தாக்குதலுக்கு உள்ளாகிப் பிழைத்தெழுந்த திரு ம.பொ. சிவஞான கிராமணியார் இறைவன் அருளினால் நூறு ஆண்டுகள் நோய் நொடி இன்றி வாழ்ந்து தமிழகத்துக்குப் பணி செய்வார் என்று நம்புகிறோம்.

திரு ம. பொ. சி. யின் நெற்றிக் காயத்திலிருந்து கொட்டிய ஒவ்வொரு இரத்தத் துளியிலிருந்தும் நூறு நூறு இளம் சிவஞானங்கள் தோன்றுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

மாயவரம் நகரமும் அதன் சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களும் தேசபக்திக்கும் தமிழ்ப் பற்றுக்கும் பெயர் போனவை. ஒரு சில கயவர்களின் செயலால் மாயவரத்தின் நற்பெயருக்கு இப்போது மாசு நேர்ந்திருக்கிறது.

மறு முறை திரு ம. பொ. சிவஞான கிராமணியார் மாயவரத்துக்கு விஜயம் செய்யும்போது மாயவரம் நகரிலும் சுற்றுப் புறக் கிராமங்களிலுமுள்ள தமிழ்ப் பெருமக்கள் திரண்டு வந்து அவருக்கு மகத்தான மாபெரும் வரவேற்பு அளித்து, மாயவரத்துக்கு நேர்ந்த மாசினைத் துடைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

# "ஹிந்து" பத்திரிகையின் புது முயற்சி

உலகத்தில் உள்ள சிறந்த பத்திரிகைகளில் ஒன்று எனப் புகழ் பெற்று விளங்குவது "ஹிந்து" பத்திரிகை. "ஹிந்து"வின் மூலமாகச் சென்னை மாகாணமே சிறப்புற்றிருக்கிறது. அதன் கருத்துக்களுக்கு உலகத்தில் உள்ள பிரபல பத்திரிகைகளும் பிரமுகர்களும் சர்க்கார்களும் மிகுந்த மதிப்புக் கொடுக்கின்றனர். சென்னை மாநகருக்கு விஜயம் செய்யும் சர்வ தேசப் பிரமுகர்கள் "ஹிந்து" பத்திரிகாலயத்துக்குச் சென்று பார்வையிடாமல் இருப்பதில்லையெனில், பத்திரிகை உலகில் அது அடைந்துள்ள உன்னத ஸ்தானத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

இவ்வாறு பத்திரிகை உலகத்துக்கே பெருமை அளித்து வரும் "ஹிந்து" பத்திரிகாலயத்திலிருந்து சென்றமாதம் முதல் The Hindu Weekly Review என்ற புதிய வாரப் பதிப்பு வெளியீட்டை ஆரம்பித்திருக்கிறார்கள். வெளி நாடுகளில் உள்ளவர்களுக்கு, முக்கியமாக, கடல் கடந்து சென்றுள்ள இந்திய சகோதர சகோதரிகளுக்கு மேற்படி வாரப் பதிப்பு மிகவும் உபயோகமாக இருக்கும்.

அன்னிய நாடுகளில் உள்ள தினசரிப் பத்திரிகைகளில் இந்தியாவைப் பற்றிய இரண்டொரு முக்கிய செய்திகள்தான் வெளியாவது சாத்தியமாகும். ஆனால் "ஹிந்து வீக்லி ரெவ்யூ"வில் அந்தந்த வாரத்திய பெரும்பாலான இந்தியச் செய்திகளும் சுருக்கமாக வெளியிடப் படுகின்றன. இவற்றைத் தவிரச் சிறந்த பொருளாதார, அரசியல் கட்டுரைகள், விசேஷ மதிப்புரைகள், ஏராளமான படங்கள் முதலிய பல விசேஷ அம்சங்களுடனும் "ஹிந்து" பத்திரிகையின் வாரப் பதிப்பு திகழ்கிறது. இன்னும் பந்தய விளையாட்டுகள் பற்றிய செய்திகளும் மேற்படி பதிப்பில் இடம் பெற்றிருக்கின்றன.

"ஹிந்து வீக்லி ரெவ்யூ" உயர்ந்த மெல்லிய காகிதத்தில் (Air mail paper) அச்சடிக்கப்பட்டு விமானங்களின் மூலம் வெளி நாடுகளுக்கு அனுப்பப் படுகிறது. எனவே அந்நாடுகளில் உள்ளவர்கள் சுதந்திர இந்தியாவைப் பற்றிய உண்மையான செய்திகளை வாரந்தோறும் தவறாமல் தெரிந்து கொள்வதற்கு வசதி ஏற்பட்டிருக்கிறது.

பத்திரிகை உலகில் தலை சிறந்து விளங்கும் "ஹிந்து" பத்திரிகையின் இந்தப் புது முயற்சியும் பூரண வெற்றி பெற விரும்புகிறோம்.

இப்பொழுது
நடைபெறுகிறது
சென்னை
**பாரகன்**
**கிரௌன்**
**ஸயானி**
மற்றும் பல இடங்களில்

உங்கள்
வாழ்நாட்களில்
மறக்க முடியாத
உணர்ச்சிகளைப்
பிரதிபலிக்கும்
சித்திரம் !

விநோதாவின்....

# தேவதாஸ்

டைரக்ஷன் வேதாந்தம் ராகவய்யா...




விநியோகஸ்தர்கள் :
வட ஆற்காடு, தென்னாற்காடு, செங்கற்பட்டு, பாண்டிச்சேரி முதலிய இடங்களுக்கு : ஆனந்தா பிக்சர்ஸ், வேலூர்
மலபார் : பேர்ள் பிக்சர்ஸ் லிமிடெட், எர்ணாகுளம். சிலோன் : சிலோன் எண்டர்டெயின்மெண்ட்ஸ் லிமிடெட், கொழும்பு
எப்.எம்.எஸ். : ஷா பிரதர்ஸ் லிட்., சிங்கப்பூர். சென்னைநகரம் மற்றும் தமிழ்நாடு முழுதும்: ருட்லின் பிக்சர்ஸ், சென்னை-2
தமிழ்ப்பட விநியோக உரிமை பெற்றவர்கள் : மெஸர்ஸ். நல்லம் பிக்சர்ஸ் சர்க்யூட், பெங்களூர்-2 & சென்னை-4




## அத்தியாயம் 41

# பாயுதே தீ!

இத்தனை நேரம் அசைவற்று உட்கார்ந்திருந்த சம்புவரையர் இப்போது பாய்ந்து எழுந்து கந்தமாறனுடைய கையைப் பிடித்துக் கொண்டார்.

"அடே மூடா! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்?" என்றார்.

"தந்தையே! இந்தச் சிநேகிதத் துரோகியைக் கொல்லுவதிலே என்ன தவறு?" என்றான் கந்தமாறன்.

"என்ன தவறு? அதனால் நானும் நீயும் இந்தப் பழைமையான சம்புவரையர் குலமும் அழிந்து போவோம். இவனைக் கொன்று விட்டால் இளவரசரையும் இவனையும் சேர்த்துக் கொன்று விட்டதாக நம் பேரில் அல்லவோ பழி சுமத்துவார்கள்? இது கூடவா உனக்குத் தெரியவில்லை?" என்றார் தந்தை.

"அவ்வாறு நம் பேரில் பழி சுமத்தக் கூடிய வல்லமை யுடையவன் யார்? அவ்விதம் குற்றம் சுமத்திவிட்டு அவன் உயிருடன் பிழைத்திருப்பானா?" என்று கேட்டான் கந்தமாறன்.

"ஐயோ! அசட்டுப் பிள்ளையே! உன்னுடைய வீரத்தையும் துணிச்சலையும் இதிலேதானா காட்ட வேண்டும்? உன்னுடைய யோசனையை ஆரம்பத்திலிருந்து கேட்டதினாலேதான் இந்த விபரீதம் நம் வீட்டில் நடந்து விட்டது? பெரிய பழுவேட்டரையரையும் மற்றச் சிற்றரசர்களையும் நீதான் இந்த வீட்டுக்கு அழைத்தாய். மதுராந்தகத்தேவர் இரகசியமாக இங்கே வந்ததும் உன்னாலேதான். அது இந்த உன் அருமைச் சிநேகிதன் மூலம் எல்லாருக்கும் தெரிந்து விட்டது. பிறகு ஆதித்தகரிகாலரைக் காஞ்சியிலிருந்து அழைத்து வந்தவனும் நீதான்! ஐயோ! அதன் விளைவு இப்படியாகும் என்று நான் நினைக்கவே இல்லையே! மலையமான் — நமது குலத்தின் பழமையான விரோதி— பெரியதொரு படையுடன் நெருங்கி வந்து கொண்டிருக்கிறான். அவனுக்கு என்ன சொல்லப் போகிறேன்?...... பழுவேட்டரையரும் இச் சமயம் பார்த்து ஊருக்குப் போய்விட்டார்!......" என்று கூறிச் சம்புவரையர் திரும்பவும் தலையிலே அடித்துக் கொண்டார்.

கந்தமாறன் கண்களில் நீர் ததும்ப "தந்தையே! தாங்கள் வீணாக வேதனைப் படவேண்டாம். என்னால் நேர்ந்த விபரீதத்துக்கு நானே தண்டனை அனுபவிக்கிறேன். தாங்கள் என்ன கட்டளையிடுகிறீர்களோ, அவ்விதம் செய்யக் காத்திருக்கிறேன்!" என்றான்.

"முதலில் இந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு போய் அந்தப்புரத்தில் விட்டு விட்டுவா! இவள் ஏதாவது உளறினால் வாயிலே துணியை அடைத்துக் கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டு வா! இல்லாவிட்டால் இரகசிய அறையில் போட்டுப் பூட்டி விட்டு வா!" என்றார் சம்புவரையர்.

மணிமேகலை தன் அருமைத் தந்தை அப்போது கொண்டிருந்த ரௌத்ராகாரத்தைப் பார்த்து விட்டு நடு நடுங்கினாள். வந்தியத்தேவனுக்கு இப்போது உடனே ஆபத்து ஒன்று மில்லை என்பதையும் தெரிந்து கொண்டாள்.

"தந்தையே! மன்னிக்க வேண்டும். தங்கள் கட்டளைப்படி நடந்து கொள்வேன். கந்தமாறன் என்னைத் தொட வேண்டாம். நானே இதோ தாய்மார்கள் இருக்கும் அந்தப்புரத்துக்குப் போய்

விடுகிறேன்!" என்று சொல்லி விட்டு விடு விடு என்று அங்கிருந்து நடந்து சென்றான். கந்தமாறனும் அவனைப் பின் தொடர்ந்து போனான்.

அவர்கள் சென்றவுடனே சம்புவரையர் தம்முடன் வந்திருந்த ஆட்களைப் பார்த்து, "இவனை அந்தக் கட்டில் காலுடன் சேர்த்து இறுக்கிக் கட்டுங்கள்!" என்று உத்தரவிட்டார்.

அவ்விதமே ஆட்கள் வந்தியத்தேவனை நெருங்கி வந்தபோது அவன் அமைதியாக இருந்தான். கட்டில் காலுடன் சேர்த்துக் கட்டிய போதும் அவன் எவ்விதத் தடங்கலும் செய்யவில்லை. கட்டி முடிந்தவுடனே அவன், "ஐயா! சற்றே யோசித்துப் பாருங்கள்! கரிகாலருடைய அந்தரங்கத்துக்குரிய நண்பன் நான். அவரைக் கொல்லுவதினால் எனக்கு என்ன லாபம்? உண்மையில் அவரைக் கொன்ற பாதகர்கள் சுரங்கப் பாதை வழியாகத் தப்பித்துக் கொண்டு போய் விட்டார்கள். அவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடிப்பதற்கு முயற்சி செய்யுங்கள். அவர்களை நான் பார்த்திருக்கிறேன்.' என்னை அவிழ்த்து விட்டால், நானே தங்களுடன் வந்து அவர்களைப் பிடிப்பதற்கு உதவி செய்வேன்! கடவுள் அறியச் சத்தியமாகச் சொல்கிறேன். தங்களிடமிருந்து தப்பிச் செல்வதற்கு நான் பிரயத்தனம் செய்ய மாட்டேன்!" என்றான்.

"அடே! நீ சொல்லுவது உண்மையானால், கரிகாலர் கொலை செய்யப்படும் போது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்? வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாயா?" என்றார் சம்புவரையர்.

"ஐயா! பழுவூர் ராணியும் கரிகாலரும் பேசிக் கொண்டிருந்த போது திடீரென்று கொலைகாரர்கள் பிரவேசித்தார்கள். அவர்களைத் தடுக்க நான் யத்தனித்தபோது பயங்கரமான தோற்றமுடைய காளாமுகன் ஒருவன் என் கழுத்தைப் பிடித்து நெறித்தான். நான் நினைவிழந்து விட்டேன். மறுபடியும் நினைவு வந்தபோது ஆதித்த கரிகாலர் உயிரற்று விழுந்து கிடப்பதைக் கண்டேன்!" என்றான் வந்தியத்தேவன்.

இச்சமயத்தில் அந்த மாளிகைச் சுவருக்கு அப்பால் பெரியதொரு கூச்சல் கேட்டது. ஆயிரக்கணக்கானவர்களின் கோபக் குரலிலிருந்து எழுந்த கோஷத்தைப் போல் தொனித்தது.

சம்புவரையர் அதைக் காது கொடுத்துக் கேட்டார். வந்தியத் தேவனைப் பார்த்து, "சரி! சரி! நீ சொல்வது உண்மையாகவே இருந்தாலும் சற்று நேரம் நீ இங்கேயே இரு! உன்னுடைய அருமை நண்பராகிய இளவரசருக்குத் துணையாக இரு! அது என்ன கூச்சல் என்று பார்த்து விட்டுப் பிறகு வருகிறேன்! வந்து உன் கட்சியை முழுதும் தெரிந்து கொள்கிறேன்!" என்று கூறி விட்டுச் சம்புவரையர் புறப்பட்டார். அவருடன் ஆட்களும் இளம்பிறைர்கள். போகும்போது சம்புவரையரின் கட்டளைப்படி அந்த அறையின் கதவைச் சாத்தி வெளிப்புறத்தில் தாளிட்டு விட்டுச் சென்றார்கள்.

மறுபடியும் அந்த அறையில் இருள் சூழ்ந்தது. வந்தியத்தேவனுடைய உள்ளத்திலோ சொல்ல முடியாத வேதனை குடிகொண்டது! சில மாதங்களுக்கு முன்னர் அந்தக் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குத் தான் வந்ததிலிருந்து நடந்தவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்டான். வானத்திலே அப்போது தான் பார்த்த தூமகேதுவையும் அதைப் பற்றி மக்கள் பேசிக் கொண்டதையும் ஞாபகப் படுத்திக் கொண்டான். வானத்தில் வால் நட்சத்திரம் காணப்பட்டமையால் சுந்தர சோழருடைய இறுதி நாள் நெருங்கி விட்டதாக எல்லாரும் நினைத்தார்கள். சுந்தரசோழர் நீண்டநாட்களாக நோய்ப் பட்டுக் கிடந்தபடியால் அவ்வாறு மக்கள் எதிர்பார்த்தது இயற்கைதான். அதனாலேயே அவருக்கு அடுத்தாற்போல் பட்டத்துக்கு வரக்கூடியவர் யார் என்பது பற்றியும் ஜனங்கள் பேசினார்கள். இந்த மாளிகையிலேயே சிற்றரசர்கள் கூடி அதைப் பற்றிப் பேசினார்கள். ஆனால் எல்லாரும் எதிர்பார்த்தது ஒன்றும், நடந்தது ஒன்றுமாக முடிந்தது. வாலிப வயதினரும் வீராதி வீரருமான ஆதித்த கரிகாலர் மாண்டு போனார். உயிரற்ற அவரது உடல் இதோ இந்த அறையில் கிடக்கிறது. நோய்ப்பட்டுள்ள சுந்தர சோழர் இன்னும் உயிரோடு இருக்கிறார். ஆனால் இன்னும் நெடுங்காலம் இருப்பாரா? தமது அருமைக் குமாரரின் அகால மரணச் செய்தியை அறிந்த பிறகும் உயிரோடு இருப்பாரா? ஐயோ! மகனைப் பார்க்க வேண்டுமென்று தந்தை எவ்வளவு ஆவல் கொண்டிருந்தார்? தந்தை வந்து தங்கியிருப்பதற்காகக் கரிகாலர் காஞ்சியில் பொன் மாளிகை

கட்டினாரே? அந்தப் பொன் மாளிகையில் தந்தையை வரவேற்று உபசரிப்பதற்குக் கொடுத்து வைக்காமல் குமாரர் போய் விட்டாரே? இதிலிருந்து இன்னும் என்னென்ன விளையப் போகிறதோ, தெரியவில்லை. சோழ சாம்ராஜ்யம் முழுவதும் ஒரே துயர வெள்ளத்தில் மூழ்கப் போகிறது. அது மட்டுந்தானா? எத்தனை விதமான உட்கலகங்கள் விளையப் போகின்றனவோ, யாருக்குத் தெரியும்? சிற்றரசர்களுக்குள் பெருஞ் சண்டை மூளப் போகிறது நிச்சயம். சற்று முன்னால் வெளியிலே கேட்ட சத்தம் மலையமானுடைய படை வீரர்கள் போட்ட சத்தமாகத்தான் இருக்க வேண்டும்! அவர்கள் எதற்காக அப்படிக் கோஷமிட்டார்கள்? இந்தக் கடம்பூர் மாளிகையைத் தாக்கப் போகிறார்களா, என்ன? எதற்காக? கரிகாலருடைய மரணம் பற்றிய செய்தி ஒருவேளை அவர்களுக்கு எட்டியிருக்குமோ? ஆகா! சம்புவரையர் இதை எப்படிச் சமாளிக்கப் போகிறார்? நம் பேரில் கரிகாலரைக் கொன்ற குற்றத்தைச் சுமத்திச் சமாளிக்கப் பார்ப்பார். ஆனால் அதை மலையமான் நம்புவாரா? நம்பினாலுங்கூட, சம்புவரையரின் மாளிகையில் இது நடந்திருப்பதால் அவரைச் சும்மா விட்டு விடுவாரா? முன்னர் இங்கே நடந்த சதியாலோசனையைப் பற்றி மலையமானுக்குத் தெரிந்திருக்க வேண்டும். தெரிந்திரா விட்டாலும் ஆழ்வார்க்கடியான் போய் எச்சரித்து விட்டுப் போயிருக்கிறான். ஆகையினாலேதான் படை திரட்டிக் கொண்டு வருகிறார். மலையமான் தம் பேரப்பிள்ளை மீது எவ்வளவு அன்பு வைத்திருந்தார் என்பது வந்தியத்தேவனுக்கு நன்றாய்த் தெரியும். இந்தச் செய்தியை அறியும் போது அவர் என்ன செய்வார் என்பது யாருக்குத் தெரியும்? சம்புவரையர் குடும்பத்தையே நாசம் செய்து இந்த மாளிகையையும் அடியோடு அழித்துப் போட்டாலும் போட்டு விடுவார்.

பாவம்! கந்தமாறன்! நல்ல பிள்ளை! நம்மிடம் எவ்வளவு சிநேகமாக இருந்தான்? அவ்வளவு சிநேகமும் கொடிய துவேஷமாக அல்லவா மாறி விட்டது? எல்லாம் அந்தப் பழுவூர் மோகினியின் காரணமாகத்தான்...பார்க்கப் போனால், அவளுடைய கதையும் சோக மயமாக இருக்கிறது. அவள் பேரிலேதான் எப்படிக் குற்றம் சொல்லுவது? எல்லாம் விதி செய்யும் கொடுமைதான்......!

விதி! விதி! மணிமேகலையின் விதியை என்ன வென்று சொல்லுவது? என்னிடம் எதற்காக அவள் இவ்வளவு அன்பு காட்ட வேண்டும்? என்னைத் தப்புவிப்பதற்காக முன் வந்து 'நான் கொன்றேன்' என்று ஒப்புக் கொண்டாளே? இத்தகைய அன்புக்கு இணை ஏது?—இதற்குக் கைம்மாறுதான் என்ன செய்யப் போகிறேன்......?

வந்தியத் தேவன் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். கைம்மாறு செய்வதைப் பற்றி எண்ணுவது என்ன பைத்தியக்காரத்தனம்! மற்றவர்களைப் பற்றி நான் பரிதாபப்படுவதிலேதான் என்ன அர்த்தம் இருக்கிறது? என்னுடைய நிலைமையைக் காட்டிலும் பயங்கரமான பரிதாபமான நிலைமையில் உள்ளவர்கள் வேறு யாரும் இல்லை! ஆதித்த கரிகாலரைக் கொன்றதாக என் பேரில் குற்றம் சுமத்தப் போகிறார்கள்! நான் அந்தப் பாதகத்தைச் செய்யவில்லை என்று நிரூபிப்பதற்கு எவ்விதச் சாட்சியமும் இல்லை. நந்தினியும் ரவிதாஸன் கூட்டத்தாரும் போயே போய் விட்டார்கள். அவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடிப்பதற்கு யாரும் முயலவில்லை. அவர்களை ஒருவேளை பிடித்தாலுங் கூட நானும் அவர்களுடன் சேர்ந்து சதி செய்யவில்லை என்று எப்படி நிரூபிக்க முடியும்? முடியாது!

பட்டத்து இளவரசரைக் கொலை செய்த துரோகிக்கு என்ன விதமான தண்டனை கொடுப்பார்கள்? வெறுமனே கொலைக்குக் கொலை என்று தண்டனை கொடுத்துவிட மாட்டார்கள். இம்மாதிரி காரியத்தை இனி யாரும் கனவிலும் செய்ய நினையாத வண்ணம் பயங்கரமான சித்திரவதைத் தண்டனை ஏற்படுத்துவார்கள். என்ன விதமான தண்டனை கொடுத்தாலும் கொடுக்கட்டும். கரிகாலரை நான் கொன்று விட்டதாகப் பழையாறை இளையபிராட்டியும் பொன்னியின் செல்வரும் கருதுவார்கள் அல்லவா? அதைக் காட்டிலும் வேறு என்ன சித்திரவதை கொடுமையாக இருக்க முடியும்? தெய்வமே! சென்ற மூன்று நான்கு மாத காலத்தில் நான் எவ்வளவோ இக்கட்டுக்களில் தப்பி வந்ததெல்லாம் இந்தப் பயங்கரமான அபகீர்த்திக்கு ஆளாவதற்குத்தானா......?

இவ்வாறெல்லாம் வந்தியத் தேவனுடைய உள்ளத்தில் அலைமேல் அலை எறிவது போல் எத்தனையோ எண்

ணங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. எவ்வளவு நேரம் இப்படிக் கழிந்தது என்று அவனுக்குத் தெரியாது. இருளடர்ந்திருந்த அந்த அறையில் திடீரென்று மெல்லிய புகைப்படலம் பரவிய போது அவனுடைய எண்ணத் தொடர்பு கலைந்தது. அது என்ன புகை, எங்கிருந்து வருகிறது என்று யோசிக்கத் தொடங்கினான். சற்று நேரத்துக்கெல்லாம் மிகச் சொற்ப வெளிச்சமும் பரவியது. அந்த வெளிச்சத்தில் ஆதித்த கரிகாலரின் உடல் தெரிந்தது. கதவுகள் சாத்திய படியே இருந்தன. ஆகையால் விளக்கு வெளிச்சமாக இருக்க முடியாது. பின், என்ன வெளிச்சம்? நாலா பக்கமும் கூர்ந்து கவனிக்கலானான். புகையும் வெளிச்சமும் பக்கத்து வேட்டை மண்டபத்திலிருந்து வருகின்றன என்பதை அறிந்தான். வேட்டை மண்டபத்திலிருந்து புகை வருவதற்குக் காரணம் என்ன......? ஒருவேளை தீப் பிடித்திருக்குமோ? வேட்டை மண்டபத்தின் வழியாக, சுரங்கப் பாதையில் சென்றவர்கள், வேண்டுமென்றே தீ வைத்து விட்டுப் போயிருப்பார்களோ? அல்லது அவனும் மணிமேகலையும் வேட்டை மண்டபத்துக்குள் வந்தபோது கொண்டு வந்த விளக்கு இந்த விபத்துக்குக் காரணமா யிருக்குமோ......?

வர வரப் புகை அதிகமாயிற்று. உஷ்ணமும் அதிகரித்து வந்தது. சிறிது நேரத்துக் கெல்லாம் வேட்டை மண்டபத்துக்கும் அந்த அறைக்கும் இடையிலிருந்த மரப்பலகைச் சுவர்களின் இடுக்குகளின் வழியாகத் தீயின் ஜுவாலைகள் தெரியத் தொடங்கின. இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் அக்கினி பகவான் தமது ஜோதிமயமான கரங்களை நீட்டித் துழாவிக் கொண்டு, அந்த அறைக்குள்ளேயே பிரவேசித்து விட்டார்!

அக்கினி பகவானுடைய பிரவேசத்தைக் கொஞ்ச நேரம் வந்தியத்தேவன் கண் கொட்டா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். முதலில் அவனுக்கு ஒரு குதூகலமே ஏற்பட்டது. "நம்முடைய கவலைகளை யெல்லாம் அக்கினி பகவான் தீர்த்து வைத்துவிடப் போகிறார். ஆதித்த கரிகாலருக்கும் நமக்கும் ஒரே இடத்தில் தகனக்கிரியை நடந்து விடப் போகிறது!" என்று எண்ணினான். ஆனால் இது சிறிது நேரந்தான் நிலைத்திருந்தது. கரிகாலரைக் கொன்றவன் என்ற குற்றச் சாட்டுதலுடன் இந்த உலகைவிட்டுப் போவதற்கு அவன் இஷ்டப்பட வில்லை. சம்புவரையரும் அவருடைய மகனும் அப்படித்தான் வெளியிலே சொல்லுவார்கள். சிலர் அதை நம்பவும் செய்வார்கள். யார் நம்பினாலும் நம்பாவிட்டாலும் பொன்னியின் செல்வரும் குந்தவை தேவியும் அவ்வாறு நம்பக் கூடாது. நான் அந்தப் பயங்கரக் குற்றத்தைச் செய்யவில்லை என்று அவர்களுக்காகவேனும் நிரூபித்தாக வேண்டும். அது மட்டும் அல்ல; வீராதி வீரரான கரிகாலருடைய திருமேனிக்கு இறுதிச் சடங்கு இப்படி நடக்கும்படி விடலாமா? அவருடைய பெற்றோர்களும் உற்றார் உறவினர்களும் அவருடைய உயிரற்ற உடம்பையாவது பார்க்க வேண்டாமா......? ஆம், ஆம்! அவருடைய உயிரைக் காப்பாற்ற முடியாவிட்டாலும் அவருடைய உடம்பையாவது காப்பாற்ற வேண்டும். சக்கரவர்த்தித் திருமகனுக்குரிய மரியாதைகளுடனே இறுதிச் சடங்குகளைச் செய்வதற்கு வழி தேட வேண்டும்!...

அதுவரையில் வந்தியத்தேவன் தன்னை விடுவித்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்யவில்லை. அவனை எப்படிக் கட்டியிருக்கிறார்கள் என்றுகூடக் கவனிக்கவில்லை. இப்போது கவனித்தான். முதலில் அவனுடைய முன் கைகள் இரண்டையும் சேர்த்துக் கட்டி அந்தக் கயிற்றைக் கொண்டே அவன் உடம்பு முழுவதையும் கட்டிலின் காலோடு சேர்த்துக் கட்டியிருந்தார்கள். குனியவோ நிமிரவோ முடியவில்லை. அவனுடைய பலம் முழுவதும் செலுத்திக் கைக் கட்டுக்களை இழுத்தும் பல்லினால் கடித்தும் அவிழ்த்துக் கொள்ளப் பார்த்தான்; முடியவில்லை. அவ்வாறே உடம்பின் கட்டுக்களைத் திமிறி அவிழ்க்கப் பார்த்தான்; அதுவும் முடியவில்லை. ஆனால் அப்படி உடம்பைத் திமிறிய போது கட்டில் அசைந்தது. உடனே ஒரு யோசனை தோன்றியது. கட்டிலை இழுத்துக் கொண்டு வேட்டை மண்டபத்தின் இரகசிய வாசலை நோக்கிச் சென்றான். அது அவ்வளவு எளிதாக இல்லை. அங்குலம் அங்குலமாக நகர வேண்டியிருந்தது. கட்டிலை இழுத்த போதெல்லாம் அவன் உடம்பின் கட்டுக்கள் இறுகி வேதனை உண்டாக்கின. ஆயினும் சகித்துக் கொண்டு சென்றான். வாசலை நெருங்கியபோது, சாத்தியிருந்த கதவு இடுக்குகளின் வழியாகத் தீயின் ஜுவாலைகள் வந்து கொண்டிருந்தன. அந்த ஜுவாலைகளில் கையைக் கட்டி

# ஆபத்தான வழி!




[illegible] சமாதான அரசியல் மகாநாட்டில் இந்தியாவுக்கு ஸ்தானம் வழங்கும் விஷயமாக அமெரிக்காவின் போக்கு அபாயகரமானது என்று ஸ்ரீமதி எலினார் ரூஸ்வெல்ட் எச்சரித்திருக்கிறார்.

யிருந்த கயிற்றுக் கத்தையைப் பிடித்தான். கயிற்றில் தீப் பிடித்தது. அதே சமயத்தில் அவனுடைய கைகள் மீதும் நெருப்பு ஜுவாலைகள் வீசிச் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கின. ஆயினும் பொறுத்துக் கொண்டிருந்து, நெருப்புப் பிடித்துக் கைக்கட்டு அறுபட்டவுடனே உடம்பின் கட்டுக்களை அவசர அவசரமாக அவிழ்த்துக் கொண்டான். அவிழ்த்து முடிவதற்குள்ளே கட்டிலின் திரைச் சீலைகளிலே தீப் பிடித்துக் கொண்டது. அறையில் புகை சூழ்ந்தது. வந்தியத்தேவனுடைய உடம்பெல்லாம் பற்றி எரிவது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவனுடைய கண்களில் முதலில் எரிச்சல் கண்டது. பின்னர் கண்ணீர் ததும்பிற்று. கண் பார்வையே மங்கத் தொடங்கியது.

ஏது? ஏது? நானும் இளவரசரோடு இங்கேயே மாண்டு எரிந்து போக வேண்டியதுதான்! ஒரு விதத்தில் இதுவும் நல்லதுதானே! இளவரசரைக் காப்பாற்றத்தான் முடியவில்லை; அவரோடு சாகும் பேறாவது எனக்குக் கிடைக்கட்டும்!......சீச்சீ! இது என்ன யோசனை? நான் இறப்பது பற்றிக் கவலையில்லை. இளவரசருடைய உடல் இங்கு எரிந்து சாம்பரானால், எனக்கு அழியாத பழி அல்லவா ஏற்படும்? என்னை அறிந்தவர்கள் என்னுடைய நினைவு வரும்போதெல்லாம் என்னைச் சபிப்பார்களே? அத்தகைய பழிக்கு இடங் கொடுத்து நான் ஏன் சாக வேண்டும்? இளவரசரின் உடலை எப்படியேனும் வெளியே எடுத்துச் செல்வேன். அவருடைய பாட்டன் மலையமானிடம் ஒப்புவிப்பேன். இளவரசரை நான் கொல்லவில்லையென்றும், கொன்றவர்களைக் கண்டு பிடித்துக் கொடுப்பேனென்றும் உறுதி கூறுவேன். அவ்வாறு ஒப்புக்கொண்ட காரியத்தைச் செய்து முடித்த பிறகு நான் இறந்தால் பாதகம் இல்லை. அதுவரையில் எப்படியாவது இந்த உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்......

வந்தியத்தேவன் இப்போது கட்டுக்கள் அனைத்தையும் அவிழ்த்துக் கொண்டு விடுதலை பெற்றான். ஆனால் இது என்ன? கட்டில் தீப்பிடித்து எரிகிறதே! வெப்பம் தாங்க முடியவில்லையே? கண்களைத் திறக்கவே முடியவில்லையே? திறந்தாலும் புகை மண்டிக் கிடப்பதால் ஒன்றுமே தெரியவில்லையே?...... ஆயினும்

இளவரசரின் உடலைக் கண்டு பிடித்துத் தான் ஆகவேண்டும். வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்த வண்ணம் பரபரப்புடன் கையை நீட்டித் துளாவிக் கொண்டு அங்கு மிங்கும் அவசரமாக நகர்ந்து தேடினான். தேடிய நேரம் சில நிமிஷந்தான் இருக்கும்; ஆனால் பல யுகங்களைப் போல் அவனுக்குத் தோன்றியது. கடைசியாக, இளவரசரின் உடம்பு அவனுடைய கைகளுக்குத் தட்டுப்பட்டது. அந்த உடம்பைத் தூக்கி எடுத்துத் தோளின்மேல் போட்டுக் கொண்டான். அப்போது தான் வெளியே போவது எப்படி என்ற யோசனை உண்டாயிற்று. வேட்டை மண்டபத்துக்குள் போவது இயலாத காரியம்! ஆகா! அங்கே எத்தனையோ காலமாகச் சம்புவரையர்கள் சேகரித்து வைத்திருந்த மிருகங்களெல்லாம் இதற்குள் எரிந்து சாம்பராகப் போயிருக்கும்! ...... அந்த அறையிலிருந்து சாதாரணமாக எல்லாரும் வெளியே போவதற்குரிய பிரதான வாசலை அடைந்தான். ஒரு கையினால் கதவை இடித்துப் பார்த்தான்; காலினால் உதைத்துப் பார்த்தான்; உடம்பினால் கதவின் பேரில் மோதிக் கொண்டும் பார்த்தான். "தீ! தீ! கதவைத் திறவுங்கள்!" என்று சத்தம் போட்டுப் பார்த்தான். ஒன்றும் பயன்படவில்லை. சீச்சீ! என்ன அறிவீனம்! யாழ்க்களஞ்சியத்தின் வழியாகத்தான் ஏறிப் போக வேண்டும்! ஐயோ! அதற்குள் அதிலேயும் தீப்பிடிக்காமல் இருக்க வேண்டுமே? இத்தனை நேரம் வீண் பொழுது போக்கி விட்டோமே?

இப்போது அந்த அறை நல்லபிரகாசமாக இருந்தது. ஆனால் அந்தப் பிரகாசம் பயன்படாதபடி புகை மண்டிக் கிடந்தது. கண்ணைத் திறந்து பார்க்கவே முடியவில்லை. கஷ்டத்துடன் பார்த்தாலும் திக்குத் திசை தெரியவில்லை. யாழ்க்களஞ்சியம் இருக்குமிடத்தை உத்தேசமாகக் குறி வைத்துக் கொண்டு வந்தியத்தேவன் ஓடினான். வழியில் காலில் ஏதோ தட்டுப்பட்டது. அது 'டணார்' என்ற ஒலியை உண்டாக்கியது. ஆகா! அது தனக்கு நினைவு வந்தபோது பக்கத்தில் கிடந்து கைக்கு அகப்பட்ட திருகுமடல் உள்ள கத்தியாகவே இருக்க வேண்டும். அந்தக் கத்தியில் ஏதோ ஒரு மர்மம்

இருக்கிறது. அதை எடுத்துக் கொள்ள லாம். வழியில் யாராவது குறுக்கிட்டுத் தடுத்தால் ஒரு வேளை அந்தக் கத்தி உபயோகப் பட்டாலும் படும்......

இவ்விதம் எண்ணி அந்தக் கத்தியைக் குனிந்து எடுத்தான். அப்போது எரிந்த கட்டிலிருந்து தெறித்து வந்த ஜுவாலைத் தணல் ஒன்று அவன் தோள்மீது விழுந்தது. அதைத் தட்டி அப்பால் எறிந்துவிட்டு, ஓடிப்போய் யாழ்க் களஞ்சியத்தை அடைந்தான். இவ்வளவு நேரமும் அவன் தோள்மீது சாத்தியிருந்த கரிகாலருடைய தேகத்தை அவனுடைய ஒரு கை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவ்விதம் தோள் மீது சாத்திக் கொண்டே களஞ்சியத்தின் படிகளில் ஏறுவது அசாத்தியம். மேலே கதவு வேறே சாத்தியிருந்தது. எனவே கரிகாலருடைய தேகத்தைக் கீழே நிறுத்தி வைத்து விட்டு ஏறி மேலேயுள்ள கதவைத் திறந்தான். பாதிக் களஞ்சியத்தில் நின்று கொண்டு குனிந்து எடுத்தான். தெய்வமே! அதற்குள் தீ அக் களஞ்சியத்துக்கும் வந்து விட்டதே! இன்னும் சில நிமிஷம் தாமதித்திருந்தால், இந்த வழியும் இல்லாமல் போயிருக்கும்!......

வந்தியத்தேவன் மேல் மச்சில் கரிகாலருடைய உடலைத் தூக்கிப் போட்டு விட்டுத் தானும் ஏறி வந்து சேர்ந்த போது பாதிப் பிராணன் போனவனாக இருந்தான். இத்தனை நேரம் நெருப்பிலும் புகையிலும் வெந்து கொண்டிருந்தவன் மீது இப்போது குளிர்ந்த காற்று வீசிற்று. சிறிது நேரம் அங்கேயே கிடந்து இளைப்பாறலாமா என்று யோசித்தான். கூடாது, கூடாது! ஒரு நிமிஷங் கூடத் தாமதிக்கக் கூடாது! தீப் பிடித்த அக் கட்டிடம் எப்போது இடிந்து விழும் என்று யார் கண்டது? மறுபடியும் கரிகாலருடைய உடலை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு மேல் மச்சு வழியாகவே விரைந்து சென்றான். முன்னொரு தடவை போனது போலவே மாட கூடங்களைக் கடந்து சென்றான். ஆனால் முன்னே அவன் தனியாகப் போனபடியால் மாளிகை மச்சிலிருந்து கீழே இறங்கி நிலா முற்றத்தைக் கடந்து மதின் சுவர்மீது ஏறிக் குதித்துப்போவது சாத்தியமா யிருந்தது. இப்போது அது முடியுமா? அவன் மிகவும் களைத்துப் போயிருந்தது மின்றி ஆகித்த கரிகாலருடைய தேகத்தையும் அல்லவா தூக்கிப் போக வேண்டி யிருக்கிறது?

அப்போது அம் மாளிகைக்கு வெளியே நாலா பக்கங்களில் இருந்தும் எழுந்த பெரும் ஆரவாரக் கூச்சல் மீது அவன் கவனம் சென்றது. ஆகா! இது என்ன? மலையமானுடைய வீரர்கள் கோட்டையைத் தாக்கத் தொடங்கி விட்டார்கள் போலிருக்கிறதே! மூன் வாசல் கதவைத் தாக்கித் தகர்க்கிறார்கள் போலிருக்கிறதே! மதின் சுவர்மீது வீரர் பலர் ஏறிக் குதிக்கிறார்களே! இளவரசர் கொலையுண்டார் என்ற செய்தியை அறிந்துதான் மலையமான் கடம்பூர் மாளிகையைத் தாக்கக் கட்டளை யிட்டுவிட்டாரா? அப்படியானால், கரிகாலருடைய உடலைத் தூக்கிக் கொண்டு வரும் என்னைப் பார்த்தால் அவ் வீரர்கள் என்ன செய்வார்கள்? ஏன்? நான்தான் அவரைக் கொன்றதாக எண்ணிக் கொள்வார்கள்! என்னைச் சின்னா பின்னம் செய்து போடுவார்கள்! ஆகையால் நான் மிக ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். யார் கண்ணிலும் தென்படாமல் போக வேண்டும். மலையமான் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அவரிடம் அவருடைய பேரப்பிள்ளையின் திருமேனியை ஒப்படைத்து விட வேண்டும். அதற்குப் பிறகு நடப்பது நடந்து விட்டுப் போகட்டும்......!

பின்னர், வந்தியத்தேவன் மிக ஜாக்கிரதையாக மாட கூடங்களின் மறைவிலும் அவற்றின் நிழல் படர்ந்திருந்த இருளான இடங்களிலுமே பதுங்கிப் பதுங்கி நடந்து சென்றான்.

கடைசியாக, முதல் தடவை அங்கே வந்திருந்தபோது எவ்விடத்தில் நின்று கீழே நடந்த சிற்றரசர்களின் சதியாலோசனையைக் கவனித்தானோ, அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தான்.

கீழே எப்படி இறங்குவது என்பதாக யோசித்துக் கொண்டு அவன் அங்குமிங்கும் பார்த்தபோது, சுவர் ஓரத்தில் ஏணி ஒன்று வைக்கப்பட்டிருந்தது புலப்பட்டது. அதுமட்டும் அல்ல; ஏணியின் பக்கத்தில் மனித உருவம் ஒன்றும் தெரிந்தது. அது யாராயிருக்கும்? ஏணியை வைத்துக் கொண்டு யாருக்காகக் காத்திருக்கிறான்? தான் அந்த ஏணி வழியாகக் கீழே இறங்கினால் என்ன நேரும்? என்ன நேர்ந்தாலும் சரிதான்! அந்த ஏணியை உபயோகப்படுத்திக் கொண்டே தீர வேண்டும்! நல்ல வேளையாகக் கையிலே கத்தி ஒன்று இருக்கிறது! எது நேர்ந்தாலும் பார்த்துக் கொள்ளலாம்.

இந்தச் சமயத்தில் முன் வாசலுக்கு அருகில் ஆரவாரம் அதிகமாயிற்று. அது என்னவென்று தெரிந்து கொள்வதற்காகவோ, என்னவோ, ஏணிக்கு அருகில் நின்ற மனிதன் சற்று அப்பால் போனான்.

ரொம்ப நல்லதாய்ப் போயிற்று என்று எண்ணி வந்தியத் தேவன் ஏணி வழியாக விரைந்து கீழே இறங்கினான். அவன் கீழே இறங்கித் தரையில் காலை வைத்ததற்கும் போன மனிதன் திரும்பி வருவதற்கும் சரியாயிருந்தது.

"சாமி! இவ்வளவு நேரம் பண்ணி விட்டீர்களே!" என்று அம்மனிதன் கேட்டதும், அவன் இடும்பன்காரி என்பதை வந்தியத் தேவன் தெரிந்து கொண்டான். அதே கணத்தில் இடும்பன்காரி யாரை எதிர்பார்த்து அங்கே காத்துக் கொண்டிருந்தான் என்பதையும் ஒருவாறு ஊகித்துக் கொண்டான்.

இடும்பன்காரி அவன் அருகில் வந்ததும் வியப்புடன், "அடே! நீயா? யாரைத் தோளில் போட்டுக் கொண்டு வருகிறாய்?" என்று கேட்டான்.

"ஆம், அப்பா! நான்தான்! காளாமுகச் சாமியாரின் சீடன்! ரணபத்திர காளியின் பலியுடனே என்னை முன்னால் அனுப்பினார். அவர் பின்னால் வருகிறார். உன்னை இங்கேயே ஏணியுடன் இருக்கச் சொன்னார்! இதோ பார்! இந்தக் கத்தியை உனக்கு அடையாளங் காட்டச் சொன்னார்!" என்று வந்தியத் தேவன் கூறி, திருகு கத்தியைக் காட்டினான்.

இடும்பன்காரி சிறிது சந்தேகத்துடனேயே, "இத்தனை நாளாக நீ எனக்குச் சொல்லவில்லையே? போனால் போகட்டும். சாமியார் இவ்வளவு நேரம் பண்ணுகிறாரே! எப்படி இங்கிருந்து வெளியே போகப் போகிறோம்? திருக்கோவலூர் வீரர்கள் மாளிகையைச் சூழ்ந்து கொண்டு உள்ளே வரவும் தொடங்கி விட்டார்களே!" என்றான்.

"அதனால் என்ன? கூட்டம் அதிகமானால் நாம் தப்பிச் செல்வது சுலபம். அதெல்லாம் பெரிய சாமியாருக்குச் சொல்லித்தர வேண்டுமா? அவர் எப்படியோ வழி கண்டு பிடிப்பார். நீ இங்கேயே அவர் வரும் வரையில் காத்திரு! நான் போய் நந்தவனத்தில் இருப்பதாகச் சொல்லு!" என்றான் வந்தியத் தேவன்.

இடும்பன்காரியின் மறு மொழிக்குக் காத்திராமல் விடு விடுவென்று மேலே நடந்தான். இடும்பன்காரியின் கண்ணோட்டத்திலிருந்து மறைந்ததும், அந்த மாளிகையின் முன் வாசல் கோபுரத்தை நோக்கி நடந்தான். (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

## தாயும் குழந்தையும்

எங்கே யிருந்து வந்தாய், குழந்தாய்?—அதை
யாரும் அறிந்திடச் சொல் குழந்தாய்!
எங்கும் நிறைவெளியில் இருந்தேன்—சற்றே
இங்கும் இருக்க வந்தேன் அம்மா!

நீல மலர்போலும் விழிகள்—எங்கு
நீ தேடிப் பெற்றாயென் குழந்தாய்?
ஞாலம் இதற்கு வரும் வழியில்—வானம்
நன்கொடை தந்ததிவை அம்மா!

பூவின் அழகுனது முகத்தில்—என்றும்
பொலிந்திடும் காரணமென் குழந்தாய்?
தேவரும் கண்டறியாக் காட்சி—யானும்
தெளிவுறக் கண்டபலன் அம்மா!

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

மேற்கண்ட பாடலுக்கேற்ற வண்ண ஓவியமாக இந்த வாரத்துக் "கல்கி" இதழ் அட்டைச் சித்திரத்தைத் தீட்டியிருக்கிறார் நமது சித்திரக்காரர்.

# டாக்டர் திரிமூர்த்தி

டி. கே. சி.

○●○

வைத்தியத் தொழிலுக்கு அற்புதமான மனுஷர்களை உண்டாக்கக் கூடிய சக்தி இருக்கிறது. நம்முடைய அனுபவம். நெடுகிலும் மக்களுடைய அனுபவம்.

இந்த எண்சாண் உடம்பு எத்தனையோ வியாதிகளுக்கும் வேதனைகளுக்கும் உள்ளாகிறது. வைத்தியர்கள் அவைகளைத் தீர்க்கிறார்கள். தீர்த்த மாத்திரத்தில் அன்பு ஜெனித்து விடுகிறது நம்முடைய உள்ளத்தில். நோயைக் காணும் கண்ணுக்கு அந்த அன்பும் புலனாகி விடுகிறது. நம்மிடத்தில் பரிவு பாசம் எல்லாம் உண்டாய் விடுகிறது வைத்தியருக்கு.

இந்த உண்மை நன்றாய்த் துலங்கிவிடும் டாக்டர் திரிமூர்த்தியோடு சிறிது பழகினாலும்.

டாக்டர் திரிமூர்த்திக்கு எங்கே போனாலும் ஆப்த நண்பர்கள்தான். டில்லியிலிருந்து திருநெல்வேலி வரையும் நண்பர்கள்.

அவர்களுடைய வைத்தியத்துக்கு உள்ளானவர்கள் எத்தனை எத்தனையோ பேர். அவ்வளவு பேரும் திரிமூர்த்திக்கு உறவினர்களாய், நண்பர்களாய் ஆகிவிடுகிறார்கள்.

டாக்டர் உலகத்திலே முடிசூடா மன்னராய் இருந்தார்கள் திரிமூர்த்தி. மெடிக்கல் சங்கங்களுக்கு அவர்களில்லாமல் தீராது. சங்கங்களின் நிர்வாகப் பொறுப்பு எவ்வளவோ சிரமமானது. சகாக்களுக்கு யாதொரு தொந்தரவும் இல்லாமல், மனங் கொண்டு வேலைகளைப் பார்த்து விடுவார்கள். டில்லி என்ன, கல்கத்தா என்ன, பம்பாய் என்ன, மைசூர் என்ன எங்கேயும் சடைக்காமல் போய் விடுவார்கள். கடமை என்றால் கடமைதான். அதற்கு எதையும் அர்ப்பணம் பண்ண வேண்டும் என்பது திரிமூர்த்திக்கு இயற்கையாய் அமைந்த மனப்பாங்கு. இதை உணர்ந்த டாக்டர் உலகம், திரிமூர்த்தி அவர்களிடம் எவ்வளவோ பாரத்தைச் சுமத்தியது; அந்த பாரத்தையும் உத்ஸாகமாகத் தாங்கி நிர்வகித்தார்கள் டாக்டர் திரிமூர்த்தி.



டாக்டர் திரிமூர்த்தி

வைத்தியத் தொண்டு காரணமாகவே சையன்ஸ் பல துறைகளிலும் புகுந்து ஆர்வம் காட்டினார்கள்; புதிய உண்மைகளையும் எடுத்து உதவினார்கள்; சையன்ஸ் காங்கிரஸ்களுக்கு அரிய துணையாய் விளங்கினார்கள்.

எல்லாம் போக இங்கிலாந்து, ஸ்காட்லாந்து முதலிய தூர தேசங்களுக்குப் போய் அங்குள்ள மக்களோடு நெருங்கிப் பழக நேர்ந்ததால் ஒரு காரியம் சித்தித்தது திரிமூர்த்திக்கு.

நம்முடைய நாடு, நம்முடைய பண்பாடு, நம்முடைய கலை எல்லாவற்றின் மீதும் ஒரு ஆசையும் அனுபவமும் உண்டாயின. அவைகளில் மூழ்கித் திளைத்தார்கள்.

அப்படி அவர்கள் நுகர்ந்த இன்பம் இவ்வளவு அவ்வளவல்ல. அதை, வந்தவர் போனவர்களிடமெல்லாம் அவர்கள் கைகளை ஆட்டி வெளியிட்டு மகிழும் காட்சி இன்னும் என் மனத்தில் நிற்கிறது!

* * *

நுங்கம்பாக்கத்திலுள்ள அவர்கள் வீட்டுக்குப் போவோமானால் அழகான துளசி மடம் நிற்கும்; வீட்டுக்குள் ஒரு கோயிலே அமைந்திருக்கும். கோயில் என்றால், மூர்த்தி, விமானம், திருவிளக்கு, தட்டு முட்டுகள் சகல அங்கங்களுமே நித்ய பூஜைக்காகப் பிரகாசித்துக் காத்துக் கொண்டிருக்கும். இந்த அழகான பண்பாட்டைப் போற்றி அனுபவிப்பதற்கு ஸ்காட்லாந்து வரையுமே போக வேண்டுமோ என்று எண்ணத் தோன்றும்.

நம்முடைய பண்பாட்டுக்கெல்லாம் ஆதாரமாய் நிற்பது நம்முடைய தமிழ் பாஷைதான் என்று அழுத்தமாகச் சொல்லுவார்கள்.

கம்பரை அனுபவிக்கிற தென்றால் அது தனி. ஏதோ அலங்காரத்துக்காகக் கற்கிற காரியம் அல்ல திரிமூர்த்திக்கு. உள்ளத்துக்குள் சென்று உள்ளொளி பெருக்கும் கலை கம்பரது கலை. கவியின் நுட்பத்தைச் சாவகாசமாகத் துருவி ஆராய்ந்து அனுபவிப்பார்கள்.

சென்னையில் ராஜாஜி ஹாலில் நடந்த கம்பர் விழா ஒன்றில் டாக்டர் திரிமூர்த்தி அவர்கள் பேசினார்கள்:

"எனக்கு வயசாகி விட்டது. தளர்ச்சி அப்போதைக்கப்போது நேருவது இயல்புதான். மருந்துகளின் பண்புகளைப் பார்த்துத் தான் இருக்கிறேன். ஆனால் தளர்ச்சிக்கான, என்னுடைய 'பிரிஸ்கிருப்ஷன்' இதுதான். கம்பர் பாடல் மாதிரி துணை செய்யக் கூடியது வேறு ஒன்றும் இல்லை. வயசும் அனுபவமும் தந்த உண்மை இது."

கம்பருக்கும், தமிழுக்கும் ரொம்பவும் வேண்டிய டாக்டர் திரிமூர்த்தி இங்கே இல்லை இப்போது.

# மதுரையின் மகிமை



மதுரையை நினைக்கும் பொழுது மீனாக்ஷி அம்மன் கோவில் மனதில் தோன்றுகிறது. அதேபோல் மோட்டார் தொழில், போக்கு வரத்து டி. வி. எஸ். ஸ்தாபனத்தை நினைப் பூட்டுகிறது. 1912 முதல் டி. வி. எஸ். ஸ்தாபனம் இடைவிடாமல் சேவை புரிகிறது.

*துணை ஸ்தாபனங்கள் :*

**ஸதர்ன் ரோட்வேஸ் லிமிடெட், மதுரை,**
ரஸ்தா போக்குவரத்தில் தனிப்பெரும் ஸ்தாபனம்.

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட், சென்னை,**
ஜெனரல் மோட்டார்ஸ் அங்கீகாரம் பெற்ற மோட்டார் விநியோகஸ்தர்கள்.

**மதராஸ் ஆட்டோ ஸர்விஸ் லிமிடெட், பெங்களூர் - சென்னை,**
மிகச் சிறந்த மோட்டார் உறுப்பு விநியோகஸ்தர்கள்.

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், புதுக்கோட்டை,**
பழைய டயர்களை புதுப்பிக்கும் ஸ்தாபனம்.



## டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்

*ஸ்தாபிதம் :* 1912 *தலைமை ஆபீஸ் :* மதுரை

*கிளைகள் :* திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, திருநெல்வேலி, சேலம்

## மதுரை மாநகரில்

## மற்றுமோர் மாபெரும் கட்டிடம்



மதுரையில் டி. வி. சுந்தரம் ஐயங்கார் அண்டு சன்ஸ், லிட். மற்றும் பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட். காரியாலயங்களின் புதிய கட்டிடம் மேலே காணப்படுகிறது. இதன் நிருமிப்பில் முழுதும் சங்கர் பிராண்ட் போர்ட்லண்ட் ஸிமெண்ட் உபயோகித்து உறுதியான இந்த அழகிய மாளிகையை அமைத்துள்ளனர். எல்லாவித கட்டிட வேலை களுக்கும் "சங்கர் பிராண்ட்" எனக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.

**சங்கர் பிராண்ட்**




**போர்ட்லண்ட் ஸிமெண்ட்**

## இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட்.

*தொழிற்சாலை:* சங்கர் நகர், திருநெல்வேலி ஜில்லா

*ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:* 11-12, செகண்ட் லைன் பீச், மதராஸ் - 1

*போன் நெம்பர்கள்:* 4731 - 55197 - 55195

டி. வி. எஸ். ஸ்தாபனங்களில் ஒன்றான ஸதர்ன் ரோட்வேஸ் லிமிடெட் இந்தியாவிலேயே மிகப் பெரிய, தனிப்பெரும் ரஸ்தா போக்குவரத்து கம்பெனி. பிரயாணிகள், சாமான்கள் ரஸ்தா போக்குவரத்திலும் முதன்மையான கம்பெனி யாகும்.

தென்னிந்தியாவில் மற்ற ரஸ்தா போக்குவரத்து ஸ்தாபனங்களது விகிதாசாரப்படி, டி. வி. எஸ். ஸுக்குத்தான் அதிகமான புது வண்டிகள் இருக்கின்றன. டி. வி. எஸ். ஒன்று தான் சாமான்கள் போக்குவரத்து சர்விஸை குறித்த கால அட்டவணைப்படி நேரம் தவறாமல் நடத்தி வருகிறது.

## அவர்கள் சர்விஸைப் பற்றிய சில புள்ளி விவரங்கள்:

## அவர்களைப் பற்றிய சிற்சில உண்மைகள்

**பஸ்கள்:**

மொத்த பஸ்கள் 305

ஓடும் பஸ் மார்க்கங்கள் 100

மார்க்கங்களின் மொத்த மைலேஜ் 2,725

ஆண்டு ஒன்றுக்கு பஸ் ஓடும் மைல்கள் 130 லக்ஷம்

வருஷந்தோறும் பிரயாணம் செய்பவர்களின் எண்ணிக்கை 350 லக்ஷம்

போக்குவரத்தின் விஸ்தீரணம்......15,146 சதுர மைல்கள்

பயன்படுத்திக் கொள்ளும் ஜனத்தொகை 71 லக்ஷம்

உட்கார்ந்து போக சராசரி 35 சீட்டுகள்

**லாரிகள்:**

மொத்த லாரிகள் 38

ஓடும் மார்க்கங்கள் 21

போக்குவரத்துப் பிரதேசம்:—சென்னைக்குத் தெற்கேயுள்ள எல்லா ஜில்லாக்களிலும் திருவாங்கூர்—கொச்சி, மைசூர், ராஜ்யங்களிலும்.

மார்க்கங்களின் மைலேஜ் 3,500

வருஷந்தோறும் லாரி ஓடும் மைல்கள் 22 லட்சம்

வருஷந்தோறும் ஏற்றிச் செல்லும் சாமான்களின் எடை............48,000 டன்கள்

**பொதுவாக:**

ஊழியர்களின் மொத்த எண்ணிக்கை......2,150

வருஷந்தோறும் பட்டுவாடா ஆகும் சம்பளமும்கூலியும் ரூ.24லட்சம்

# ஸதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்

மதுரை



## குறித்த நேர சேவை



# இதோ! ஷாலிமார்
# சூப்பர்லாக்
## ஸிந்தடிக்
## பினிஷ்

பலவித உயர்ந்த ரக சிங்கார
வேலைப்பாடுகளுக்கு

**வெளிப் பூச்சு மேலும்
உட் பூச்சு வேலைகள் செய்ய**

ஷாலிமார் சூப்பர்லாக் ஸிந்தடிக் பினிஷுகள் சிறந்த சாயப் பொருள்களோடு, நிரூபிக்கப்பட்ட, நீடித்து உழைக்கக்கூடிய ரஸாயன வஜ்ரப் பொருள்கள் கலந்து நன்கு தயாரிக்கப்படுகின்றன. அவை சாதாரண எனாமல்களிலிருந்து வேறுபட்டவை. கீழ்க்கண்ட அனுகூலங்கள் உள்ளவை.

* முழு பளபளப்பும் இனிய தன்மையும்
* நேர்த்தியான, நீடித்து நிற்கும் வர்ணங்கள்
* உறுதியான அமைப்பு
* அதிகப்படியான உழைப்பு, நிரந்தரமான பிரகாசம்
* வேலை செய்ய இலகுவானது, நன்றாகப் படியக்கூடியது
* சீதோஷ்ண நிலையால் பாதிக்கப்படாதவை
* காற்றில் உள்ள அசுத்தங்களால் பாதிக்கப்படாதவை
* 38 விதமான ஸ்டாண்டர்ட் நிறங்கள்

¼, ½ ஓ. கம். காலன் டின்களிலும், 1 இம்பீரியல் காலன் டின்களிலும் 3, 5 இம்பீரியல் காலன் ட்ரம்களிலும் பாக் செய்யப்பட்டது.



உயர்ந்த ரக அமைப்பும் நீடிப்பும் உள்ள
பினிஷ் தேவையானால்

**அடித்தாற்** போல் சொல்லுங்கள்






ஷாலிமார் சூப்பர்லாக்
ஸிந்தடிக் பினிஷ்கள்

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.**
POST BOX 136, MADRAS 1
Importers & Distributors for Ceylon :
LEWIS BROWN & CO. LTD. POST BOX 85, COLOMBO

ஸ்தாபகர்:

ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்கார்



# டி.வி.எஸ். ஸ்தாபனத்தின்



மதுரை ஜில்லாவைச் சேர்ந்த ஒரு குக்கிராமத்தில் ஒரு வீட்டில் குழந்தை பிறந்தது.

குழந்தை பிறந்ததும், "சரியான நேரம் தெரியவில்லையே! யாரிடமாவது சரியான நேரம் தெரிவிக்கக்கூடிய கடியாரமிருக்கிறதா!" என்று அந்த வீட்டிலுள்ளவர்கள் ஒருவரை யொருவர் விசாரித்தார்கள்.

எல்லாரும் 'பேந்த'ப் 'பேந்த' விழித்தார்கள். அந்தச் சமயத்தில் "ஏன், இப்படிக் கவலைப்படுகிறீர்கள்! மணி இப்பொழுது 2–52" என்றார் அந்த வழியே சென்ற ஒருவர்.

"உங்களுக்கு எப்படித் தெரிந்தது!" என்று கேட்டார் அவர்களில் ஒருவர்.

அந்த வழிப்போக்கர் எதிரில் வந்த டி. வி. எஸ். பஸ்ஸைக் காண்பித்தார்.

அவ்வளவுதான்! அந்நேரமே பேரும் நேரம் சரியானது என்று நம்பி விட்டார்கள்!

இப்படிப் பொதுஜன நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு ஸ்தாபனம் தமிழ் நாட்டில் சென்ற நாற்பதாண்டுகளில் வளர்ந்து, இன்று இந்தியாவிலேயே ஈடும் இணையும் இல்லாத ஸ்தாபனமாக இருக்கிறது என்றால், அதன் வளர்ச்சியின் சரித்திரத்தை அறிவதில் யாருக்குமே ஆவலை யெழுப்புவது இயல்பே யல்லவா!



**1912**-ம் ஆண்டில் இந்த ஸ்தாபனம் பிறந்தது. அப்போது ஒரு சில பஸ்களை மணிக்கு 15 மைல் வேகத்தில் விட்டார்கள். இப்போது 290 மூதல்தரமான வேகமான பஸ்களைத் தினம் 40,000 மைலுக்கு ஓட்டுகிறார்கள்.

நேரம் தவறாமை, மரியாதை, சிறந்த சேவை ஆகிய கொள்கைகளே இந்த டி. வி. எஸ். ஸ்தாபனத்தின் அடிப்படையாக இருந்து வந்துள்ளன. இவை லாபகரமாக இருந்துள்ளன. போக்குவரத்துத் தொழிலின் தரம் பரவலாக உயருவதற்கும் இவை துணை புரிந்திருக்கின்றன.

சென்னை ராஜ்யத்தில் 1912-ம் ஆண்டில் மதுரை — காரைக்குடி — தேவகோட்டை மார்க்கத்தில்தான் முதல் பஸ் ஓடியது. அது டி. வி. சுந்தரம் அய்யங்காருக்குச் சொந்தம். சங்கிலிப் பிணைப்புடன் கூடிய டென்னிஸ்-காமர் ரகத்தைச் சேர்ந்த பழைய காலத்து வண்டியாகும்.

மற்ற பஸ்கள் பிரயாணிகள் நிறைந்தால் தான் ஓடும். டி. வி. எஸ். பஸ்கள் மட்டும் நேரம் தவறாமல் கணக்குப்படி செல்லும். "ரூட்" வரி, பெர்மிட், கமிஷனைப் பூர்த்தி செய்து அனுப்புவது போன்ற நிர்ப்பந்தங்கள் அப்பொழுது இல்லை. எனவே பலர் பஸ் ஓட்டினார்கள். இதில் நல்ல லாபம் இருப்பதாக நினைத்து மேலும் பலர் வந்தனர். மதுரைக்கும் தேவகோட்டைக்கும் 54 மைல். இதற்கு டி. வி. எஸ். கட்டணம் மூன்று ரூபாய். காரைக்குடி-தேவகோட்டை 12 மைலுக்குச் சத்தம் 12 அணா. 1913-ல் வந்த புது பஸ் சொந்தக்காரர்கள் கட்டணத்தைக் குறைக்கவே அங்கிருந்து டி. வி. எஸ். வாபஸ் ஆயிற்று.

1913 நவம்பர் 12-ம் தேதி முதல் 1919 அக்டோபர் வரை தஞ்சாவூர்-புதுக்கோட்டை மார்க்கத்தில் ஏகபோக வசதியுடன் வேறு ஒரு பங்காளியுடன் சேர்ந்து டி. வி. எஸ். பஸ்களை விட்டனர். இது 36 மைல். மைலுக்கு மூக்காலணா என்று கட்டணத்தைப் புதுக்கோட்டை தர்பார் நிர்ணயித்தது. பெட்ரோல் விலை காலன் ரூ 0-10-6. "தென் இந்திய மோட்டார் சர்வீஸ்" என்பது கம்பெனியின் பெயர்.

இரண்டு ஆண்டுகள் கழித்து வண்டிகளை ஆறு மாதத்துக்கு ஒரு முறை தணிக்கை பார்க்க வேண்டும் என்று ஜில்லா போலீஸ் சூப்பிரெண்டு வற்புறுத்தினர். இதற்குக் கட்டணம் ரூ. 10. இது அவரது சொந்த வருமானமாகக் கருதப் பட்டது. ஒரு 'டிரிப்'புக்குக் கட்டணம் ரூ. 2. டயர் ஒட்டையாகும் உபத்திரவம் இல்லை. ஆனால் சங்கிலித் தகராறு அடிக்கடி உண்டு. அந்தக் காலத்தில் பிரயாணிகளுக்கு இலவசமாகப் போஜனம் செய்விப்பது வழக்கம். அப்பொழுது முழுச் சாப்பாடு 0-2-6 தான். எனவே 'ஸ்பேர்' பாகங்கள் எல்லாம் பஸ்ஸிலே போவது வழக்கம். கொஞ்ச காலம் கழித்து வண்டி நேரத் திட்ட மொன்றைப் புதுக்கோட்டை தர்பார் பிரசுரித்தனர். ஆனால் அதில் குறிப்பிட்ட நேரத்துக்குப் பிறகு வண்டி வரக் கூடாது என்றுதான் இருந்தது. அப்பொழுதுகூட டி. வி. எஸ். ஸுக்குச் சொந்த நேரத் திட்டம், கட்டணப் பட்டியல், நிலையான வாடிக்கை ஆகியவெல்லாம் இருந்து கொண்டிருந்தது.

சாலைகள் பழுது பட்டிருந்தால் வண்டி போகக் கூடாதென்பார்கள். ஏதாவது கொடுத்தால்தான் போகலாம். இந்த ரோட்டில் போக்கு வரத்துத் தடைப்படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக, ரோடு கண்ட்ராக்ட் வேலையையும் டி. வி. எஸ். மேற்கொண்டனர். 1919 வரை இது நடந்தது.

1919-க்குப் பிறகு மோட்டார் வண்டிகளின் உறுப்புக்களையும், பயர்ஸ்டோன் டயர்களையும் அமெரிக்காவிலிருந்து நேரடியாக இறக்குமதி செய்வதில் டி. வி. எஸ். முனைந்தனர். சம்பளம் டிரைவருக்கு ரூ. 50; கண்டக்டருக்கு ரூ. 20; கிளீனருக்கு ரூ. 12. ஒரு டிரிப்புக்கு பேட்டா 2 அணா. வண்டி ஓட்டுவது தவிர வேறு எந்த வேலையையும் டிரைவர்கள் செய்ய மாட்டார்கள். இப்பொழுது சென்னை ராஜ்யத்தில் நிலைமை மாறி விட்டது. 30,000 வண்டிகளுக்கு 70 ஆயிரம் டிரைவர்கள் இருக்கிறார்கள். அப்பொழுதெல்லாம் சம்பளமில்லாமல் 6 மாத காலத்துக்குக் கண்டக்டரும் கிளீனரும் வேலை பார்க்க வேண்டும்.

காலப் போக்கை அனுசரித்து போர்ட், கிராபோர்ட் டிரக் உறுப்புக்களை டி. வி. எஸ். இறக்குமதி செய்தனர். 1923-ம் ஆண்டு வரை இது



கிடைத்தது. அதே சமயத்தில் 1916-ம் ஆண்டிலிருந்து டயர் இறக்குமதி, வியாபாரம் பலப்பட்டு வந்தது. அப்பொழுதுதான் ஷெவர்லே மோட்டார்கள் விற்பனைக்கு வந்தன. அவைகளை விற்க டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ் அமைக்கப் பட்டது. 1929 அக்டோபரில் ஜெனரல் மோட்டார்ஸின் நேரடிப் பிரதிநிதித்வம் கிடைத்தது.

1939-ம் ஆண்டில் யுத்தம் வந்தது. பஸ் கம்பெனிகளிடையே தகாத போட்டி ஏற்பட்டு மைலுக்கு இரண்டு தம்படி கட்டணம் என்ற நிலைமை வரவே பல பஸ்கள் நின்று விட்டன. அவ்வாண்டு இயற்றப் பட்ட மோட்டார் சட்டத்தின் கெடுபிடி அவர்களுடைய வாபஸைத் துரிதப் படுத்தியது.



ஸ்ரீ டி. எஸ். ராஜம்

1939 ஜூனில் பஸ் விடும் தொழிலுக்கு டி. வி. எஸ். திரும்பினர். கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்தது. இன்று 313 பஸ்களும் 54 லாரிகளும் ஓட்டுகின்றனர். சில பழைய உரிமைகள் வாங்கப்பட்டன. சிலர் பங்காளிகளாகச் சேர்த்துக் கொள்ளப் பட்டனர். யுத்த காலத்தில் உறுப்புக்கள் கிடைப்பது சிரமமாக இருக்கவே மதுரையில் நவீன கருவிகளுடன் கூடியதாக நூர்து ஏக்கர் நிலப் பரப்பில் ஒரு முதல்தரமான சர்வீஸ் ஸ்டேஷன் அமைக்கப் பட்டது. சென்ற பத்து ஆண்டுகளில் 12 கோடி மைல் பஸ் யாத்திரைக்கு இதுதான் வசதி செய்து தந்து, ரூ 8 கோடி வருமானத்தையும் சம்பாதித்துத் தந்தது.

யுத்தத்தின் போது பெட்ரோல் தட்டுப்பாடு ஏற்பட்டது. டி. வி. சுந்தரம் அய்யங்காரின் புதல்வர் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணா பல ஆராய்ச்சிகளை நடத்தி, 'காஸ் பிளாண்டை' (கரியால் ஓடும் சாதனத்தை) உருவாக்கினார். அது யுத்தகால அவசியமாக இருந்தது. சமாதான காலச் சிக்கன வசதியாக அமைந்து விட்டது. இதுவரை 12,000 காஸ்பிளாண்டுகள் செலவாகி யுள்ளன.

ரப்பர் பற்றுக் குறையைச் சமாளிக்க டயரைச் செப்பனிடும் தொழிற்சாலை யொன்றைப் புதுக்கோட்டையில் டி. வி. எஸ். நிறுவினர். இதன் மூலம் டயர் செலவு ரொம்பவும் குறைந்தது. ஷெவர்லே, போர்ட் விசிறி பெல்டுகளும் அங்கு தயாரிக்கப் படுகின்றன. இப்பொழுது அந்நிய செலாவணி இதன் மூலமாக ரொம்பவும் மிச்சப் படுகிறது.

இந்த ஸ்தாபனத்தின் பெயர் "சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்" என்பதாகும்.

இப்பொழுது வரையறுக்கப்பட்ட பொறுப்புக்களுடன் டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ் லிமிடெட் ஒரு கம்பெனியாக இயங்குகிறது. தலைமை ஆபீஸ் மதுரையிலிருக்கிறது. திருநெல்வேலி, புதுக்கோட்டை, திருச்சி, சேலத்தில் கிளைகள் இருக்கின்றன. இந்த ஸ்தாபனத்துக்குச் சொந்தமான கட்டிடங்கள் மதிப்பு ரூ. 50 லட்சம். மதுரை சர்வீஸ் ஸ்டேஷனில் 84,000 சதுர அடி இடம் இருக்கிறது. இதில் மோட்டார் வண்டிகளைப் பராமரித்துப் பழுது பார்ப்பதற்கான மிக நவீன இயந்திரங்கள் இருக்கின்றன.

"ஸதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்" என்ற பெயருடன் இந்த ஸ்தாபனம் 290 பஸ்களையும் 40 லாரிகளையும் ஓட்டுகிறது. 23 கிடங்குகளும், 105 லாரி ஸ்டேஷன்களும் இருக்கின்றன. ஒவ்வொரு கிடங்கும் பழுது பார்க்கும் வசதியுள்ள சிறிய சர்வீஸ் ஸ்டேஷனாக இயங்குகிறது.

சென்னை ஆட்டோ-சர்வீஸ் லிமிடெட், சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட் என்ற பெயர்களுடன் இரண்டு சகோதர ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஜெனரல் மோட்டார்ஸ் உறுப்புக்களை மூர்திய ஸ்தாபனம் 1929 முதல் விநியோகித்து வருகிறது. அதற்குப் பெங்களூரில் ஒரு கிளை உண்டு. இந்த ரக உறுப்புக்களை விற்கும் ஸ்தாபனங்களில் இந்தியாவிலேயே இதுதான் மிகப் பெரியது.

டி. வி. எஸ் புதிதாக விற்பனை உரிமை பெற்றுள்ள பிரதேசத்தில், ஜெனரல் மோட்டார்ஸ் சரக்குகளின் விற்பனையைச் சுந்தரம் மோட்டார்ஸ் கவனித்துக் கொள்கிறது. அமெரிக்க சாதனங்களும் கருவிகளும் கொண்ட நவீன சர்வீஸ் ஸ்டேஷன் அதற்குச் சென்னையில் இருக்கிறது. மதுரை, சென்னை சர்வீஸ் ஸ்டேஷன்கள் ஒவ்வொன்றிலும் நடக்கும் அலுவலின் அளவுக்கு இந்தியாவில் வேறு எங்கும் நடப்பதில்லை.

டி. வி. எஸ். சென்னை, ஆட்டோ சர்வீஸ், சுந்தரம் மோட்டார்ஸ், சுந்தரம் இண்டஸ்டிரீஸ் ஆகிய நான்கு ஸ்தாபனங்களிலுமாகச் சேர்ந்து, 4 கோடி மக்கள் வசிக்கும் லக்ஷம் சதுர மைல் விஸ்தீரணத்துக்குச் சேவை புரிகின்றன. இந்த விஸ்தீரணத்திலும் ஜனத் தொகையிலும் மூன்றிலொரு பங்கு டி. வி. எஸ். பஸ், லாரி போக்குவரத்து சர்வீஸின் சேவையைப் பெறுகிறது.

அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் மோட்டார்களையும் கருவிகளையும் தயாரிக்கும் பிரபல ஸ்தாபனங்களின் ஒத்துழைப்பைப் பெற்று அந்தத் தொடர்பின் மூலம் முழுப் பயிற்சி பெற்று வரும்படியாக தமது இளைஞர்களை அங்கு அனுப்பி வைப்பது கம்பெனியின் கொள்கைகளில் ஒன்று. 1931-ம் ஆண்டில் தமது 21-வது வயதில் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணா (டி. வி. சுந்தரம் அய்யங்காரின் புதல்வர்) முதலில் அமெரிக்கா சென்றார். 47-49ல் மீண்டும் சென்று பழைய தொடர்புகளை அவர் புதுப்பித்துக் கொண்டார். 1935-ல் மானேஜிங் டைரக்டர் டி. எஸ். ராஜம் கடல் கடந்த பிரதிநிதிகளின் மகாநாட்டுக்குச் சென்று விநியோக வழி வகைகளைக் கற்றறிந்தார். 1947-ம் ஆண்டில் தமது 71-வது பிராயத்தில் பலருடைய அழைப்புகளுக்கிணங்க ஸ்ரீ டி. வி.சுந்தரம் அய்யங்கார் அவர்களே அமெரிக்கா சென்று வந்தார். அவரது மற்றொரு புதல்வர் ஸ்ரீ டி. எஸ். ஸ்ரீனிவாசனும், பேரப் பிள்ளைகளான ஆர். ரத்னமும், எஸ். விஜயராகவனும் 47,49-ல் அமெரிக்காவில் மோட்டார் சர்வீஸில் புது முறைகளைப் பயின்றனர்.

டி. வி. எஸ்.ஸின் 40 வருஷ சேவையில் டி. வி. எஸ். சிப்பந்திகள் விசுவாசத்துடனும் கஷ்டப்பட்டும் உழைத்து வந்திருக்கிறார்கள். அவர்களுடைய நலனில் போதிய கவனம் செலுத்தப்பட்டது. மதுரையில் ஒரு முழு நேர வைத்திய அதிகாரியின் கீழ்ச் சிறந்த சாதனங்களுடன் கூடிய ஆஸ்பத்திரி இருக்கிறது. எல்லாக் கிளைகளிலும் வைத்திய அதிகாரிகள் இருக்கிறார்கள். நீடித்த வியாதிக்குச் சிகிச்சை பெற டி. வி. எஸ். சிப்பந்திகளுக்கு வெளி ஆஸ்பத்திரிகளில் இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு சிப்பந்தியின் தேக நிலையும் பரிசோதிக்கப் பட்டு, முன் ஜாக்கிரதையாகத் தடுப்பு முறைகள் பின்பற்றப் படுகின்றன.

லாப நோக்கமில்லாத கூட்டுறவுப் பண்டகசாலை, பாங்கி ஆகியவற்றைச் சிப்பந்திகளே நடத்திக் கொள்கிறார்கள். காண்டீனில் தின் பண்டங்கள் லாபமின்றி அடக்க விலையில் விற்கப் படுகின்றன. மேற்பார்வை, செலவு, நஷ்டம் ஆகியவற்றைக் கம்பெனியே ஏற்றுக் கொள்ளுகிறது.

ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக் கொள்ள விளையாட்டுகள், சஞ்சிகைகள், தொழில் நுணுக்கப் புத்தகங்கள் இருக்கின்றன. டி. வி. எஸ். கால் பந்து கோஷ்டிக்குப் பல வெற்றிகள் கிடைத்துள்ளன.

கோஷ்டி கோஷ்டியாகச் சிப்பந்திகளைப் பிரித்து, இந்தியாவின் பிற பகுதிகளைப் பார்த்து வர ஏற்பாடு செய்து வந்த வழக்கம் யுத்தத்துக்கு முந்திய ஆண்டுகளில் இருந்தது. சர்வீசானவர்கள் கம்பெனிச் செலவில் தமது விடுமுறையை வருஷா வருஷம் குற்றாலத்தில் கழிக்கிறார்கள். சம்பள கிரேடுகள், பிராவிடெண்ட் நிதி, கிராடியுடி முதலியவை ஆரம்ப காலத்திலிருந்தே இருந்து வருகின்றன. போனஸ் உண்டு. டயர்களின் பாதுகாப்பு, வண்டிகளின் நிலைமை, நேரம் தவறாமை ஆகியவற்றிற்காக ஸ்பெஷல் போனஸ் உண்டு. கம்பெனியில் பத்து வருஷ சர்வீஸ் ஆனவுடன் ஒரு ஞாபகச் சின்னம் ஒவ்வொரு சிப்பந்திக்கும் வழங்கப்படுகிறது.

* * *

இவ்வளவு சிறப்பாக முன்னேறியிருப்பதற்கு முக்கிய காரணம் டி. வி. சுந்தரமய்யங்காரின் சளியா உழைப்பும் அவருடைய புதல்வர்களின் ஒத்துழைப்புமே. இதைப் பற்றி மதுரையில் சென்றமாதம் 31உ நிகழ்ந்த புதுக் கட்டிடத் திறப்பு விழாவில் ராஜாஜி பேசியபோது: "இந்தக் காலத்தில் பல குடும்பங்களில் பிள்ளைகள் தங்கள் தகப்பனாரின் தொழிலை விட்டு விட்டு வேறு வேலைகளுக்குப் போய் விடுவதைப் பார்க்கிறோம். வியாபாரம் என்பது ஆகாய விமானத்தைப் போல் பறந்து கொண்டேயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அது தொந்தரவு கொடுக்க ஆரம்பித்து விடும். ஸ்ரீ சுந்தரம் அய்யங்கார் இதை உணர்ந்திருக்கிறார். அவருடைய பிள்ளைகளும் மிகவும் நிறைமையாகத் தகப்பனாரின் தொழிலைக் கற்றுக் கொண்டு விட்டார்கள். இந்தமாதிரி பிள்ளைகளை எப்படிப் பெறுவது என்ற ரகசியம் நமக்குத் தெரிந்தால் தேவலை!" என்று ஹாஸ்யச் சுவை தோன்றக் கூறினார்.



ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணா

மேலும் "பணக்காரக் குடும்பங்களில் பிள்ளைகள் கெட்ட வழிகளில் இறங்கித் தகப்பனார் சம்பாதித்ததை அழிப்பதைத்தான் சாதாரணமாகப் பார்க்கிறோம். அம்மாதிரி குடும்பங்களுக்கு ஸ்ரீ சுந்தரம் அய்யங்காருக்கு வாய்த்த பிள்ளைகளைப் போல் கிடைத்தால் ஒரு கஷ்டமும் இராது!" என்று கூறினார்.

இப்படி ராஜாஜி டி. வி. சுந்தரமய்யங்காரின் புதல்வர்களான டி. எஸ். ராஜம், டி. எஸ். கிருஷ்ணா டி. எஸ். சந்தானம், டி. எஸ். சீனிவாசன் ஆகிய நான்கு புதல்வர்களையும் மனமாரப் பாராட்டினார். இதைப் படித்தபோது திருவள்ளுவரின் கீழ்க்கண்ட அருமையான குறள்,

மகன்தந்தைக் காற்றும்
உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும்
சொல் !

ஞாபகம் யாவருக்கும் வரும்! இந்த விழாவுக்குத் தலைமை வகித்த ஸர். ஸி. பி. ராமசாமி அய்யரவர்கள், "தொழில் அதிபர்களை இரு வகையாகப் பிரிக்கலாம். பணம் சம்பாதிப்பதற்கான வழியாகத் தொழிலைக் கருதுபவர் ஒருவகை. தொழிலிலேயே முழு ஆர்வமும்கொண்டு கிடைத்த வருமானத்தை மீண்டும் அதிலேயே முதலீடு செய்துஅதை வளர்த்து அதை நாட்டுக்கே முக்கியமானதாகக் கருதுபவர்கள் மற்றொரு பிரிவினர். ஸ்ரீ சுந்தரமய்யங்காரும் அவருடன் உழைப்பவர்களும் இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவர்கள்" என்று கூறிப் பாராட்டினார்.

தேச நலனில் சிரத்தை கொண்டுள்ள முதலாளிகளுக்கு ஓர் முன்மாதிரியாக விளங்குகிறார் ஸ்ரீமான் டி. வி. சுந்தரமய்யங்கார்.

நாற்பது ஆண்டுகளுக்கு மேல் சளியாமல் உழைத்து ஸ்தாபனத்தை வளர்த்து ஒரு நிலைக்கு (ஒரு என்பதற்குத் தமிழில் ஒப்பற்ற என்ற பொருள்) கொண்டு வந்த பிறகு சுந்தரமய்யங்கார் அவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஓரளவு பற்றுதல் விட்டு விலகியிருக்கிறார்கள். இதுவும் பாரதப் பண்பாட்டுக்கு ஏற்ப அமைந்திருக்கிறது. 'வானப் பிரஸ்தாசிரமம் நடத்துகிறார்கள்' என்று ராஜாஜி கூறினார்கள்.

இப்படி அருந்தொண்டு செய்த சுந்தரமய்யங்கார் அவர்கள் வாழ்க! அவர் ஸ்தாபனம் நீடூழி வாழ்க!

மதுரை டி. வி. எஸ். புதிய கட்டிடத்தில் நவீன முறை



# மதுரையம்பதியில் மகத்தான கட்டிடம்



நாற்பதாண்டுகளின் சலியா உழைப்பினால் இன்று இந்தியாவிலேயே இணையற்றதோர் ஸ்தாபனமாக விளங்குகிறது, டி. வி. சுந்தரமய்யங்கார் அண்டு சன்ஸ் லிமிடெட். இந்த ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயக் கட்டிடம், ஏராளப் பொருட் செலவில் இந்தியப் பண்பாட்டுக்கு ஒப்ப எழுப்பப் பட்டிருக்கிறது. தமிழ் வளர்த்த மதுரையில் தொழில் வளர்க்கும் இந்த ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயம் அமைந்திருப்பதுபற்றித் தமிழர்கள் யாவருமே பெருமைப்பட வேண்டும்!

இந்த அற்புதக் கட்டிடத்தின் திறப்பு விழா, சென்ற ஆகஸ்ட் மாதம் 31-ந் தேதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் பிரார்த்தனை கீதத்துடன் ஆரம்பமாயிற்று. நமது அருமைத் தலைவர் ராஜாஜி திறந்து வைத்தார். அந்த இனிய வைபவத்தில் தந்தைக்குப் பக்கபலமாக நின்று ஸ்தாபன வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்ட ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்கள் இந்தப் புதுத் தலைமைக் காரியாலய வானமாளிகையைக்குறித்துச் சில ருசிகரமான தகவல்கள் கொடுத்தார். அவர் வாய்மொழியாகவே கீழே கொடுக்கிறோம்:

"இந்தக் கட்டிடம் இன்று இவ்வளவு அழகாக எழும்பியிருக்கிறது என்றால் இதற்குக் காரணம், 1912 முதல் தொடர்ந்து உழைத்து வந்ததே. இந்தியாவிலேயே முதன் முதலில் என் தந்தையார் (ஸ்ரீ டி. வி. சுந்தரமய்யங்கார் அவர்கள்) தான் பஸ் ஓட்டும் தொழிலை மதுரை ஜில்லாவில் ஆரம்பித்தார். ஆரம்பிக்கும் போதே, குறித்த நேரத்தில் வருவது, மரியாதையாக நடந்து கொள்வது, நியாயமாக நடப்பது என்ற கொள்கைகளை அஸ்திவாரமிட்டு விட்டே என் தந்தை ஸ்தாபனத்தின் வளர்ச்சியில் கவனம் செலுத்தலானார். இன்று இந்தியாவிலேயே கால அட்டவணை போட்டு அதன்படி லாரிகளை ஓட்டி வருபவர்கள் எங்களைத் தவிர வேறு யாருமில்லை. பள்ளிக்கூட நாட்களிலிருந்தே என் சகோதரர்களும் நானும் எங்களுடைய தகப்பனாரின் தொழிலில் இருந்து வந்திருக்கிறோம். அது எங்களுக்கு நல்ல பயிற்சியாய் இருந்தது. எங்களுடைய வாடிக்கைக்காரர்களை நேராகத் தெரிந்து கொள்ளவும் அது பெரிதும் உதவி செய்தது. இந்த நாற்பது வருஷங்களில் எவ்வளவோ கஷ்டப்பட்டு உழைத்திருக்கிறோம்; கடும் போட்டியைச் சமாளித்திருக்கிறோம். இந்தக் காலத்தில் எங்கள் ஊழியர்கள் யாவரும் விசுவாசத்துடன் ஒத்துழைத்ததற்கு நாங்கள் இச்சமயம் நன்றி செலுத்திக் கொள்ளுகிறோம்.

இப் புதுக் கட்டிடம், இப்பகுதியிலுள்ள மிகப் பெரிய கட்டிடங்களில் ஒன்றாகும். நவீன சாதனங்களுடனும் பல சௌகரியங்களுடனும் இது அமைக்கப்பட்டுள்ளது. ஒரு நிலவறையும், நான்கு மாடிகளும் கொண்டது இக் கட்டிடம். சுமார் 18,000 சதுர அடி பரப்புள்ளது. நிலவறையில் தஸ்தாவேஜுகள் வைக்க வசதிகள் செய்யப்பட்டுள்ளன. காட்சி - அறைகள் (Show-Rooms) முதல் மாடியில் அமைக்கப் பட்டுள்ளன. காரியாலயங்கள் அதற்கு மேலுள்ள மாடிகளில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்தக் கட்டிடத்தின் அஸ்திவாரம் முப்பது அடி ஆழத்துக்குப் போடப்பட்டிருக்கிறது. அதன்மேல் பலமான 'காங்கிரீட்' கட்டடமாக இது எழுப்பப் பட்டிருப்பதை நீங்களே பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்!

சுமார் 560 டன் இரும்பு உருக்கும் 1800 டன் சிமெண்டும் உபயோகிக்கப் பட்டுள்ளது. கட்டிடத் திட்டம் வகுக்கையில் கூடுமான வரை தூண்களின் எண்ணிக்கையைக் குறைக்க முற்பட்டிருக்கிறோம். அவசியமாக இருக்க வேண்டிய தூண்களும் இடையூறாக இராமல், விசாலமான தளப் பரப்பைக் கொடுக்கும் வகையிலேயே எழுப்பப் பட்டிருக்கின்றன. ஆக மொத்தம் 60 காங்கிரீட் தூண்களே இவ்வளவு பெரிய கட்டிடத்தில் இருக்கின்றன. அவற்றினிடையே சுமார் 500 சதுர அடி தளப் பரப்பு இருக்கின்றது. நிலவறையில் ஈரம் ஏற்படுவதைத் தடுக்கப் போதிய அளவு கவனமும் செலுத்தியிருக்கிறோம்.

கிடைத்த அளவு ஆஸ்லர் (செருகு) கற்களை



ஸ்ரீ டி. எஸ். சந்தானம்



உபயோகித் திருக்கிறோம். முதல் மாடி பூரா வும் ஆஷ்லர் கற்கள் பதித்திருக்கிறோம். மற்ற மாடிகளில் தூண்களின் மேற் புறத்திலும் வாசலிலும் அழகு படப் பதித்திருக்கிறோம்.

தளங்களில் எல்லாம் சலவைக் கற்கள் பதிக்கப்பட்டிருக்கின்றன.

கட்டடம் முழுவதிலும் பிரத்தியேகமாகப் பர்மாவிலிருந்து கொண்டு வரப்பட்ட தேக்கு மரத்தால் செய்த கதவுகளும், மறைப்புகளும் அலங்கரிக்கின்றன. பிரயாணிகள், சாமான்கள், சிப்பந்திகள் ஆகியோரை ஒரு மாடியிலிருந்து மற்றோர் மாடிக்கு ஏற்றிச் செல்லவும் இறக்கி அழைத்துச் செல்லவும் 'லிப்டுகள்' அமைக்கப் பட்டுள்ளன. கட்டடத்தின் முக்கியமான அறைகளில் 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டுள்ளன. சுகாதார வசதிக்கான நவீன ஏற்பாடுகள் செய்யப்பட் டுள்ளன.

ஒரு மாடியிலிருந்து மற்றோர் மாடியி லிருப் போரிடம், இருந்த இடத்திலிருந்து பேசவும்,



ஸ்ரீ டி. எஸ். சீனிவாசன்

ஒரு அறையிலிருந்து மற்றோர் அறையி லிருப்பவரிடம் பேசவும் "உள் டெலிபோன்கள்" ஏற்பாடு செய்யப் பட்டுள்ளன.

சௌகரியம், உபயோகம் இவற்றை முக்கியமாகக் கருதியே காரியாலய மேஜை, நாற்காலிகள் செய்யப் பட்டுள்ளன."

இந்தக் கட்டடத்தை இவ்வளவு அழகாகக் கட்டி முடிக்க முதன் முதலில் அமைப்பை வகுத்துக் கொடுத்தவர் கட்டடக்கலை நிபுணர் ஸ்ரீ ஆர். ஆர். சர்மா, ஏ. ஆர். ஐ., பி.ஏ.ஏ.ஐ. ஏ. அவர்கள். அவ்வமைப்புப்படி கட்டிக் கொடுத்தவர் கண்டிராக்டர் ஸ்ரீ ஆர். செபஸ்டியன். இவர்கள் இருவருக்கும் விழாத் தலைவர் ஸர் ஸி. பி ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தங்கப் பதக்கத்தைப் பரிசளித்தார்.

புதுக் கட்டடத்தில் கிரகப் பிரவேசம் செய்துள்ள இக் கம்பெனியார் இன்னும் பல துறைகளில் ஈடுபட்டு மேலும் மேலும் நாட்டின் தொழில் வளத்தைப் பெருக்குவார்களாக!



முன் பக்க முழுத் தோற்றம்

○●○



பிரதான வாசலின் அம்சங்கள்

பிரமுகரான பஸ், டாக்ஸி சொந்தக்காரர் கூறுகிறார்:

# 'எங்களுக்குப் பெட்ரோல் செலவு குறைவு, பழுதுபார்க்கும் செலவுகளும் குறைவே'

## காரணம்

# முழுச்செயல் திறனுள்ள மோபிலாயில் தான்



ஸர்தார் பலவந்த் சிங் கிரேவால் கல்கத்தாவில் ஒரு பிரபல பஸ், டாக்ஸி சொந்தக்காரர்.

எனது கம்பெனியில் ஐந்து பஸ்கள், ஒரு டிரக் மற்றும் ஐந்து டாக்ஸிகள் ஓட்டுகிறோம். எங்கள் என்ஜின்களுக்கு எப்பொழுதும் மோபிலாயிலைத்தான் கேட்டு வாங்கி உபயோகித்து வருகிறோம். முழுச்செயல் திறனுள்ள மோபிலாயில் உபயோகிக்கத் தொடங்கியதிலிருந்து எங்களுக்குப் பெட்ரோல் செலவும் குறைகிறது, அடிக்கடி பழுது பார்க்கவேண்டிய அவசியமும் இருப்பதில்லை. மோபிலாயிலையே கண்டிப்பாக உபயோகிக்கக்கருதி, ரஸ்தா மத்தியில் அவசியம் ஏற்பட்டாலும் அதையே நிரப்ப, ஒரு டின் அதிகப்படியாக எடுத்துச் செல்வது எப்பொழுதும் நலம்.

*Balwant Singh Grewal*

உங்களுக்கு ஒரு யதார்த்தமான புத்திமதி இதோ! ஸர்தார் பலவந்த் சிங் பெங்கால் பஸ் ஸிண்டிகேட்டின் என்ஜினியரிங் ஆலோசகராவர். கல்கத்தா டாக்ஸி சங்கத்தின் உபதலைவருமாவர். மோபிலாயில் உபயோகிப்பதினால் வண்டிகளின் செலவினங்கள் நிச்சயமாகக் குறைகிறதென்று அவர் அனுபவத்தில் அறிந்திருக்கிறார்— நீங்களும் அவ்விதமே அனுபவப்படுவீர்கள்! இன்றே முழுச்செயல் திறனுள்ள மோபிலாயில் நிரப்பிக்கொள்ளுங்கள்—பறக்கும் செங்குதிரையின் சின்னம் காணும் இடங்களில்தான் அது கிடைக்கும். மோபிலாயில் ஒரு ஹெவி டியூடி மோட்டார் எண்ணெ, ரெகுலர் அல்லது பிரீமியம் டைப் எண்ணெகளைக்காட்டிலும் அதிகமான பாதுகாப்புத் தருகிறது. இந்த எண்ணெ மூன்று வழிகளில் உங்கள் பணத்தை மிச்சப்படுத்தும்:




**தேய்மானத்தைக் குறைக்கிறது**—எல்லா சீதோஷ்ண நிலைமைகளிலும் ஒழுங்காக லூப்ரிகேட் செய்கிறது.

**ரிப்பேர் செலவுகளைக் குறைக்கிறது**—என்ஜினில் ஹானிகரமான கரி படியவிடுவதில்லை.

**பெட்ரோல் செலவைக் குறைக்கிறது**—உலோக பாகங்களை ஆஸிட்டுகள் அரித்து விடாமல் தடுத்து, சக்தி வீண் போகாமல் பாதுகாக்கிறது.

# முழுச்செயல் திறனுள்ள மோபிலாயில்

அதிகமான மோட்டார்க்காரர்கள் உலகில் வேறெந்த மோட்டார் ஆயிலையும்விட இதையே விசேஷமாக உபயோகித்து வருகின்றனர்

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி (கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)




விமலாவுக்கும் வெங்கடேசனுக்கும் வருகிற ஆவணியில் விவாகம் செய்வதாக நிச்சயம் செய்திருந்தார்கள். இது எனக்கு வியப்பாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது.

விமலா என்னுடைய உயிர்த் தோழி. வெங்கடேசன் அவளுடைய சொந்த அத்தான். அத்தை மகனைக் கல்யாணம் செய்து கொள்வதை யாரேனும் தவறு என்று சொல்லுவார்களா! ஆனால் அவர்களிருவரும் தம்பதிகளாகவதற்குப் பொருத்தமுடையவர்கள்தானா என்பதுதான் எனக்கேற்பட்ட ஆச்சரியத்திற்கே காரணம்.

விமலாவும் வெங்கடேசனும் சிறு குழந்தைப் பருவத்திலிருந்து ஒன்று சேர்ந்து பழகியவர்கள். அவர்களைப் பழகியவர்கள் என்பதைவிட, சண்டை போட்டுக் கொண்டே இருப்பவர்கள் என்று சொல்லுவதுதான் பொருத்தமாகும். அவர்கள் இருவரும் ஒற்றுமையாக இருந்து நான் பார்த்ததே இல்லை. நெடுநாட்களாக ஒரே தெருவில் நாங்கள் வசித்து வந்ததால் இது எனக்குத் தெரிந்த விஷயம். அவர்கள் இருவரும் மன ஒற்றுமையோடு ஒரு நாளாவது பேசி விளையாடியதை நான் பார்த்ததே இல்லை.

விமலா ஏதாவது தின் பண்டம் வைத்திருந்தால் அதைத் தட்டிப் பறித்து எடுத்துக் கொண்டு அவளையும் நன்றாக அடித்துவிட்டு ஓடிவிடுவான் வெங்கடேசன். அந்தச் சமயம் அவனை வாயில் வந்தபடியெல்லாம் திட்டுவாள் விமலா. அவனைப் பழி வாங்குவதற்கு அடையாளமாக அவனுடைய புத்தகங்களை அவனுக்குத் தெரியாமல் எடுத்துக் கிழித்தெறிந்து விடுவாள் விமலா.

இதெல்லாம் குழந்தைப் பருவத்தில் நடந்தது. அவளுக்கு இப்பொழுது வயது பதினெட்டு. அவனுக்குச் சுமார் இருபத்தைந்தாவது இருக்கும். அப்பொழுதுதான் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு உத்தியோகம் தேடுவதில் முனைந்திருந்தான். விமலாவும் அப்பொழுதுதான் ஹைஸ்கூல் படிப்பைப் பூர்த்தி செய்திருந்தாள். அடிக்கடி வெங்கடேசன் விமலாவின் வீட்டிற்கு வருவான். வரும்போதே அவளோடு சண்டை போடவேண்டுமென்ற நோக்கத்தோடு வருகிறவன் போல்தான் தோன்றும். அவன் எதைச் சொன்னாலும் அதற்கு விமலாவிடம் எதிர்ப்பு இருக்கும். அவள் எது சொன்னாலும் அதற்கொரு எதிர் பாணம் விட வெங்கடேசன் தயங்குவதேயில்லை. அற்ப விஷயங்களுக்கெல்லாம் அவர்களுக்குள் பெரிய தர்க்கம் ஏற்பட்டுப் பெரிய சண்டையில் வந்து முடியும்.

விமலா எதையும் என்னிடம் மறைத்து வைத்ததில்லை. அவளுக்கு ஏற்பட்டுள்ள துயரத்தையோ சந்தோஷத்தையோ என்னிடம் சொன்னால்தான் அவளுடைய மனதுக்கு ஆறுதல் ஏற்படும். அவள் என்னை வந்து சந்திக்கும்போது தனக்கும் வெங்கடேசனுக்கு நிச்சயிக்கப்பட்டிருக்கும் விவாகத்தைப் பற்றி ஏற்பட்டுள்ள மனத் துயரை என்னிடம் சொல்லாமலிருக்க மாட்டாள் என்று நினைத்தேன். வரும்போதே அவள் "விஜயா..." என்று கணீரென்று என்னைக் கூப்பிட்ட ஒலியே அவ்வளவுநேரமும் நான் மனசில் நிர்மாணித்திருந்த எண்ணத்தை மாற்றி விட்டது. அவள் மிகவும் குதூகலத்தோடுதான் வந்தாள். என்றுமில்லாத மலர்ச்சி அன்று அவள் முகத்தில் ஏற்பட்டிருந்தது. அவளுக்கும் வெங்கடேசனுக்கும் நிச்சயிக்கப்பட்டிருந்த கல்யாணம் ஏதாவது காரணத்தால் தடைப்பட்டிருக்க வேண்டும். அதனால் தான் அவளுக்கு அவ்வளவு சந்தோஷமேற்பட்டிருக்கிறது என்று நினைத்தேன். என் மனப் பதட்டத்தை அதற்கு மேலும் தாங்கிக் கொள்ள எனக்கு இஷ்டமில்லை. "உனக்கும் உன் அத்தானுக்கும் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறார்களாமே!" என்றேன்.

அவள் புன்முறுவலுடன், "ஆமாம்! இது நான் பெண்ணாக என்று பூமியில் பிறந்தேனோ அப்பொழுதே நிச்சயம் செய்யப்பட்ட விஷயம்" என்று கூறினாள்.

இதைச் சொல்லும்போது அவள் முகத்தில் தெளிந்த புன்னகைப் பிரகாசம் எனக்கு வியப்புக்கு மேல் வியப்பை உண்டாக்கியது. எல்லாம் என் மன அபிப்பிராயத்திற்கு நேர்மாறாக இருக்

தது. அவளுக்கு அப்பொழுது ஏற்பட்ட முக ஒளியி லிருந்து அவள் மனசையும் அறிந்து கொண்டேன். அவள் பூரணமான சம்மதத்தோடு, மன ஆசை யோடும் ஆவலோடும் தான் தன் அத்தானை மணம் புரிந்து கொள்ள ஒப்புக் கொண்டிருக்கிறாள் என்று நன்கு விளங்கியது.

"விமலா! உன்னை நான் ஒன்று கேட்கிறேன். மறைக்காமல் சொல்லு" என்று ஆரம்பித்தேன்.

"உன்னிடம் நான் எதை மறைத்திருக்கிறேன். இத்தனை நாள் வரையில்......!" என்றாள் விமலா வியப்போடு என்னைப் பார்த்துக் கொண்டே.

"சரி! உன்னுடைய அத்தானைக் கல்யாணம் செய்து கொள்வதில் உன்னுடைய உண்மையான அபிப்பிராயம் என்ன......!" என்றேன்.

"என்னுடைய அபிப்பிராயம் என்ன வென்று கேட்டால்......!"

"உனக்கு அவரைக் கல்யாணம் செய்து கொள் வதில் சம்மதந்தானா......!"

"சம்மதந்தான். ஏன்! சம்மதமில்லாமலா இவ் வளவு தூரம் நிச்சயம் செய்வார்கள்......!" என் றாள் பளிச்சென்று.

மேலும் அவளைக் கிளறிக் கேட்க நான் சிறிது தயங்கினேன். இருந்தாலும் என் மனசிலுள்ள ஐயம் நீங்கும் வரையில் என்னால் பேசாமல் இருக்க முடியுமா......! "இல்லை......உன் அத்தா னைக் கல்யாணம் செய்து கொள்வதில் பூரண சம்மதமிருக்கிறதா அல்லது, உன் தாயார், தகப்ப னார் அபிப்பிராயத்திற்காக......" என்று சொல் லித் தயங்கிய படியே அவளுடைய முகத்தைப் பார்த்தேன்.

"என் தாயார் தகப்பனாருக்காக இல்லை. எனக்கே அதில் பூரண மனச் சம்மதம்தான்" என்றாள் விமலா.

"நீயும் உன் அத்தானும் ஒரு நாளும் ஒற்றுமை யாக இருந்ததில்லையே! உனக்கும் அவருக்கும் எப்பொழுதும் சண்டை தானே...!" என்றேன்.

"விஜயா, நீ இன்னும் அதில் அனுபவப்பட வில்லை. உண்மையான காதலுள்ளவர்கள் ஒருவரை ஒருவர் வேதனைக்கும் சோதனைக்கும் உள்ளாக்கத் தயங்குவதே இல்லை. அதில் அவர் களுக்கு ஓர் ஆனந்தம். காதலுக்காகத் திறக்கப் பட்ட இருதயம் வேதனையையும் சோதனையையும் வரவேற்கச் சித்தமாய் இருக்க வேண்டும். ஒரு மனப்பட்ட தம்பதிகளின் வாழ்க்கை கடிகாரத் தின் பெரிய முள்ளை அனுசரித்துச் சின்ன முள் நகருவது போன்ற உப்புச் சப்பற்ற சக்கை வாழ்க்கையாகத்தான் முடியும். இந்த வாழ்க் கையைவிட எவ்வளவோ சுகமும் இன்பமும் நிறைந்தது, தள்ள முடியாத அந்தரங்கக் காத லோடு மனம் வேறுபட்ட தம்பதிகளின் வாழ்க்கை..." என்றாள் விமலா.

விமலாவும் நானும் காதலைப் பற்றி இவ்வளவு நாளும் பேசியதே இல்லை. பேசுவதற்கு எவ் வளவோ சந்தர்ப்பம் இருந்தது. பேச வேண்டு மென்ற ஆவலும் இருந்தது. ஆனால் பருவ வயதை யடைந்த பெண்களாகிய எங்களுக்கு அதைப் பற்றிப் பேசுவதற்குச் சிறிது அச்சமும் கூச்சமும் இருந்தது. அதைப் பற்றிப் பேசச் சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. விமலா தனக்குத் தெரிந்த மனோதர்ம ரீதியில் காதலைப் பற்றிப் பேசி விட் டாள். அவள் என்னை அனுபவமில்லாதவள் என்று வேறு சுட்டிக் காட்டி யிருக்கிறாள்.

நேற்று வரையில் என்னைப் போல அவளும் அனுபவம் இல்லாதவள் என்று நான் நினைத்திருக் கலாம். ஆனால் இன்று என்னைவிட அவள் அனுபவமடைந்தவள் என்பதை என்னால் மறுக்க முடியுமா! அவள் அனுபவம் எவ்வளவு நீண்டதோ குறுகியதோ அவள் ஒருவனைக் காதலிக்கிறாள். அது அவளுக்கேற்பட்ட ஒரு அனுபவம்தானே...!

ஒவ்வொன்றிலும் மனவேற்றுமை உள்ளவர் களிடையே எப்படிக் காதல் உதயமாகும்! அப்படி ஒரு காதல் உதயமானால் அது மன ஒற்றுமையின் அடிப்படையில் வளர்ந்த காதலாகுமா! இது முக வசீகரத்திலோ, உடலழகிலோ உதயமான காத லாகத் தானே சொல்ல முடியும்! காகிதப் பூவைத் தொடுத்து மேலே ஜிகினாச் சுற்றிய பூமாலையும் உண்மையான பூமாலையைப் போலத் தான் தோன்றும். காதலின் அடிப்படை மன ஒற்றுமை தானே! அது இல்லாத தாம்பத்திய வாழ்க்கை எப்படிச் சோபிக்கும்! என்றைக்காவது இந்த மன வேற்றுமை பெரியதாகி வாழ்விலேயே பெரும் சோதனையையும் துயரத்தையும் கொடுக் கலாமல்லவா! விமலாவின் வார்த்தைகளை மறுத்து இதையெல்லாம் நான் சொல்லவில்லை.

அந்த ஆவணி மாசத்தில் விமலாவுக்கும் அவ ளுடைய அத்தான் வெங்கடேசனுக்கும் சிறப்பாக விவாகம் நடந்தேறியது.



விமலாவுக்கு விவாகமான வருஷத்திலேயே தை மாதம் எனக்கும் விவாகமாகி விட்டது. கல்யாணம் செய்து கொண்ட பிறகும் அவளுடைய அத்தான் வெங்கடேசனுக்கும் அவளுக்கும் மன ஒற்றுமை ஏற்படவில்லை என்பதை நான் பல சமயம் உணர்ந்து கொண்டேன். ஆனால் அதை எல்லாம் விமலா என்னிடம் காட்டிக் கொண்டதே இல்லை. அவள் கணவனோடு குடித்தனம் நடத்திக் கொண்டுதானிருந்தாள். கல்யாணமான பிறகு அவளை நான் முன்போல் அதிகமாகச் சந்திப்பதில்லை. அவளை அடிக்கடி சந்திப்பதற்கும் வாய்ப்பு ஏற்படுவதில்லை. தெய்வாதீனமாக அவளைப் பார்த்த சந்தர்ப்பங்களில் அவள் மிகவும் சந்தோஷம் நிறைந்தவளாகத்தான் காணப்பட்டாள்.

ஒருநாள் நான் தற்செயலாக அவளைப் பார்ப்பதற்காக அவள் வீட்டிற்குச் சென்றபோது அவளுக்கும் அவள் கணவனுக்கும் பாலில் டிகாக்ஷனைக் கலப்பது நல்லதா, டிகாக்ஷனைப் பாலோடு கலப்பது நல்லதா என்கிற விஷயத்தைப்பற்றித் தீவிரமான தர்க்கம் நடந்து கொண்டிருந்தது. இச் சமயத்தில் நான் குறுக்கிடுவது ரசக் குறைவு என்று திரும்பி வந்துவிட்டேன். ஆனால் அவர்கள் சிறு குழந்தைப் பருவத்திலிருந்து எத்தகைய மன வேற்றுமையுடன் ஒவ்வொன்றைப் பற்றியும் தர்க்கம் செய்து சண்டை போட்டுக் கொண்டார்களோ அதைப் போலவேதான் இன்று தம்பதிகளான பிறகும் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டேன்.

விமலா என்னுடைய கல்யாணத்திற்கு வருவாள் என்று நினைத்தேன். அவள் வரவில்லை. அவள் வராத காரணம் எதுவாக இருக்குமென்பதைப் பற்றியும் சிந்தித்துத் தெரிந்து கொண்டேன். அவளுடைய கணவரின் குணம்தான் எனக்குத் தெரியுமே......! கல்யாணம் கழிந்து நான்கு நாட்கள் சென்றபின், நான் என் கணவரோடு ஊருக்குக் கிளம்பும்போதுதான் அவள் என்னைப் பார்க்க வந்தாள். அவளைத் தனிமையில் அழைத்துக் கொண்டுபோய் "நீ ஏன் என் கல்யாணத்துக்கு வரவில்லை!" என்று கேட்டேன்.

"இது உனக்குத் தெரியாதா......!" என்றாள் அவள் சிரித்துக் கொண்டே.

"உன் புருஷர் உன்னைப் போகக்கூடாது என்று ஏதாவது......" என்றேன்.

"ஆமாம்! அந்தப் பழக்கம் போய்விடுமா! நானும் அன்று முழுவதும் அவரோடு சண்டை போட்டுத்தான் பார்த்தேன்" என்றாள், முகத்தில் மலர்ந்த சிரிப்பின் பிரகாசம் குன்றாமல்.

"உன் நிலைமையை அறிந்த பிறகு உன்மீது வருத்தப்படுவதற்குக் காரணம் என்ன இருக்கிறது! இன்றைக்காவது வந்தாயே! அதுதான் எனக்குப் பெரிய சந்தோஷம்!" என்றேன்.

"எனக்கேற்றபடி எனக்கொரு புருஷர் கிடைத்தார். உனக்கேற்றபடி உனக்கொரு புருஷர் கிடைத்தார். இதுதான் எனக்கு மிகுந்த சந்தோஷம்......" என்றாள் விமலா.

அவள் புருஷனை அவளுக்கேற்ற புருஷனாக அவள் சொல்லிக் கொள்வதை நான் மறுக்கவில்லை. ஆனால் என் கணவர் எனக்கேற்றவர் என்று அவரைப் பார்த்தவுடனேயே நிச்சயித்து அவள் எப்படிக் கூறினாள் என்பதுதான் எனக்கு வியப்பாக இருந்தது.

"உன் கணவர் உனக்கு ஏற்றவர் என்று சொன்னால் நீ அவருடன் குழந்தைப் பருவத்திலிருந்து பழகி அறிந்துகொண்ட உண்மை. ஆனால் என் கணவர் எனக்கு ஏற்றவர் என்று நீ அதற்குள் எப்படிச் சொல்லிவிட முடியும்! எங்கிருந்தோ வந்தார். என்னைப் பார்த்தார். மனத்துக்குப் பிடித்திருந்தது. கல்யாணமும் நடந்தது. ஆனால் கைப்பிடித்த கணவரை நமக்கு ஏற்றவராகச் செய்து கொண்டுதானே யாக வேண்டும்! அவரைப் பற்றி அவர் குணம் எப்படிப்பட்டதென்று இன்னும் எனக்குத் தெரியாது. ஆனால் அவர் குணத்திற்குத் தகுந்தாற்போல் இணங்கி நடப்பதுதானே நமது கடமை......!" என்றேன்.

"நீ எப்படி அதை உணர்ந்திருக்கிறாயோ அப்படியேதான் அவரும் அதை உணர்ந்திருப்பாரென்று நினைக்கிறேன். உன் மனசைப் போல்தான் அவர் மனசும் இருக்கும் போலிருக்கிறது. நீ அவருக்கு எப்படி இணங்கி நடக்க விருப்பப்படுகிறாயோ அப்படியேதான் அவரும் உனக்கு இணங்கி நடக்க விரும்புவார் போலிருக்கிறது, கடிகாரத்தின் சின்ன முள் பெரிய முள்போல."

"இவ்வளவு தூரம் சொல்கிறாயே! இதையெல்லாம் நீ எப்படித் தெரிந்து கொண்டாய்!" என்றேன் நான்.

"நான் வந்தபோது நீ அவருடைய பெட்டியில் சாமான்களை வைத்துச் சரி செய்து கொண்டிருந்தாய். அவர் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார். நீ என்னைக் கண்டதும் அவைகளை அப்படியே போட்டு விட்டு ஓடி வந்து விட்டாய். அவர் சிரித்துக் கொண்டே மற்றவைகளையும் எடுத்துப் பெட்டியில் வைக்க ஆரம்பித்தார். இதிலிருந்து நான் தெரிந்துகொண்டேன்" என்றாள் விமலா.



நான் அவளுக்கு எவ்விதமான பதிலும் சொல்லவில்லை. எனக்குத் தகுந்த கணவர் எனக்குக் கிடைத்திருப்பதை எண்ணி என் மனசில் சிறிது பெருமையும் மமதையும் ஏற்பட்டதென்று கூடச் சொல்லலாம். அவருக்கு என்மீது அளவற்ற ஆசை யிருந்தது. அவர் எனக்குப் பிரியமானதைச் செய்ய எப்பொழுதும் சித்தமாக இருந்தார். அவருக்குக் கட்டுப்பட்டவளாக நான் இருக்க எந்த அளவு விரும்பினேனோ அந்த அளவு எனக்குக் கட்டுப்பட்டவராக அவரும் இருக்கப் பிரியப்பட்டார். இது எனக்குச் சந்தோஷந்தான். இது என் வாழ்க்கையைப் பரிமளிக்கச் செய்து உன்னதமானதாக்கும் என்று எண்ணினேன். இப்படியே அவர் எந்நாளும் இருந்து என் வாழ்க்கையைச் சிறப்புடையதாகச் செய்ய வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தேன். விமலா எனக்கு இப்படிப்பட்ட கணவர் கிடைத்ததில் சிறிது பொறாமை யடைவாள் என்று நினைத்தேன். ஆனால் அவள் முகக்குறிப்பிலிருந்தும் பேச்சிலிருந்தும் அவள் அதில் சந்தோஷமடைந்தாள் என்றுதான் தோன்றியது. அவள் தன் கணவனைப் பற்றிக் குறையோ, தாழ்வான உணர்ச்சியோ அடைந்தாலல்லவா எனக்குக் கிடைத்த பாக்கியத்தைப் பற்றிப் பொறாமைப் படச் சந்தர்ப்பம் ஏற்படும்! அவள்தான் அவளுக்கேற்ற கணவனை அடைந்து விட்டதாக என்னைப் போல் பெருமையும் சந்தோஷமும் அடைந்தவளாக இருந்தாளே!

என் கணவருக்குச் சென்னையில் ஒரு பாங்கியில் உத்தியோகம். எங்களுக்குக் கலியாணம் நடந்த சந்தர்ப்பத்தில் அவர் இரண்டு மாதம் ரஜாவில் இருந்தார். அவருடைய பெற்றோர்கள் மாயவரத்திலிருந்தார்கள். ரஜா முடியும்வரை நாங்கள் மாயவரத்தில் இருக்கத் தீர்மானித்தோம். அதற்குப் பின் சென்னையில் தனிக்குடித்தனம் செய்ய வேண்டிய வசதிகளை எல்லாம் அவர் செய்திருந்தார்.

என் மாமியார், நாத்தனார் குணத்தில் எப்படி இருப்பார்களோ என்று முதலில் நான் அஞ்சினேன். மாயவரத்தில் அவர்களோடு வசிக்கும் சில நாட்களையும் எவ்வித இன்னலும் இல்லாது நடத்த வேண்டுமே என்ற பயம் என் மனசிலே எழுந்தது. நான் நினைத்தபடி இல்லாமல் என் மாமி மிகவும் நல்ல குணமுள்ளவராகவே இருந்தார். என் நாத்தனார் என்னிடம் பிரியமாகவே நடந்து கொண்டாள். நான் எப்பொழுதையும் விட அவர்களிடம் மிகவும் பணிவாகவும் அடக்கமாகவும் நடந்து கொண்டேன். என்னுடைய அடக்கமும் பணிவும்தான் அவர்களுக்கு என்மீது நல்ல நம்பிக்கையை ஏற்படுத்தி யிருக்கிறது என்று நான் நினைத்தேன்.

நாங்கள் மாயவரத்திற்குச் சென்ற இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு ஒருநாள் இரவு என் கணவர் என்னிடம் "என்ன விஜயா, ஒன்றுமே சொல்ல மாட்டேன் என்கிறாயே! உனக்கு இந்த வீட்டில் ஏதாவது குறை இருக்கிறதா!........." என்று கேட்டார்.

நான் அவரிடம் எத்தகைய குறையை எடுத்துச் சொல்லுவது! ஏதாவது குறையாக என் மனத்துக்குத் தோன்றினாலல்லவா அதை எடுத்துச் சொல்ல வேண்டும்!

"எனக்கு எந்தவிதமான குறையும் தோன்றவில்லை......" என்றேன்.

அவர் சிரித்துக் கொண்டே, "உன்னைப் போல எவ்விதமான மனக் குறையையும் காட்டிக் கொள்ளாத பெண்ணும் உலகத்தில் இருக்கிறாளே என்றுதான் ஆச்சரியப்படுகிறேன்!" என்றார்.

## தண்ணீர்பேய்-எதிராய-"ஸான்போரைஸ்ட்"









"ஸான்போரைஸ்ட்" குறியிடப்பட்ட துணி ஒருவித சரியான யந்திர உபாயத்தின் நீரில் நனைக்க வேண்டிய அவசியமில்லை.

நான் வெட்கத்தால் தலை குனிந்து நின்றேன். அவர் மெதுவாக என் கரத்தைப் பற்றி இழுத்து அணைத்துக் கொண்டு, ''நானும் கல்யாணம் செய்து கொண்டதிலிருந்து பார்க்கிறேன். உன் மனதில் ஏதாவது ஆவல் இருந்து என்னிடம் தெரிவிப்பாயோ என்று. ஆனால் மனதைத் திறந்து நீ எதையுமே என்னிடம் சொல்லிக் கொண்டதில்லை. உனக்கு எதிலாவது விருப்பம் இருக்குமோ என்று நானாக உன்னை எவ்வளவோ தடவை கேட்டு விட்டேன். நீ உன் விருப்பம் எதையும் சொன்னதே இல்லை. நீ உன் மனதிலுள்ளதை என்னிடம் சொல்ல வெட்கப்படுகிறாயோ அல்லது அச்சப்படுகிறாயோ என்றுதான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது...'' என்றார்.

''என் மனதில் எதுவுமே இல்லை. அப்படி ஏதேனும் இருந்தால் அதை உங்களிடம் சொல்ல வெட்கமோ பயமோ எனக்கில்லை. நீங்கள் வீணாக சந்தேகமோ குழப்பமோ அடைய வேண்டாம். எனக்கு இங்கு ஒரு குறையுமில்லை. உங்கள் மனதிற்கு எதெது விருப்பமோ அவைகள்தான் என் மனதுக்கு விருப்பமானது. உங்களுக்குக் கட்டுப்பட்டவள் நான்......'' என்றேன்.

அந்த வீட்டில் என் மனதுக்கு வெறுப்பை அளிக்கக் கூடியது எதுவுமே இல்லை என்று சொல்லிவிட முடியாது. ஆனால் அதை நான் மிகப் பெரிதாகவும் கருத முடியாது. என் மைத்துனர்கள் இருவரும் வீட்டில் செய்யும் அட்டகாசம்தான் எனக்குச் சிறிது அருவருப்பை உண்டாக்கியது. மாதுவுக்கு வயது பன்னிரண்டு இருக்கும். ஸ்ரீதருக்கு வயது எட்டு இருக்கும். அவர்கள் இருவரும் ஒற்றுமையாக விளையாடியதை நான் பார்த்ததேயில்லை. பள்ளிக்கூடத்தில் அவர்கள் எப்படி இருக்கிறார்களோ, ஆனால் அவர்கள் வீட்டிலிருக்கும் நேரமெல்லாம் சண்டைதான் அவர்கள் பொழுது போக்காக இருந்தது. அவர்களைக் கண்டிப்பவர்களோ, அவர்கள் சண்டையை விசாரித்துச் சமாதானம் செய்பவர்களோ அந்த வீட்டில் ஒருவரும் இல்லை. அவர்களுடைய விஷமத்தையும் சண்டையையும் கூச்சலையும் பார்க்கும் பொழுது இப்படியும் ஒருவர் குழந்தைகளை வளர்ப்பார்களா என்றுதான் எனக்குத் தோன்றும். ஒவ்வொரு சமயம் அவர்கள் விஷமம் செய்யும்பொழுது அவர்களை நானே கூப்பிட்டுக் கண்டிக்கலாமா என்று தோன்றும். ஆனால் வீட்டில் பெரியவர்கள் இதைச் சகித்துக் கொண்டிருக்கும்போது புதிதாக வந்த நான் அவர்களைக் கண்டிக்க என்ன உரிமை இருக்கிறது! என் மனதிலுள்ள சிறு அருவருப்பை வெளியே காட்டிக் கொள்ளக்கூடப் பயந்தேன்.

என் மாமி சமையல் அறையில் காரியமாக இருந்தாள். நான் பாத்திரங்கள் சுத்தம் செய்து கொண்டிருந்தேன். வெளியே தாழ்வாரத்தில் மாதுவுக்கும் ஸ்ரீதருக்கும் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருந்தது. ஸ்ரீதரின் பலப்பத்தை மாது வாங்கி உடைத்து விட்டான். அதற்குப் பதிலாக ஸ்ரீதர் மாதுவின் பென்சிலை எடுத்து உடைத்து விட்டான். இதுதான் சண்டைக்குக் காரணமாயிருந்த அடிப்படை விஷயம். மாது ஸ்ரீதரின் முதுகில் படீர் படீர் என்று நான்கு அடிகொடுத்தான். உடனே ஸ்ரீதர் அவனை வாயில் வந்தபடி திட்டி ஓலமிட்டு அழ ஆரம்பித்தான்.

சமையல் அறையிலிருந்த மாமி, ''என்னடா அங்கே! வீட்டுக்குள்ளே சண்டை போடாதீர்கள். உங்கள் சண்டையை எல்லாம் வெளியே போய்

வைத்துக் கொள்ளுங்கள்!" என்றாள் உரத்த குரலில். மாமியின் வார்த்தை எனக்கு விநோதமாயிருந்தது. குழந்தைகளைச் சண்டை போடாமல் ஒற்றுமையாக இருங்கள் என்று கண்டித்துச் சொல்லுவதை விட்டு விட்டு 'இங்கே வேண்டாம். வெளியே எங்கேனும் எப்படியாவது சண்டை போட்டுக் கொள்ளுங்கள்' என்று சொல்லுவதின் அர்த்தமென்ன! அவர்கள் எங்காவது போய் எப்படியாவது வெட்டி மடியட்டும்; இங்கே இருந்து தலை வேதனையைக் கொடுக்க வேண்டாம் என்ற அபிப்பிராயம் தானே......!

மாது ஸ்ரீதரைத் தன் ஆசை தீர அடித்து விட்டுப் போய் விட்டான். ஸ்ரீதர் சிறிது நேரம் அங்கேயே அழுதுகொண்டு நின்றான்.

நான் சமையல் அறையிலிருந்த காரியங்களை முடித்துக் கொண்டு மெதுவாக மாடிக்குப் போனேன். அவர் ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தார். அவர் என்னைக் கண்டதும் புத்தகத்தை மேஜைமீது வைத்துவிட்டு "ஏமே என்ன கூச்சல்!" என்றார்.

"ஒன்றுமில்லை! ஸ்ரீதரின் பலப்பத்தை வாங்கி மாது உடைத்து விட்டானாம். ஸ்ரீதர் அதற்குப் பதிலாக மாதுவின் பென்சிலை உடைத்து விட்டானாம். அதற்காக மாது ஸ்ரீதரை அடித்து விட்டுப் போய்விட்டான்" என்றேன்.

"அவ்வளவுதானே...!" என்று சொல்லி விட்டு அவர் மறுபடியும் புத்தகத்தில் தம் கவனத்தைச் செலுத்தலானார்.

நான் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே உட்கார்ந்தேன். புத்தகத்திலிருந்த கவனத்தைத் திருப்பி மறுபடியும் என்னைப் பார்த்த பொழுது அவர் திகைப்படைந்தவராய் "விஜயா! இங்கே வா!" என்று என் கரத்தைப் பற்றித் தம்மிடம் இழுத்து என் முகத்தை உற்றுப் பார்த்து "என்ன உன் முகம் இன்று இவ்வளவு வாட்டமாய் இருக்கிறது...! உன் மனசில் ஏதாவது இருந்தால் சொல்லிவிடு விஜயா!" என்றார்.

"குழந்தைகள் இப்படிச் சதா சண்டை போடுவதைப் பார்த்துக் கொண்டு 'சரிதான், இவ்வளவு தானே!' என்று விட்டு விடுவது அவ்வளவு சரியா என்றுதான் எனக்குப் படவில்லை. அவர்களை இப்படியே விட்டு விட்டால் பிற்காலத்தில் எப்படியாவார்கள்......!" என்றேன்.

அவர் சிரித்துக் கொண்டே, "இதோ பார்! அவர்களுடைய சண்டைக்கு நாம் சரியான தீர்ப்பே அளிக்க முடியாது. அவர்கள் சண்டையில் நாம் தலையிட்டால் மூளைதான் குழம்பும். இப்படித் தான் சண்டை போடுவார்கள்; கொஞ்ச நேரம் கழித்து ஒற்றுமையாகி விடுவார்கள். வீட்டில் தான் இப்படிப்பட்ட சண்டை எல்லாம். வெளியே போய் விட்டால் மிகவும் ஒற்றுமையாக இருப்பார்கள். அவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டாம்" என்றார்.

நான் அவருடைய வார்த்தைகளுக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. நான் யாருடனும் மனவேற்றுமையுடன் சண்டையிட்ட அனுபவம் கிடையாது. அதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் சண்டை போடுவது நல்லது என்பதை ஒப்புக் கொள்ள என் மனது இடங் கொடுக்கவில்லை. சண்டை போட்டுக் கொண்டு வாழ்வதும் எனக்கொரு வாழ்வாகப் படவில்லை.

என் கணவருக்கு இருந்த ரஜா நாள் முடிவுற்றதும் நானும் என் கணவரும் மாயவரத்தை விட்டுச் சென்னைக்கு வந்து ஒரு அழகிய தனி வீட்டில் புதுக் குடித்தனம் நடத்த ஆரம்பித்தோம்.

என் கணவருக்கு அவருடைய பொருள்களில் எப்பொழுதுமே அக்கறை இருந்ததில்லை. அவர் தம் சட்டையைக் கழற்றி எங்கேயாவது போடுவார். அதனுடைய பித்தான்கள் எங்காவது ஒரு புறம் கிடக்கும். அவருடைய பேனா எங்கேயாவது ஒரு இடத்தில் கிடக்கும். கைக்கடிகாரத்தைக் கழற்றி எங்காவது ஓர் இடத்தில் வைப்பார்.

அதுவும் அவர் ஆபீஸ் போகும் நேரத்தில் எல்லாம் ஒரே தாறுமாறுமாய்த் தானிருக்கும். அவர் கண்ட இடங்களில் வாரி இறைத்து விட்டுப் போன பொருள்களைச் சீராக எடுத்து வைப்பதற்கே எனக்குப் பொழுது சரியாக இருக்கும். இதெல்லாம் எனக்குச் சிரமமாகத்தா னிருந்தது. இதைப் பற்றி அவரிடம் சொல்லலாமா என்று கூட நான் அனேகம் தடவை நினைத்ததுண்டு. ஆனால் அதைச் சொல்ல மாத்திரம் எனக்கு மனத் துணிவு ஏற்பட்டதேயில்லை. அவரால் எனக்கேற்படும் சிரமத்தைப் பெரிதாகக் கருதாமல் இருக்கத் தான் நான் நினைத்தேன். இப்படியே வருஷம் இரண்டு ஓடிவிட்டது. எங்கள் வாழ்க்கையில் எவ்வித மாறுதலும் ஏற்படவே யில்லை.

விரைவில் நான் ஒரு கர்ப்பிணி என்பதை உணரத் தலைப்பட்டேன். நாளுக்கு நாள் குடும்பக் காரியங்களைச் செய்வது எனக்கு மிகவும் சிரமமாக இருந்தது. அவர் எனக்கு அடிக்கடி உபசார வார்த்தைகள் சொல்லுவாரே தவிர, கர்ப்பிணியாகிய எனக்குச் சிரமம் கொடுக்காத வகையில் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதை அறிந்து கொள்ளவில்லை. எப்பொழுதும் போல் தம் பொருள்களை அங்கொன்றும் இங்கொன்றுமாகப் போடும் வழக்கம் மாத்திரம் அவரை விட்டுப் போகவே இல்லை.

அன்று காலை என் கணவர் ஆபீஸுக்குச் சென்றவுடன் அவர் அங்கு மிங்குமாகப் போட்டு விட்டுப் போன பொருள்களை எடுத்து வைப்பதில் மூழ்கினேன். இவைகளை எல்லாம் எடுத்துச் சீர் செய்வதற்கு ஒவ்வொரு நாளும் ஒரு மணி நேரமாவது வேண்டி யிருந்தது. இந்தச் சமயத்தில் தான் பாகீரதி அம்மாள் வந்தாள். பாகீரதி அம்மாள் எனக்குக் கொஞ்ச நாளாகச் சிநேகிதம். அவள் எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் குடி இருக்கிறாள். எப்பொழுதும் அவள் என்னிடம் அன்பாகவும் அனுதாபமாகவும் தான் பேசுவாள். நானும் அவளிடம் மரியாதையாகவும் பணிவாகவும் நடந்துகொள்வது வழக்கம்.

"இதென்ன கூத்து! இப்படியே நீ எவ்வளவு நாளைக்குச் சிரமப்படுவாய். அதுவும் பாவம், கர்ப்பிணி. நாளைக்கு ஏதேனும் உடம்புக்கு வந்தால் என்ன செய்வது! இது ஒரு புருஷனுக்குத் தெரியாதா! இப்படித்தான் என் வீட்டுக்காரர் வெகு நாள் வரையில் குடும்பத்திலேயே கவலை இல்லாமல் இருந்தார். நான் சொல்லிச் சொல்லி இப்பொழுது அவருக்கு ஒவ்வொன்றிலும் எவ்வளவு கவலை ஏற்பட்டிருக்கிறது தெரியுமா! புருஷனுக்கு எல்லா விதத்திலும் அடங்கி நடப்பது மாத்திரம் நல்ல மனைவியின் தர்மமில்லை. அவர் செய்யும் தவறான காரியங்களிலிருந்து சீர்திருத்தம் செய்வதும் நல்ல மனைவியின் கடமைதான்......" என்றாள்.

பாகீரதி அம்மாள் இவ்வளவு சொல்லியும் என் மனம் மாறவில்லை. "புருஷர்களைச் சீர்திருத்துவது என்று சொல்லி நாம் ஏதாவது செய்தால் வீட்டில் ரகளைதான் நடக்கும். எனக்கு அது பிடிக்காது" என்று கறுக்கென்று பதில் சொன்னேன். பாகீரதி அம்மாள் அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை.



"ஸார், இது எங்கே போகும் ரயில், ஸார்?".

"இது பம்பாய் மெயில், ஸார்! இன்னும் இருபது நிமிஷத்தில் பம்பாய்க்குப் போகிறது!"

"அடாடா! அவ்வளவு சீக்கிரம் பம்பாய்க்குப் போய் விடுகிறதா!"

ஒருவாரம் சென்றது. நாளுக்குநாள் என் உடலில் களைப்பும் ஆயாசமும் அதிகமாய்க் கொண்டு தான் வந்தன. என் கணவர் அடிக்கடி என்னிடம் அனுதாபம் காட்டி உபசார வார்த்தைகள் சொல்லிக்கொண்டு தானிருந்தார். ஆனால் அவர் என்னுடைய சிரமத்தை எந்த அளவு அறிந்தார் என்றுதான் எனக்குத் தெரியவில்லை. வழக்கம்போல் தம் சாமான்களை வீட்டில் பல இடங்களில் வாரி இறைத்து விட்டுச் செல்லும் அவருடைய பழக்கமும் நிற்கவில்லை.

ஒருநாள் அவர் ஆபீஸுக்குக் கிளம்பும் தருணத்தில் என்னையறியாமல் படபடப்போடு பேச ஆரம்பித்து விட்டேன். "இதென்ன ஒவ்வொரு நாளும் நீங்கள் உங்கள் பொருள்களைக் கண்ட இடத்தில் வாரி இறைத்து விட்டுப் போனால் அதையெல்லாம் எடுத்து வைக்க என் பிராணனல்லவா போகிறது......" என்றேன்.

என் வார்த்தைகளைக் கேட்டதும் என் கணவரின் பிரகாசமான முகம் கறுத்துச் சுருங்கி விட்டது. அப்படியே குன்றிப் போய் நின்று விட்டார். "சரி! இன்று சொல்லி விட்டாயல்லவா! இனி நாளையிலிருந்து இப்படியெல்லாம் நடக்காது..." என்று சொல்லிவிட்டு 'விர்'ரென்று போய் விட்டார். அவர் இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது முகத்தில் ஏற்பட்ட மாறுதலும் வார்த்தைகளில் இருந்த படபடப்பும் என் மனசை உலுக்கி விட்டன. எங்கள் வாழ்க்கையில் இந்த மூன்று வருஷ காலத்தில் அவர் முகம் இப்படிப்பட்ட பயங்கர மாறுதலை அடைந்ததே இல்லை. அவருடைய வார்த்தைகளிலும் இவ்வளவு பதட்டம் ஏற்பட்டதில்லை. அவரைச் சொல்வப் போவானேன்! நானும் அவரிடம் இவ்வளவு பதட்டமாகவும் பேசியதே யில்லை.

அன்று எனக்கு வீட்டுக் காரியங்களில் சிரத்தையே ஏற்படவில்லை. மனசில் ஏற்பட்ட ஆதங்கத்தினால் பொருமிய வண்ணம் உட்காருவதும் படுப்பதுமாகவே இருந்தேன்.

அன்று சாயந்திரம் அவர் முன்னேரத்திலேயே ஆபீஸிலிருந்து வந்து விட்டார். வந்தவுடன் தன் கோட்டையும் ஷர்ட்டையும் கழற்றி ஒழுங்காக ஸ்டாண்டில் மாட்டினார். கடிகாரத்தைக் கழற்றி வைக்கவேண்டிய இடத்தில் வைத்தார். சட்டைப் பையிலிருந்த மணிபர்ஸை எடுத்துப் பீரோவில் வைத்துப் பூட்டினார். என்றுமில்லாத வண்ணம் அவர் அன்று எல்லாவற்றையும் ஒழுங்காகவும் கருத்தோடும் செய்யத் தொடங்கினார். அவர் முகக்குறி மட்டும் கடுமையாக இருந்தது.

அவர் என்னைப் பார்த்ததும் "என்ன உனக்கு ஏதாவது உடம்பு சரியாயில்லையா!" என்றார் புருவத்தைச் சுளித்துக் கொண்டு.

"எனக்கு உடம்பு ஒன்றுமில்லை" என்றேன் பயந்து நடுங்கிக் கொண்டே.

"வீணாக என்னிடம் பொய்யெல்லாம் சொல்லி உள்ளதை மறைக்காதே. உன்னிடம் உள்ள இந்த குணம்தான் எனக்கு நெடுநாளாகப் பிடிக்கவில்லை......" என்றார். அவருடைய குரல் மிகவும் கடுமையாக இருந்தது.

"நான் எதையும் மறைத்து வைக்கவில்லை. எப்பொழுதுமே உங்களிடம் எதையும் நான் மறைத்து வைத்ததில்லை" என்றேன்.

"நீ மறைத்து வைத்ததில்லையா! என்னிடம் சகஜமாக மனம் விட்டுப் பழக உனக்குத் தெரியவில்லை. மூன்று வருஷமாக என்னோடு நீ குடித்தனம் நடத்துகிறாய். என்னுடைய பழக்கம், சுபாவம் எல்லாம் உனக்குத் தெரியும். இத்தனை நாளாக அதெல்லாம் உன் மனசில் படாமல் இருக்கவே முடியாது. இத்தனை காலமும் இல்லாமல் இன்று காலையில் திடீரென்று என் குற்றத்தைச் சுட்டிக் காட்டிக் கடுமையாகப் பேசினாயல்லவா......!" என்றார்.

எனக்கு அழுகை அழுகையாக வந்தது. நான் நினைத்தபடி எல்லாம் விபரீதமாகவே முடிந்திருப்பதாக அறிந்து கொண்டேன். "நான் உங்களை அப்படிச் சொல்லியது பிசகு" என்றேன் நெஞ்சில் குமுறி எழும் துயரத்தை அடக்க மாட்டாதவளாய்த் தழுதழுத்த குரலில்.

"நீ சொல்லியதில் ஒன்றும் பிசகில்லை. இத்தனை நாளாக இதை நான் உணராமல் இருந்ததுதான் பிசகு" என்றார் என் கணவர்.

நான் ஒன்றுமே பதில் பேசவில்லை. பதில் பேசுவதற்குரிய வார்த்தைகளும் கிடைக்கவில்லை. நான் தலை குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தேன். என் கண்களிலிருந்து நீர் துளித்தது.

அவர் என் முகத்தைப் பார்க்கவே யில்லை. சட்டென்று எழுந்து மேல் துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டு 'விர்'ரென்று வெளியே சென்றார். நான் நின்ற இடத்தை விட்டு அசையாமல் சிலைபோல் நின்று கொண்டிருந்தேன்.

சில நிமிஷ நேரங்களில் அவர் திரும்பி வந்தார். ஆனால் அவர் மட்டும் வரவில்லை. அவரோடு ஒரு டாக்டரையும் அழைத்து வந்தார். நான் 'சட்'டென்று கண்களைத் துடைத்துக் கொண்டு என்னை ஒருவிதமாகச் சரி செய்து கொண்டேன்.

டாக்டர் என்னைக் கட்டிலில் உட்காரச் சொல்லி என் உடலைப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தார். ஒருவிதமாக அவருடைய பரிசோதனையிலிருந்து விடுபட்டேன். "பிரசவத்திற்கு இன்னும் ஆறு மாத மாகலாம். இப்போதெல்லாம் அதிகமாக வீட்டுக் காரியங்களைச் செய்யக் கூடாது. இதனால் உடம்புக்கு மிகவும் ஆயாசம் ஏற்படும். அது ரொம்பக் கெடுதல். பலஹீனமான உடம்பு. இப்பொழுதிலிருந்தே கொஞ்சம் ஓய்வு இருந்தால்

தான் நல்லது. ஏன் நீங்கள் கொஞ்சம் அவர்களைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி வையுங்களேன். அது தான் நல்லது. ஒரு டானிக் எழுதித் தருகிறேன். அது போதும்" என்று சொல்லி டாக்டர் ஒரு சிறு துண்டுக் கடிதத்தில் ஏதோ எழுதிக் கொடுத்து விட்டுப் போனார்.

"இதோ பார்! இனிமேல் நீ எந்த வீட்டுக் காரியத்தையும் செய்யக் கூடாது. நாளைய தினம் ஓட்டலிலிருந்து சாப்பாடு கொண்டுவர ஏற்பாடு செய்கிறேன். உன் தகப்பனாருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டு நாளை மறு நாளே உன்னை ரயிலேற்றி விட்டு விடுகிறேன். கடவுள் கிருபையிலே நீ பெற்றுப் பிழைத்து வந்தால் போதும்" என்றார் அவர்.

நான் வாய் திறந்து எதுவுமே பேசவில்லை. அவருடைய வார்த்தைகளை மறுத்துக் கூற என்னிடம் ஆதார பூர்வமாக எதுவுமேயில்லை.

அவர் சொல்லியபடியே மறுநாள் என் தகப்பனாருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டார். அதற்கு மறுநாள் என்னை ஊருக்கு ரயிலேற்றி விட்டார். டாக்டர் எச்சரிக்கை செய்து விட்டுப் போனதிலிருந்து 'என்னை வீட்டில் எந்தக் காரியமும் அவர் செய்ய விடுவதில்லை. டாக்டர் எழுதிக் கொடுத்த டானிக்கை மறுநாளே வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார்.

நான் ஊருக்கு வந்தவுடன் என்னைப் பார்த்து விட்டுப் போவதற்காக விமலா வந்தாள். அவளைப் பார்த்ததும் முதலில் நான் கேட்ட கேள்வி இது தான்: "எப்பொழுதும் போல நீயும் உன் புருஷனும் சண்டை போட்டுக் கொண்டு சௌக்கியமாய் இருக்கிறீர்க ளல்லவா!..."

அவள் சிரித்துக் கொண்டே பதில் சொன்னாள். "சண்டை போடாவிட்டால் எப்படிச் சௌக்கியமாக இருக்க முடியும்! இப்பொழுது வரும் போது கூட அவரிடம் சண்டை போட்டு விட்டுத்தான் வருகிறேன்!" என்றாள். இதற்கு மேல் நெடு நாளாகப் பிரிந்திருந்த நானும் அவளும் பல விஷயங்களைப் பற்றிப் பேசினோம்.

விமலா என்னைத் தன் வீட்டுக்கு வரும்படி வற்புறுத்தி அழைத்து விட்டுச் சென்றதின் பேரில் நான் மறுநாள் சாயங்கிரம் அவள் வீட்டுக்குச் சென்றேன். வீட்டிற்குள் நுழைந்ததுமே அவளுடைய குழந்தைகள் இரண்டும் தாழ்வாரத்தில் சண்டையிட்டுப் பெரிதாகக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தன. ஒரு குழந்தைக்கு வயது மூன்றிருக்கும். அது பெண் குழந்தை. மற்றொரு குழந்தைக்கு வயது ஒன்றரை இருக்கும், அது ஆண் குழந்தை. சின்னக் குழந்தையின் கையிலிருந்த பொம்மைக்காகப் பெரிய குழந்தை அழுது அடம் பிடித்தது. 'சரி! குழந்தைகளும் பெற்றோர்களைப் போலத்தான் இருக்கும் போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டேன். என்னைக் கண்டதும் அந்தக் குழந்தைகள் தங்கள் சண்டையை நிறுத்திக் கொண்டன. ஆனால் சமையலறையிலும் ஒரு சண்டை நடக்கிறது என்பதற்கு அடையாளமாகச் சப்தம் எழுந்து கொண்டிருந்தது.

"எலுமிச்சங்காய் ஊறுகாய்க்கு வெந்தயம் தாளிப்பதில்லை என்று உனக்கு யார் சொன்னார்கள்!" இது விமலாவின் கணவருடைய குரல்.

"எலுமிச்சங்காய் ஊறுகாய்க்குப் பெருங்காயம் போடுவதில்லை என்று உங்களுக்கு யார் சொன்னார்கள்! அதைச் சொல்லுங்கள் முதலில்." இது விமலாவின் குரல்.

"எனக்கு யார் சொல்ல வேண்டும்! நானே சொல்லுகிறேன்......" என்றார் அவள் கணவர்.

"எனக்கு யார் சொல்ல வேண்டும்! எலுமிச்சங்காய் ஊறுகாய்க்குப் பெருங்காயம் போடுவதுண்டு என்று நானே சொல்லுகிறேன்."

அதற்கு மேல் சில நிமிஷம் பேச்சில்லை. நான் சமையலறைக்கு வெளியே நின்று கொண்டிருந்தேன், தம்பதிகளுக்குள் நடக்கும் அர்த்தமற்ற சண்டையை எண்ணி வியப்படைந்த வண்ணம்.

மறுபடியும் விமலாவின் கணவர் பேசும் குரல் கேட்டது. "சரி! உன் இஷ்டப்படி ஊறுகாய்க்குக் கொஞ்சம் பெருங்காயமும் போட்டுத் தொலை. ஆனால் நான் சொல்லுகிறபடி வெந்தயமும் கொஞ்சம் போட வேண்டும்" என்றார்.

"சரி! உங்கள் இஷ்டப்படி கொஞ்சம் வெந்தயமும் போடுகிறேன்" என்றாள் விமலா.

இந்தச் சம்பாஷணையை வெளியிலிருந்து கேட்ட எனக்கு அடக்கமாட்டாத சிரிப்பு வந்து விட்டது. நான் வந்த சிரிப்பை ஒருவிதமாகச் சமாளித்து அடக்கிக் கொண்டு தான் அங்கு வந்ததைக் காட்டிக் கொள்ளாமலேயே வீடு திரும்பி விட்டேன்.

அர்த்தமில்லாமல் ஒரு சிறு விஷயத்திற்கு விமலாவும் அவள் கணவரும் சில நிமிஷ நேரம் தர்க்கம் செய்து சண்டை போட்டு அடுத்த நிமிஷம் சமாதானத்திற்கு வந்ததுதான் எனக்கு வியப்பாக இருந்தது. வாழ்க்கையில் இப்படிச் சண்டை போட்டுச் சமாதான மடைவதிலும் ஏதோ ருசியும் இன்பமும் இருப்பதுபோல்தான் எனக்குத் தோன்றியது. அன்று என்னுடைய கணவர் கடிதம் எழுதியிருந்தார்.

"அன்புள்ள விஜயாவுக்கு,

உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். உனக்கு ஏதேனும் குறை இருந்தால் எனக்கு உடனே எழுது. மனதிலுள்ளதை மறைத்து வைக்காதே. இது பின்னால் ஆபத்தாக முடியும். அடிக்கடி கடிதம் எழுது."

கடிதத்தைப் படித்ததும் என் கணவருக்குக் கடிதம் எழுதினேன். இவ்வளவு நாளும் அவரிடம் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டி உபதேசம் செய்ததேயில்லை. எப்பொழுதுமே நல்ல மனைவியாகவே நடந்து கொள்வதிலுள்ள இடையூறுகளை நான் உணர்ந்து கொண்டேன். இப்பொழுது கடிதம் மூலமாக அவருக்குச் சீர்திருத்த உபதேசம் செய்யத் தலைப்பட்டேன்.

"அன்பிற்குரியவருக்கு, அனேக கோடி நமஸ்காரம். இவ்விடம் யாவரும் சௌக்கியம். நீங்கள் சொல்லியபடி என் உடம்பைக் கவனித்துக் கொள்கிறேன். நான் இனிமேல் எதையும் மனதில் வைத்துக் கொண்டு தடுமாற மாட்டேன். எனக்குள்ள மனக்குறை எல்லாம் நீங்கள் ஒழுங்காக இருக்க வேண்டுமே என்பது தான். வீட்டுச் சாமான்களைக் கண்ட இடத்தில் போடாதீர்கள். எல்லாவற்றையும் ஒழுங்காகப் பார்த்துக் கொள்ளுங்கள். வேளை தவறிச் சாப்பிடாதீர்கள். அதிக நேரம் கண் விழிக்காதீர்கள். நான் அங்கு வரும் வரையில் எதிலும் அலட்சிய புத்தியாக இருக்காதீர்கள். நான் இப்படித் திடீரென்று உங்களுக்கு உபதேசம் செய்து கடிதம் எழுதியது பற்றி வருத்தப்பட மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். கணவருக்கு எப்பொழுதும் எல்லா விஷயத்திலும் அடங்கி நடப்பது மாத்திரம் நல்ல மனைவிக்கு அடையாளமாகாது. சில சமயம் கணவரிடம் கண்ட குறைகளைச் சண்டை போட்டாவது நீக்கவும் பிரயத்தனப் படுகிறவள்தான் நல்ல மனைவியாக முடியும் என்பதை இப்பொழுது தான் நான் பரிபூரணமாக உணர்ந்து கொண்டேன்.

தங்கள் அன்புள்ள, விஜயா."

# வாழ்க்கையே தியாகம்



நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்

3

கிருஷ்ணமூர்த்தி ஐந்து ஆண்டுகள் வக்கீல் தொழிலை உயிரை விட்டுச் செய்தார். இதன் பயனாக மாதம் நூறு ரூபாய் வருமானம் கூட நிலையாக ஏற்படவில்லை. ஆயினும் மாதந்தோறும் குமாஸ்தா சம்பளம் இருபது ரூபாய் கொடுக்க வேண்டியிருந்தது; கோர்ட்டுக்குப் போய் வர ஜட்கா செலவு பத்து ரூபாய் ஆயிற்று. பத்திரிகைகளுக்குச் சந்தா, சங்கங்களுக்குச் சந்தா, தான தர்மங்கள் என்று பத்து பத்து ரூபாய்களாக எத்தனைப் பத்து ரூபாய்கள் கொடுக்க வேண்டியிருந்தது. பத்து ரூபாய்க்கும் குறைவாக அவன் கொடுத்ததே இல்லை. இத்தனைச் செலவுகளுக்கும் போன மிகுதிதான் வீட்டுச் செலவுக்குக் கிடைத்தது. அது எவ்வளவு இருந்திருக்க முடியும்? ஆயினும் அவர்கள் தங்கள் குடும்பச் செலவைச் சரிக் கட்டப் பெற்றோரின் உதவியை எதிர் பார்க்கவில்லை. அவர்கள் ரொம்பப் பாடுபட்டு வேலை செய்தார்கள். தங்கள் வீட்டுத் தோட்டத்தில் காய் கறிகளைப் பயிர் செய்தார்கள். வீட்டிலுள்ள சின்ன சின்ன வேலைகளை யெல்லாம் தாங்களே செய்து கொண்டார்கள். தங்கள் வீட்டுப் பசு மாட்டையும் எருமையையும் பராமரிக்கும் வேலையையும் தாங்களே செய்யலானார்கள். எளிய வாழ்க்கையை ஓர் அருங்கலையாக நடத்தினார்கள்.

இவ்விதம் அவர்கள் சந்தோஷமாகவே வாழ்ந்து வந்தார்கள்.

1928-ம் ஆண்டு அவர்களுக்குத் தலைச்சன் குழந்தை பிறந்தது. அதற்குப் பிரேமா என்று பெயர் வைத்தனர். குழந்தை பிறந்த ஒரு மாதத்துக்குப் பிறகு, குழந்தையைக் கையில் ஏந்திய படியே கிருஷ்ணமூர்த்தி பெருமிதத்துடன், "இப்பொழுதுதான் நாம் பூரண மனிதர்கள் ஆனோம். ஆமாம், நாம் பிறக்கும் போது மூன்றில் ஒரு பங்கு மனிதனாகத்தான் இருக்கிறோம். கல்யாணமானால் இரண்டு பங்கு நிறைவு பெறுகிறோம். குழந்தையைப் பெற்ற பிறகுதான் பூரணத்துவம் பெறுகிறோம். இது ஆண் பெண் இருவருக்கும் பொருந்தும்" என்றான். ஆனால்; "இந்தக் குழந்தை வெளி வருவதற்குள் எவ்வளவு வேதனைப்பட வேண்டியிருக்கிறது தெரியுமா?" என்று கேட்டாள் அவன் மனைவி.

"அது எனக்குத் தெரியாது. ஏன், எந்த ஆண்மகனுக்குமே தெரிய முடியாது. ஏனெனில் ஆண்கள் குழந்தையைப் பெறுவதில்லை. என்றால் ஓரளவுதான் அந்தக் கஷ்டத்தைக் கற்பனை செய்து கொள்ள முடியும். ஆனால் முன்பே கூறியபடி தியாக மின்றிப் பெறும் எதுவுமே ரஸிக்காது. குழந்தைகள் தாம், வாழ்க்கை என்னும் பள்ளத்தாக்கில் மலரும் புஷ்பங்கள். அவைகளை ஒரு சிரமமுமில்லாமல் பெறுவது என்பதும் தகுமா? நம் நாட்டில் குழந்தைகளின் அருமையை நாம் நன்கு உணர்வதில்லை. அதனால் குழந்தைகளைத் தக்கபடி வளர்ப்பதுமில்லை" என்றான்.

சீதா "நம் பிரேமா பெரியவளானால் அவளுக்குத் தக்க புருஷனைத் தேடிக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்" என்று அவன் கூறியவற்றைச் சற்றும் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே கூறினாள்.

இதைக் கேட்டதும் கிருஷ்ணமூர்த்தி பாய்ந்தான்: "நான் சொல்லிக்கொண்டு வந்ததற்கு ஏற்றபடியே கூறுகிறாய். இதுதான் நம் நாட்டுக் குறிக்கோள். குழந்தை பிறந்ததோ இல்லையோ உடனே அதற்குக் கல்யாணம் செய்வது பற்றித்தான் கவலை. அவளைப் படைத்த கடவுள், தக்க பருவத்தில் அவளுக்குக் கல்யாணமும் செய்து வைப்பான். யார் கண்டார்கள்? ஒருகால் அவளே தன் கண

வனைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறாளோ என்னவோ '' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

அவள் சிரித்தாள். '' இந்தப் பழம் பெரும் பாரத தேசம் அவ்வளவு சீக்கிரமாக மாறி விடாது. குறைந்த பட்சம், இன்னும் ஐம்பது வருஷங்களுக்குப் பெற்றோர்கள்தான் தங்கள் பெண்களுக்குக் கணவன்மாரைத் தேடித் தரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். மேலும், இதில் என்ன தவறு இருக்கிறது? நாம் நம் அப்பா - அம்மாவை, சகோதர - சகோதரிகளை, பெண்களை, பிள்ளைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதில்லை. இருப்பினும் நாம் அவர்களை நேசிக்கவில்லையா? பின் நாமே தேர்ந்தெடுத்துக் கொள்ளாது, பெற்றோர் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கும் கணவனையோ மனைவியையோ நேசிப்பதில் என்ன தவறிருக்கிறது? இம்முறையில் என்ன அபத்தம் இருக்கிறது?'' என்றாள்.

'' அப்பாடா! ஏதோ நாங்கள் விரும்பும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளுவதற்குப் பதில் பெற்றோர்கள் தேர்ந்தெடுத்த பெண்ணின் மீது அன்பு வை என்கிறாயே! அந்த மட்டும் அன்பு இருக்கட்டும் என்று கூறினாயே! ரொம்ப சந்தோஷம்! அதற்கே உனக்குக் கோடி புண்ணியம் உண்டு'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

'' அன்பு என்பது அவசியம் வேண்டும். அது இல்லையெனில் மனிதன் தோல் பையில் போட்டுக் கட்டிய எலும்புகள்தான். உண்மையான மனைவி தன்னை நேசிக்கும் கணவனுக்கு என்றும் துரோகம் செய்ய மாட்டாள். ஒரு இன்பத்திலிருந்து மற்றோர் இன்பத்துக்குத் தன் கணவனை அழைத்துச் செல்வது தான் அவளுக்கும் ஒப்பற்ற உரிமை. அவள் கணவனுக்குத் துயரம் சேர்ந்தகாலத்தில் ஆறுதல் அளிப்பாள்; நோயுற்ற காலத்தில் பணிவிடை செய்வாள்; தனிமையில் உறு துணையாக இருப்பாள். கணவன், மனைவி, குழந்தை—ஆகியோர் இருக்கும் குடும்பம் தான் ஒத்துழைப்பு என்னும் தத்துவத்தின் அற்புத விளக்கம்'' என்றாள் கீதா.

'' ஆமாம்; இல்லாள் என்பவள் ஒப்பற்றவள்; உலகத்தில் அவளுக்குச் சமானமானவள் யாருமே இல்லை. அவளிடம் உலகமே அடங்கியிருக்கிறது என்று சொன்னாலும் தவறில்லை. ஏனெனில் உலகிலுள்ள இல்லறப் பெண்கள் அனைவருடைய சீரிய குணங்களும் பொதுவாக அவளிடம் காணலாம். அவள் நித்யமானவளும்தான். யாக்ஞவல்க்யர் கூறியபடி அவளுடைய அன்பு கணவனுக்கே உரியது. அந்தக் கணவனே அவளுக்குக் கடவுள். கடவுள் மீது கொள்ளும் அன்புக்கு ஆரம்பம் ஏது, முடிவு ஏது! கணவன்-மனைவி இருவரிடையே ஏற்படும் அன்புக்குச் சட்ட திட்டங்கள், சம்பிரதாயங்கள், கௌரவம், பிரதாபம் ஒன்றும் இல்லை. அந்த அன்புதான் சட்டம்; அப்படி அன்பு செய்வதுதான்



'' ஐயா, கடம்பவனத்துக்கு ஒரு டிக்கட்டு கொடுங்கள்!''
'' கடம்பவனமா? அப்படி ஒரு ஸ்டேஷன் இல்லையே!''
'' நான் ஸ்டேஷனைச் சொல்லவில்லையே! என் மகன் கடம்பவனத்துக்கு ஒரு டிக்கட்டு வேணும் என்று கேட்டேன்!''

லக்ஷ்யம்; அன்பு செய்வதுதான் கௌரவம்; அன்பு செய்வதுதான் பிரதிபிரயோஜனமும்!''

''கல்யாணமானவுடனேயே தம்பதிகளுக்கு அன்பு வளர்வதுதான் ரொம்பவும் ஆச்சரியமாக இருக்கிறது. ஒருவரையொருவர் கல்யாணத்துக்கு முன்பு பார்த்துக்கூட இருக்க மாட்டார்கள். இருப்பினும் எவ்வளவு சீக்கிரம் அன்பு வளர்கிறது! தம்பதிகளின் அன்பிலும் பலவகைகள் உண்டு போலும்!''

'' ஓ, உண்டு. நான்கு வகையுண்டு. தர்ம சிருங்காரம் எனப்படுவது தான் முதல் வகை. ராமனும் சீதையும் நேசித்தாற் போல், ஆத்மா மற்றோர் ஆத்மாவை நேசிப்பது தர்ம சிருங்காரம் எனப்படும். மனம் மனத்தை நேசிக்கும் வகை காம சிருங்காரம் எனப்படும். இதற்கு உதாரணம் நளனும் தமயந்தியும். உடல் உடலை நேசிக்கும் வகைக்கு மூத்த சிருங்காரம் எனப்படும். இதற்குப் பீமனும் இடும்பியும் உதாரணமாவார்கள்! மனிதன் பணத்துக்காகவே கல்யாணம் செய்து கொண்டானெனில், அதை அர்த்த சிருங்காரம் என்பார்கள். காம வெறிக்கு ஆட்பட்டுப் பரத்தையரை நேசிப்பதை, மூட சிருங்காரம் என்றார்கள். ஆனால் இக் கடைசி வகையை, அன்பின் வகைகளில் ஒன்றாகக் கூடக் கருதக் கூடாது'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

'' அன்பிலிருக்கும், தேக தத்துவத்தை ஓரளவு கட்டுப் பாட்டிலேயே வைத்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்'' என்றாள்.

'' ஆமாம்; ஓரளவு கட்டுப்பாடு வேண்டுமே ஒழிய, அடியோடு ஒழித்து விடக் கூடாது. ஆத்மீகக் காதலில்கூட ஓரளவு தேக

தத்துவம் கலந்திருக்கிறது. அதனால் இதனை ஒழிக்க முயல்வது போன்ற மடமை ஒன்றும் கிடையாது. அப்படி ஒழிக்க முயல்வது பேர் ஆபத்தை விலைக்கு வாங்குவதாகத் தான் முடியும். ஆகவே அன்பு என்பது எப்பொழுதும் மனத்தில் மட்டும் உறைவதாகவோ, அல்லது இயந்திரம் போல் நடந்து கொள்வதாகவோ இருக்கக் கூடாது. மனைவிக்கு ஓர் ஆறுவது உணர்ச்சியுண்டு. அதன் மூலம், ஆண்களுடைய அன்பில் எவ்வளவு உண்மையிருக்கிறது, எவ்வளவு கபடம் இருக்கிறது, என்பதை எளிதில் உணர்ந்துகொண்டு விடுவார்கள்'' என்றான்.

"பலதார விவாகம் செய்து கொள்பவர்களிடையே இந்தக் காதல் எப்படி......?'' என்று இழுத்தாள் கீதா.

"பலதார விவாகம் என்பது ஒரு நோய். ஆறு விரல் கொண்ட கை எவ்வளவு விகாரமோ அவ்வளவு விகாரமானது'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"ஆனால், தசரத சக்கரவர்த்தி, அசோக மன்னர், அக்பர், சிவாஜி போன்ற சில பெரிய மன்னர்களும் வீரர்களும் பல தாரங்களைக் கொண்டு வாழ்ந்தனர். அந்த மனைவிமார் எல்லாம் தங்கள் நிலையைப் பற்றி என்ன நினைத்தார்களோ என்னவோ! ஒருவேளை, அந்த வீரரின் ஒரு பகுதி தமக்குக் கிடைத்ததே போதும். முழு மனிதன் என்றால் வெறும் மூடனாகத்தானே இருப்பான், அவன் இல்லாத வரைக்கும் நலமே என்று கருதினார்களோ, என்னவோ?'' என்றாள் கீதா.

"அந்தப் பெண்கள், கல்யாணம் செய்து கொள்வதற்கு முன் இவற்றைப் பற்றி நினைத்துக்கூட இருக்க மாட்டார்கள்; தங்கள் கணவன்மாரைத் தேர்ந்தெடுக்கும் சந்தர்ப்பம் கூட இருந்திராது. எப்படியானால் என்ன? அவர்கள் இருந்த நிலையில் சந்தோஷமாக இருந்திருக்க முடியும் என்று தோன்றவில்லை. பலதார மணம் சிலர் விஷயத்தில் தீங்கிழைக்காமல் இருந்திருக்கலாம். பொதுவாக, பலதாரமணம் துன்பத்தையும் அசந்தோஷத்தையுமே விளைவிக்கின்றது. இல்லற இன்பத்தைக் கொன்று விடுகிறது; வெறியுணர்ச்சிதான் மிஞ்சி நிற்கிறது!'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"புருஷனிடம் பொறாமை உண்டாகிறதே! அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் கீதா.

"கணவனிடம் பொறாமையுணர்ச்சி யுண்டானால், அவன் தன் மனைவிக்கு முக்கியத்துவம் அளிக்கிறான் என்றுதான் கொள்ள வேண்டும். ஆனால் இந்தப் பொறாமை ஒரு பயங்கர பூதம்போன்றது. இது எத்தனையோ பேருடைய அன்பு வாழ்க்கையைக் குட்டிச் சுவராக்கியுள்ளது. ஆனால் இந்தப் பொறாமையில்லாதிருப்பதும் சில எக்கச்சக்கமான நிலைகளில் கொண்டு வந்து நம்மைச் சிக்கவைத்து விடும். சிகாகோ நகரத்து லட்சாதிபதியின் கதை தெரியுமல்லவா? ஒருநாள் இந்தப் பிரபுவுக்குப் பின்வரும் கடிதம் வந்தது.

'ஐயா, தங்கள் மனைவியைக் கடத்திக் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறோம். பணம், ஒரு பெரிய தொகையாக அனுப்பி வைத்தால், உங்கள் மனைவியை விடுதலை செய்து அனுப்பி வைக்கிறோம்.'

"இதற்கு அந்தப் பிரபு: 'வேண்டாம், என் மனைவியை அவள் ஆயுட்காலம் முழுதும் உங்களிடமே வைத்திருங்கள்! பிறகு தொகைக்கு எழுதிப் போடுங்கள். அனுப்பி வைக்கிறேன்' என்று பதில் எழுதிப் போட்டாராம். இது, பொறாமைப் படாமலிருக்கும் குணத்தை மித மிஞ்சிக் கொண்டாடுவதாகும்!'' என்றான்.

கீதா சிரித்தாள். "பின் தம்பதிகளிடையேயுள்ள அன்பை நீடித்திருக்கச் செய்ய வழி தான் என்ன?'' என்று கேட்டாள்.

"கணவனுடைய இன்ப துன்பங்களில் மனைவி சம பங்கு கொள்வதும், மனைவியின் இன்ப துன்பங்களில் கணவன் சம பங்கு கொள்வதுமே இதற்கு வழி. இந்த வழியைக் கடைப்பிடித்தால் அற்புதமான பலன்கள் நேர்வதைக் காணலாம். எப்பொழுதும் பரஸ்பரம் ஒருவரையொருவர் பாராட்டிக் கொண்டிருக்க வேண்டும். ஒருவர், மற்றவருக்குச் செய்த சிறிய தொண்டாயினும், அலங்காரமாயினும், திறம் மிக்க வேலையாயினும் பாராட்ட வேண்டும். இப்படிச் செய்வதால் முதலில் இருந்ததைவிட இரண்டு பங்கு ஆர்வத்துடன் தொண்டு புரிவதையும் மூன்று மடங்கு அதிகமாக நேசிப்பதையும் பார்க்கலாம்'' என்றான்.

"அப்படிச் சொல்லுங்கள்! இப்பொழுதல்லவா தெரிகிறது உங்கள் தந்திரம். சரி, தம்பதிகள் கிழவர்களாகி விட்டால் அவர்கள் அன்பு அந்தப் பருவத்திலும் கூடக் குறையாதிருக்குமா?'' என்று கேட்டாள் கீதா.

"பேஷாக இருக்கும்! சூரியோதயம் எவ்வளவு அழகாக இருக்கிறதோ அவ்வளவு அழகாக சூரியாஸ்தமனமும் இருக்கத் தானே செய்கிறது?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"குழந்தைகளை எப்படி நடத்த வேண்டும்?'' என்று கேட்டாள்.

"மணமான தம்பதிகள், குழந்தைகள் ஒவ்வொருவரையும் ரோஜாச் செடிகளைப் போல, தனிக் கவனம் செலுத்தி வளர்க்க வேண்டும். காட்டு மலர்களைப் போல் தாமே வளரவிடக் கூடாது!'' என்றான்.

"தம்பதிகளின் காதல் உயர்ந்ததா? பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்கும் மிடையே இருக்கும் வாத்ஸல்யம் உயர்ந்ததா?'' என்று கேட்டாள் கீதா.

"எது என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் கடவுள் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் இரண்டு முறை சிரிக்கிறார். முதல் தடவை எது தெரியுமா? கணவன், தன் மனைவியை இரு கைகளாலும் அணைத்துப் பிடித்து, 'என்னைவிட வேறு யாரை நீ நேசிக்கப் போகிறாய்! உன் அன்பே அன்பு!' என்கிறான். குழந்தை பிறக்கிறது. அந்தக்

குழந்தை கணவன் கூறிய மொழி பொய் என்று நிரூபிக்கிறது. அப்பொழுது கடவுள் சிரிக்கிறார். அடுத்தாற் போல, தாய் குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு, 'என்னை விட வேறு யாரை என் செல்வம் நேசிக்கப் போகிறது?' என்று சொல்லுகிறாள். அந்தக் குழந்தை வளர்ந்து பெரியவனாகிறான். கல்யாணம் செய்து கொள்கிறான். தாயின் கூற்றும் பொய் என்று நிரூபிக்கப்படுகிறது. அப்பொழுது கடவுள் மறுபடியும் சிரிக்கிறார்!"

"அப்படியானால், எந்த அன்பு மிகவும் உயர்ந்த அன்பு?" என்று கேட்டான்.

"கடவுள் மீது கொள்ளும் பக்திதான் அன்பில் எல்லாம் வைத்து மிக உயர்ந்த அன்பு. அந்த அன்பின் காரணமாக, யாவற்றிலும் கடவுள் இருக்கிறான் என்று உணர்கிறோம்! பின் யாவும் நம் அன்புக்குரிய பொருள்களாகி விடுகின்றன! இதுதான் அன்பில் எல்லாம் வைத்து உயர்ந்த அன்பு!" என்றான்.

"அப்படியானால் அன்று முகம்மது நபி, 'ஓ மனிதா, நீ உன்னைச் சிருஷ்டித்தவனை நேசிக்கிறாயா? நேசிக்கிறாய் என்றால், அவன் சிருஷ்டித்தவைகளை யெல்லாம் நேசிப்பாயாக!' என்றார். இதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்கள் போலிருக்கிறதே!" என்றாள்.

"யார்தான் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்? அவர் கூறிய மற்றொரு அழகிய மணி மொழி நினைவிருக்கிறதா? 'என் சகோதரர்களே, உடலில் ஒரு மாமிசப் பகுதியிருக்கிறது. அது ஒழுங்காய் இருந்தால் யாவும் ஒழுங்காய் இருக்கும். மற்றப் பகுதி சீர் கெட்டுப் போனாலும் பரவாயில்லை. ஆனால் அது கெட்டுப் போனால் மற்றப் பகுதி சீராக இருந்தாலும் புண்யமில்லை. யாவும் கெட்டுப் போனமாதிரி தான். அந்தப் பகுதியின் பெயர்தான் இருதயம் என்பது' என்று கூறியிருக்கிறார். அது ஞாபகமிருக்கிறதா?"

"ஓ, நன்றாக ஞாபகமிருக்கிறது! இதையே தான் உலக நலனைக் கருதி பகவத் கீதையின் கர்மயோகமும் உபதேசிக்கிறது!" என்றாள் அவன் மனைவி சீதா.

"சீதா உலக நலனைக் கருதி நாம் செய்தவைதான் என்ன? 1924ம் ஆண்டு, தியாகத்தைப் பற்றி நாம் பேசிக் கொண்டிருந்தது நினைவிருக்கிறதா? நான் சமீபத்தில் சாந்தோக்ய உபநிடத்தில், மனித வாழ்க்கையின் தத்துவத்தைப் பற்றிக் கிருஷ்ண பரமாத்மா செய்த பிரசித்தி பெற்ற விளக்கத்தைப் படித்தேன். அவர் கூட, மனித வாழ்க்கை என்பது நீண்டதோர் தியாகம் என்றே கூறியிருக்கிறார். கீதை என்பது அதன் விரிவே. லோக க்ஷேமத்தைக் கருதி நாம் என்ன செய்யலாம்? ஹரிஜனங்களுக்கு என்று ஒரு பள்ளிக் கூடத்தை ஆரம்பித்தால் என்ன? கீதை உபதேசிக்கும் சமத்துவத்தை நடைமுறையில் நடத்திக் காட்டினால் என்ன? நாம் அவர்களுடன் வாழ்வோம், சாப்பிடுவோம், அவர்களுள் ஒருவராக இரண்டறக் கலந்து விடுவோம்!" என்றான்.

"நம் சமூகம் நம்மைப் பல தொந்தரவுகளுக்கு உட்படுத்தும்!" என்றாள் சீதா.

"பண்ணட்டுமே!"

"பிரேமாவைப் பிராமண குடும்பத்தில் கல்யாணம் செய்து வைக்க முடியாமற் செய்தாலும் செய்யலாம்."

"பிரேமாவைப் பற்றி இப்பொழுது கவலைப் படாதே! கடவுள் அவளுக்கு ஒரு வழி வகுப்பார். நீ எனக்குப் பக்கபலமாக இருந்தால் போதும்—முன்பு நீ எனக்கு வாக்களித்திருந்தபடி!" என்றான்.

"கட்டாயம்! உங்கள் காரியம் யாவிலும் கை கொடுக்கிறேன்" என்றாள் சீதா.

அந்த வருஷமே கிருஷ்ணமூர்த்தி நிதி வசூலித்து ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தான். பள்ளிக்கூடம் ஒரு சிறிய கீற்றுக் கொட்டகையில்தான் ஆரம்பமாகியது. முப்பது ஹரிஜனப் பெண் குழந்தைகளும் சிறுவர்களும் இருந்து கல்வி பெறக்கூடிய பள்ளிக்கூடமாக ஆரம்பித்திருந்தான். அவன், சீதா, பிரேமா மூவரும் அவர்களுடனேயே வசித்தார்கள்; சாப்பிட்டார்கள். ஆமாம், அவன் மனைவி

## பிரபல திருமணம்

★ சென்னை ராஜ்ய பிரதம காரியதரிசி ஸ்ரீ கே. ராமுண்ணி மேனன், ஐ. சி. எஸ். அவர்களின் புதல்வி செள. ஜயந்திக்கும், திருச்சூர் டாக்டர் வி. கே. நாராயண மேனன் அவர்களின் புதல்வரும் பம்பாய் ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் இன்ஜினீயருமான ஸ்ரீ கோபிநாத்துக்கும் சென்ற மாதம் 22-ம் தேதி மிகவும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. மறுநாள் மாலை நடைபெற்ற வரவேற்பு வைபவத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. வாழ்க ஜயந்தி—கோபிநாத்!



தான் அவர்களுக்குச் சமைத்துப் பரிமாறினான். இதைக் கேள்வியுற்ற சநாதன பிராம்மணர்களிடையேயும், ஹிந்து சமுதாயத்தினரிடையேயும் பெரிய எதிர்ப்பு ஏற்பட்டது. அவர்களுடைய உறவினர் ஒவ்வொருவரும், அவர்கள் செய்கையை நிந்தித்தனர். பரந்த மனப்பான்மையும், சீர்திருத்தவாதிகளாகவும் இருந்தவர்கள் கூட 'இவ்வளவு வேகம் கூடாது' என்று கிருஷ்ணமூர்த்தியைக் குறை கூறினர். ஆனால் கிருஷ்ணமூர்த்தியும் சீதாவும் மனம் தளரவில்லை. சமுதாயத்தினால் ஒதுக்கப்பட்டு. அமுக்கப்பட்ட ஹரிஜன மக்கள் சுய கௌரவமும் தாங்களும் மனிதர்கள்தான் என்ற உணர்ச்சியையும் தங்கள் தொண்டின் காரணமாகப் பெறுவதைக் காண கிருஷ்ணமூர்த்தி தம்பதிகளுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி யுண்டாயிற்று. அந்த மகிழ்ச்சியில் தங்கள் சமுதாய நிந்தனையை அவர்கள் உள்ளம் சிறிதும் பாராட்டவில்லை!

"ஜாக்கிரதை! நீ சீக்கிரத்தில் சாதிப் பிரஷ்டம் செய்யப்படுவாய். ஹிந்து தர்மம் ஏதோ இப்பொழுது பொறுத்து வருகிறது உன்னுடைய அக்கிரமத்தை. ஆயினும் அதன் பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு" என்றார் அவனுடைய நண்பர் ஒருவர்.

"நான் புலால் உண்பதில்லை : குடிப்பதில்லை : புகை பிடிப்பது கூட இல்லை. பிராமண வாழ்க்கைக் கென்று விதிக்கப்பட்ட வழி முறைகளிலிருந்து சற்றும் விலகிப் போவதில்லை. பின் நாங்கள் ஏன் இப்படிக் கொடுமைப்படுத்தப்பட வேண்டும்? அப்படி நாங்கள் செய்துவிட்ட அநீதிதான் என்ன?" என்று கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

அந்த நண்பர், சமபந்தி போஜனம் செய்யாதவராயினும், இரகசியமாகப் புலால் உண்பவர்; இரவு ஒன்பது மணிக்கு மேல் குடிக்கும் பழக்கமும் கொண்டவர். ஆகவே, கிருஷ்ணமூர்த்தி கூறியதைக் கேட்டதும் வெகு வேகமாக அவ்விடத்தை விட்டு நடையைக் கட்டினார்.

சீதாவின் தாய் தந்தையர், சீதாவை இந்தக் கீழ்ச்சாதி மக்களுடன் வாழ வேண்டாம் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். "உன் கணவன் என்ன வேண்டுமானாலும் செய்யட்டும்! நீ உன் குழந்தையை அழைத்துக் கொண்டு எங்களுடன் வந்துவிடு" என்று கூறினார்கள். இதற்கு அவள் வர முடியாது என்று அறிவித்துவிட்டாள். அவள் தாயாரோ "உன் பெண்ணையாவது நாங்கள் எடுத்து வளர்க்கிறோம். அவளாவது இந்தக் கீழ்ச்சாதிப் பையன்களுடன் பழகித் தீட்டுப் படாமலிருக்கட்டும்! எங்களிடம் அனுப்பி வை" என்று கூறினாள். அதற்கும் சீதா சம்மதிக்கவில்லை. அவளுடைய பெற்றோர்கள் சொல்லி முடியாத வெறுப்பும் அருவருப்பும் அடைந்து சென்றனர்.

கிருஷ்ணமூர்த்தியின் தொண்டைப் பாராட்டாதவர்களும் இல்லாமற் போகவில்லை. மகாத்மா காந்தி முதலிய தேசத் தலைவர்கள் மட்டுமின்றி இன்னும் சில சநாதனிகளும் பாராட்டினார்கள். இவர்கள் கிருஷ்ணமூர்த்தி தன் லட்சியத்தில் சிறிதும் பிறழாமல் நிற்கும் திட சித்தத்தையும், சேவை யுணர்ச்சியையும் கண்டு பெரிதும் பாராட்டினார்கள். இரு பிராமணக் கைம்பெண்கள், கிருஷ்ணமூர்த்தியின் ஹரிஜன ஆசிரமத்தில் சமைப்பதிலும், ஏழை ஹரிஜனச் சிறுவர்களுக்குப் பரிமாறுவதிலும் உதவ முன் வந்தார்கள்.

கணவனை யிழந்த லட்சுமி தேவி என்ற பணக்கார அம்மாள், கிருஷ்ணமூர்த்தியும் அவன் மனைவியும் செய்யும் சமூகத் தொண்டைக் கண்டு அப்படியே உள்ளம் உருகிப் போய் விட்டார். பத்தாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கி அவர்கள் ஆசிரமத்துக்கு ஒரு நல்ல கட்டிடம் கட்டிக் கொடுத்தார். அந்த அம்மாள் மிகவும் கடுமையான ஆசார சீலம் அனுஷ்டிப்பவர். ஆயினும், அந்த அம்மாள் முதன் முதலில் ஹரிஜனக் குழந்தைகளுக்குச் செய்யப்படும் நன்மையைக் கண்டு பெரிதும் வியந்தார்!

"நம் சாதி முறைகளின் சீர்திருத்தத்தைப் பற்றி எனக்குச் சற்றும் அக்கறையில்லை. ஆனால், ஏழ்மையில் கஷ்டப்படும் சிலருடைய துயரம் தீர்க்கப்படுவதைக் கண்டு என் உள்ளம் மகிழ்கிறது; ஏற்றப்படாதிருந்த விளக்குகள் ஏற்றப்படுவதைக் கண்டு என் மெய் சிலிர்க்கிறது" என்று கூறினார் அந்த அம்மையார். அந்த அம்மையாருக்குப் பிரேமாவைக் கண்டு ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது. ஆகவே, அவர் கட்டிக் கொடுத்த கட்டிடத்திற்குப் "பிரேம் மந்திர்" என்றும், அவர் வெட்டிய குளத்திற்குப் "பிரேம் சாகர்" என்றும் பெயர் வைக்க விரும்பினார். ஆனால் கிருஷ்ணமூர்த்தி 'லட்சுமி ஸதன்' என்றும் 'லட்சுமி சாகர்' என்றும் பெயர் வைக்கவே விரும்பினான். ஏனெனில், இந்த அம்மாளின் சொத்துக்களை மேற்பார்வை செய்து வந்த வைத்தி என்பவர், லட்சுமியம்மாள் ஹரிஜனப் பள்ளிக்கூடம் கட்டிக் கொடுத்தும் குளத்தை வெட்டியும் உதவினால், அவர் சொத்து முழுதும் சட்டரீதியாகப பறிமுதல் ஆகிவிடும் என்றும், இன்னும் எத்தனையோ முறைகளிலும் பயமுறுத்தினான். இருந்தும் அந்த அம்மையார் தைரியமாக நின்று இந்தக் கட்டிடத்தையும் குளத்தையும் முடித்திருக்கிறார். ஆகவே, கிருஷ்ணமூர்த்தி, அந்த அம்மையாரின் பெயர்தான் வைக்க வேண்டும் என்று நினைத்ததில் வியப்பில்லை யல்லவா?

கட்டிடம் கட்டி முடித்தாயிற்று. அதைத் திறக்கவேண்டிய சுபதினம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. எல்லாரும் கிருஷ்ணமூர்த்திதான் திறந்து வைக்கும் சடங்கைச் செய்ய வேண்டும் என்று விரும்பினர். அதற்குத் தடை ஏற்படாமற் போகவில்லை. (தொடரும்)

# இப்பொழுதே ஆரம்பியுங்கள்...



உங்கள் பெண்ணும் நீண்ட,
பளபளப்பான அழகிய கூந்தலுடன்
விளங்கலாம். இப்பொழுதிலிருந்தே
அவள் கேசத்திற்கு ஸ்வஸ்திக்
வாஸனே கேஸ்டர் ஆயில்
உபயோகிக்க ஆரம்பியுங்கள்.



## ஸ்வஸ்திக்.
## வாசனே கேஸ்டர் ஆயில்

மிருதுவான கேசத்தையும், அழகிய தோற்றத்தையும் அளிக்கிறது

இதுவே சிறந்தது - இது ஒரு ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் தயாரிப்பு

இந்திய சோப், வாசனைப்பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்கள்

# நன்றி யாருக்கு?

சரஸன்

நானும் ராஜகோபாலனும் இன்று நேற்று சிநேகிதமல்ல. பள்ளிக்கூட நாட்களிலிருந்தே எங்களுடைய நட்பு தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

நானும் அவனும் ஒரே வகுப்பில் படித்து, ஒரே சமயத்தில் 'ஸ்கூல் பைனல்' தேறினோம். (இடையில் ஒரு வருஷம் இருவரும் சேர்ந்தே 'கோட்' அடித்ததும் உண்டு.) பாருங்கள்! கல்யாணமும் எங்களுக்கு ஒரே நாளில் ஒரே முகூர்த்தத்தில் நடந்தது. இன்னொரு பொருத்தத்தையும் சொல்லித்தானாக வேண்டியிருக்கிறது. எங்களுக்கு வாய்த்த மனைவியரும் கறுப்புதான். இருந்தால் என்ன! கறுப்பிலும் அழகில்லையா! இன்னொரு வேடிக்கையையும் கேளுங்கள்! எங்களுக்கு வேலையும் ஒரே தினத்தில், ஒரே காரியாலயத்தில் கிடைத்தது. அதுமட்டுமா! ஜாகையும் ஒரே தெருவில், ஒரே வீட்டில் வைத்துக் கொண்டோம்.

எங்கள் இருவருடையதைப் போன்ற பரஸ்பர பொருத்தமுள்ள குடும்பங்களை யாரும் எங்கும் பார்த்திருக்கவும் முடியாது; கேட்டிருக்கவும் முடியாது. எங்கள் வீட்டில் உள்ள பொருள்கள் அவர்கள் வீட்டிலும் காணப்படும். அவர்கள் வீட்டில் இல்லாதபொருள்களை எங்கள் வீட்டிலும் காண முடியாது. உதாரணமாக, எங்கள் வீட்டில் ஒரு நாள் காப்பிக்குச் சர்க்கரை இல்லையென்று ராஜகோபாலன் வீட்டுக்கு இரவல் வாங்கச் சென்றால், அன்று அவனுடைய வீட்டிலும் சர்க்கரை இருக்காது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இவ்வளவு ஒற்றுமையுடனும் அமைதியுடனும் நடந்து கொண்டிருந்த எங்கள் இரு குடும்பங்களிலும் புயலின் சின்னம் தென்பட்டது. முதலில் இதை நான் அறிந்துகொள்ளவில்லை. பெண்கள் வட்டாரத்திலுள் தோன்றிய புயல் அது. நான் அறியாமலிருந்தது போலவே ராஜகோபாலனும் அறியவில்லை என்றுதான் நினைக்கிறேன். ஆனால் பெண்கள் வட்டாரத்தில் புயலின் சின்னம் தென்பட்டால், அதன் வாடை ஆண்கள் வட்டாரத்தில் வீசுவதற்கு எத்தனை நேரம் பிடிக்கும்!

ஒரு நாள் காரியாலயத்திலிருந்து ராஜகோபாலனுடன் நான் திரும்பிய போது என்னுடைய மனைவியின் முக மண்டலம் கோபத்தால் கறுத்துக் காணப்பட்டது.

"என்ன, சரஸா! உன் முகம் ஏன் வாட்டமடைந்திருக்கிறது!" என்றேன் சட்டையைக் கழற்றியபடியே!



"போதும்! இனி ஒன்று, நாம் இந்த வீட்டை விட்டுக் கிளம்ப வேணும்; அல்லது அவர்கள் வேறு வீட்டுக்குப் போக வேண்டும்!" என்று ஆத்திரத்துடன் கூறினாள் சரஸா.

"ஏன்! என்ன நடந்து விட்டது!" என்று வியப்புடன் கேட்டேன்.

"வர வர நம்மைக் கண்டால் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. தப்பித் தவறி ஏதாவது சாமான் கேட்டால் இல்லை என்று கையை விரிக்கிறாள் உங்கள் அருமை நண்பரின் மனைவி. என்னிடமிருந்து எத்தனைதரம் சாமான்கள் வாங்கிக் கொண்டிருக்கிறாள்! இன்று பாருங்கள்! பாலைப் பூனை குடித்து விட்டது. 'கொஞ்சம் பால் கொடு' என்று அவளைக் கேட்டேன். பாலே தன் வீட்டில் இல்லை என்று சாதித்து விட்டாள். பால் இல்லாமலில்லை, கொடுக்க இஷ்டமில்லை போலும். அவர்களுடைய உறவு நமக்கு வேண்டாம்."

நேற்றுவரை தன் சிநேகிதி பங்கஜமாயிருந்தவள் இன்று சரஸாவுக்கு என் 'நண்பனின் மனைவி'யாக மாறி விட்டாள்.

"சரஸா! அப்படியெல்லாம் அவசரப்பட்டுச் சொல்லாதே! உண்மையாகவே பால் அவர்கள் வீட்டில் இருந்திராது" என்றேன்.

எனினும் என் மனைவியின் வார்த்தையில் உண்மையில்லாமலிருக்குமா என்று யோசித்தேன். இத்தனை நாட்கள் பங்கஜத்துடன் அந்நியோன்யமாகப் பழகிய சரஸா இன்று இம்மாதிரி குறை கூறுவதில் அர்த்தமில்லாமலிராது என்று எனக்குத் தோன்றியது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. பகல் போஜனத்துக்குப் பின், அசதியாய்ப் படுத்திருந்தேன். என் மனைவி அடுத்த தெருவில் உள்ள தன் ஒன்றுவிட்ட தமக்கையின் வீட்டுக்குச் சென்றிருந்தாள். ராஜகோபாலனின் மனைவி யாரோ ஒரு ஸ்திரீயுடன் பேசிக்கொண்டிருந்தது என் காதில் கேட்டது.

"இவர் எத்தனை சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறார். வேறு வீடு பாருங்கள், பாருங்கள் என்றேன். காதில் போட்டுக்கொள்வதே யில்லை. ரொம்பவும் பழகினவர்களுடன் சேர்ந்து இருப்பது ரொம்பவும் தர்ம சங்கடமாயிருக்கிறது. எது செய்தாலும் சொன்னாலும் அவர்களுக்குத் தப்பாகவே படுகிறது. இன்னும் ஒரு வாரத்திற்குள் எப்படியாவது இந்த வீட்டை விட்டுப் போய்விட வேண்டும்."

நான் காதில் வாங்கிக் கொண்டது இவ்வளவுதான். இது போதாதா என்னுடைய மனைவியின் வார்த்தைகள் முக்காலும் உண்மைதான் என்று நிர்மாணிக்க!

ராஜகோபாலனிடம் நானே கூறிவிடுவது என்று நிர்மாணித்தேன். ஆனால் அவனே முந்திக்கொண்டு விட்டான். மறுநாள் காலை அவன் என்னிடம் கூறினான். "சீனு! நீ ஆச்சரியப்படலாம். நான் வேறு வீடு பார்த்து விட்டேன். அடுத்த வாரம் குடி போகிறேன்" என்றான்.

என் முகத்திலே எந்தவித மாறுதலும் தென்படாதது கண்டு அவன் ஆச்சரியப்பட்டிருக்க வேண்டும். எனினும் மேலுக்காக "ஏன் திடீரென்று வீடுமாற்றி விட்டாய்! உனக்கு என்ன அசௌகரியம் ஏற்பட்டு விட்டது!" என்றேன்.

"இல்லை! கொஞ்சம் பிரிந்திருப்பதுதான் நல்லது என்று தோன்றியதால்தான் இந்த ஏற்பாடு. வேறொன்று மில்லை" என்று உணர்ச்சியில்லாமல் கூறினான் அவன்.

சீ! என்ன நட்பு இது! கேவலம் மனைவியின் வார்த்தையைக் கேட்டு, இம்மாதிரி நடந்து

கொள்வதா நட்பின் அடையாளம்! நான் யதார்த்தமாய் இவனை நம்பிப் பழகியது எத்தனை மதியீனம்! நல்ல வேளை! இந்த மட்டிலாவது சரஸா இவர்களுடைய அந்தரங்கத்தை உணர்ந்து, எனக்குச் சொல்லியது எத்தனை நல்லதாய்ப் போயிற்று!—இவ்விதம் எண்ணினேன்.

அதன் பின்னர் ஆபீஸிலும் கூட எனக்கும் ராஜகோபாலனுக்கும் பேச்சு வார்த்தை அதிகம் கிடையாது. மற்ற ஆபீஸ் நண்பர்களுக்குங் கூட எங்கள் திடீர் நடத்தை ஆச்சரியத்தைக் கொடுத்தது. முன்பு ஒரு மாதிரியாய்க் கேலி செய்தார்கள். இப்போது வேறு விதமாய்ப் பரிகசித்தார்கள். மொத்தத்தில் அந்தக் காரியாலயத்தில், என் பகுதியில் ராஜகோபாலன் வேலை பார்ப்பது எனக்கு வேம்பாய்க் கசந்தது. நல்ல வேளையாய் அவனைக் காரியாலயத்தில் வேறு ஒரு பகுதிக்கு மாற்றி விட்டார்கள். எனக்கும் அவன் முகத்தில் விழிக்க வேண்டுமே என்ற கவலை இப்பொழுது நீங்கிற்று.

ராஜகோபாலனின் குடும்பம் எங்கள் வீட்டை விட்டு வெளியேறியது குறித்து, சரஸாவும் மனம் நிம்மதி யடைந்தாள்.

"என்ன இருந்தாலும் பங்கஜம் கொஞ்சம் இறுமாப்புள்ளவள்தான். தனக்கென்றால் பிறர் உதவி செய்ய வேண்டும்; தான் மட்டும் ஒன்றும் பிரதி செய்யக் கூடாது என்று மகா கெட்ட எண்ணம். இந்த மட்டும் தொலைந்தார்களே நம் வீட்டைவிட்டு!" என்றாள்.

"ஏன்! ராஜகோபாலனும் அழுத்தக்காரன் தான். பூனைபோல் இருந்து கொண்டு காரியத்தை நடத்துபவன். அவனுடைய வெளி வேஷத்தினால் இத்தனை காலம் மயக்கிவிட்டான். இதோ பார்! சரஸா! உன்னையும் என்னையும் போல, வெளுத்ததெல்லாம் பால் என்று எண்ணும் பிரகிருதிகள் இந்தப் புவியில் கிடையாது" என்று நானும் கூறி வைத்தேன். உண்மையில் என் மனத்தில் பட்டதைத்தான் அவளிடம் தெரிவித்தேன்.

இதற்குப் பிறகு என் ஒரே ஆண் குழந்தைக்கு அட்சராப்பியாசம் நடத்தினோம். எதற்கும் ராஜகோபாலனுக்கும் அழைப்பு அனுப்புவோமே என்று தோன்றியது. என் மனைவிக்கு விருப்பமில்லையெனினும், என் விருப்பத்தை மதித்து, பங்கஜத்தை அழைத்துவிட்டு வந்தாள். நானும் காரியாலயத்திலே ராஜகோபாலனுக்கு ஒரு சீட்டு எழுதி அனுப்பி வைத்தேன். ஆனால் இருவருமே அந்த விசேஷத்துக்கு வரவில்லை.

"பார்த்தீர்களா! நம்மை மதித்தார்களா! அருகிலிருக்கிறவரைக்குத்தான் நம்முடன் அளவளாவினார்கள். இப்பொழுது நம்மை மறந்து விட்டார்கள். நான் சொன்னால் நீங்கள் கேட்டால்தானே!" என்றாள் சரஸா.

"சரஸா! நாம் அவர்கள் மீது சிறிதும் வைரம் பாராட்டவில்லை என்றாவது ஏற்படுமல்லவா! அது போதும்" என்றேன்.

எங்கள் வீட்டில் ராஜகோபாலன் குடியிருந்த பகுதியில் வேறொரு தம்பதிகள் குடியேறினார்கள். அவர்கள் பார்ப்பதற்கு நல்லவர்களாய்த்தான் காணப்பட்டார்கள். என்றாலும் நான் அடுத்த வீட்டுக்காரர்களுடன் அதிகம் பேச்சு வைத்துக் கொள்ளவில்லை. சாதாரணமாய் ஆண்கள், அடுத்துள்ளவர்களிடம் பரிச்சயம் செய்து கொள்ளாமலேயே மாதக் கணக்கில் இருக்கலாம். ஆனால் பெண்கள் அப்படியில்லை. நம்முடன் பேசிக் கொண்டே இருப்பார்கள். சட்டென்று வாசலுக்குச் சென்று, பத்து நிமிஷங்களுக்குப் பின் திரும்பி வந்து, "எதிர் வீட்டுக்கு இப்போது ஒரு புதுக் குடித்தனம் வந்திருக்கிறது. அவருக்கு ரயிலில்



வேலையாம். அவர் மனைவி, மூக்கும் முழியும் நன்றாய் இருக்கிறாள். நாலு குழந்தைகளாம். மாமனார் மாமியார் கிடையாதாம்" என்பார்கள்.

சரஸா இந்த விதிக்கு விலக்கல்ல. வீட்டில் புதுக் குடித்தனம் புகுந்த அந்த அம்மாளுடன் நொடியில் சிநேகம் பிடித்து விட்டாள். அடுத்த வீட்டுக்கார அம்மாளுடன் பழகுவதைக்கண்ட எனக்குக் கவலையாகத்தானிருந்தது.

"சரஸா! ஜாக்கிரதை! அதிகமாய் நெருங்கிப் பழகி விட்டுப் பின்னால் வருந்தப் படாதே! பங்கஜத்தினிடம் நீ அடைந்த அநுபவம் ஞாபகமிருக்கிறதல்லவா!" என்று எச்சரித்தேன்.

"நன்றாய்ச் சொன்னீர்கள்! அடுத்த வீட்டு மாமியின் கால் தூசுக்குச் சமமா, பங்கஜம்!" என்றாள் பெருமையுடன்.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. திடீரென்று என் குழந்தை சிவராமனுக்கு ஜுரம் கண்டு விட்டது. ஆரம்பத்தில் சாதாரணமாய் இருந்தது. ஏதோ கை வைத்தியம் செய்து பார்த்தோம். பயன் காணவில்லை. டாக்டரிடம் ஓடினேன். டாக்டர் வந்து பார்த்தார். அவர் முகத்தில் கவலை தென்பட்டது. ஏதோ மருந்து கொடுத்து விட்டுப் போனார். ஜுரம் இறங்கவில்லை. பிதற்றலும் முனகலும் அதிகரித்தது குழந்தைக்கு. நாங்கள் கவலையுடன் கலங்கினோம். குடியிருந்த வீட்டுக்காரரும் கூட உதவி செய்தார். அவர் யோசனைப்படி டாக்டர் ராமநாதனிடம்

சென்றேன். அவர் மிக்க கெட்டிக்காரர், கைராசி யுள்ளவர் என்று, நண்பர் கூறி யிருந்தார்.

டாக்டர் ராமநாதனிடம் நான் போய் அவரை அவசரமாக அழைத்தேன். அவர் வேறொரு வேலைக் கவனிக்கக் கிளம்பிக் கொண்டிருந்தார்.

“டாக்டர்! மிக்க அவசரம்! என் குழந்தை கவலைக்கிடமான நிலையில் கிடக்கிறான். கொஞ்சம் தாமதித்தாலும்...” என்று கெஞ்சினேன்.

“ஸார்! இப்போது முடியாது. ஐந்து நிமிஷம் முன்பு வந்திருந்தால், உங்கள் அழைப்புக்கு இணங்கி யிருப்பேன். சற்று முன்புதான் வேறொரு அவசரக் கேஸுக்கு அழைப்பு வந்தது. அதைப் பார்த்துவிட்டு உடனே உங்கள் வீட்டுக்கு வருகிறேன்” என்று கூறிவிட்டு அவர் காரில் ஏறிப்போய் விட்டார்.

“சரி! ஆயுள் கெட்டியாய் இருந்தால் குழந்தை பிழைக்கட்டும்! நாம் என்ன செய்வது!” என்று எண்ணியபடியே மெள்ள நடந்தேன் வீட்டுக்கு.

டாக்டர் ராமநாதனின் கார் என் வீட்டு வாசலில் நின்றிருந்தது. நான் வீட்டின் வாசலை மிதிப்பதற்கும், டாக்டர் ராமநாதன் உள்ளிருந்து வெளியே வருவதற்கும் சரியாய் இருந்தது. அவர் முகம் பிரகாசத்துடன் காணப்பட்டது. எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவில்லை.

“ஸார், கவலை இல்லை! உங்கள் பையன் பிழைத்துக் கொள்வான். தக்க சமயத்தில் நான் வர முடிந்தது. கொஞ்சம் தாமதமாகி யிருந்தால், விபரீதமாய் முடிந்திருக்கலாம்” என்று கூறிக் கொண்டே காரில் ஏறினார்.

“டாக்டர்! நீங்கள்தான் சற்று முன் வர முடியாது என்று கூறினீர்களே! எப்படி வந்தீர்கள்!” என்றேன் வியப்புடன்.

“எனக்கு நேரமில்லை. வீட்டுக்கு வாரும் சொல்கிறேன். இன்னொரு உயிர் அங்கே துடிக்கிறது. நான் உடனே போக வேண்டும். அதன் ஆயுள் எப்படியோ!” என்று கூறிக்கொண்டே காரை ஓட்டினார் டாக்டர்.

உள்ளே நுழைந்தேன். குழந்தை தாயின் மடியில் துவண்டுதான் கிடந்தான். எனினும் ‘பிழைத்துக் கொண்டான்’ என்ற சொல் எங்கள் எல்லாருக்கும் அமிர்த வர்ஷமாய் ஒலித்தது.

“சரஸு! என்னிடம் உடனே வர முடியாது என்று கூறிய டாக்டர் எப்படி உடனே வந்தார்!” என்றேன் ஆச்சரியம் தாங்காமல்.

“டாக்டர் உங்களை இன்னும் ஒரு மணி நேரத்தில் தன் வீட்டுக்கு வரச்சொல்லி யிருக்கிறார். இந்த மட்டில் நம் வயிற்றில் அவர் பாலை வார்த்தாரே!” என்றாள் மனச் சாந்தியுடன் சரஸு.

பணத்தை எடுத்துக் கொண்டு டாக்டர் வீட்டுக்குப்போனேன். அப்போதுதான் டாக்டரும் வெளியிலிருந்து வந்து இறங்கினார். அவருடன் கூட இறங்கியவனைப் பார்த்ததும் நான் திகைத்தேன். அவன் ராஜகோபாலன்!

வெறுப்புணர்ச்சி தோன்ற, அவனை அலட்சியமாய்ப் பார்த்துவிட்டு, டாக்டரின் பக்கம் திரும்பி, “டாக்டர்! உங்கள் உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்! தாங்கள் தக்க சமயத்தில் வந்திராவிட்டால்......” என்று நன்றி பொங்கக் கூறினேன்.

“ஸார்! முதலில் உங்கள் நன்றியை இதோ உங்கள் நண்பருக்குத் தெரிவியுங்கள். பின்னர் எனக்குத் தெரியப்படுத்தலாம்!” என்றார் டாக்டர் ராஜகோபாலனைச் சுட்டிக்காட்டி.

“என்ன!” என்று விழித்தவாறு பார்த்தேன்.

டாக்டர் சொன்னார். “ஆம்! இவர் தக்க சமயத்தில் என்னை உங்கள் வீட்டுக்கு அனுப்பி யிராவிட்டால் நான் உங்கள் குழந்தையைக் காப்பாற்றி யிருக்க முடியாது. விஷயத்தைக் கேளுங்கள்! நான் உங்களிடம் பிறகு வருவதாய்க் கூறி விட்டு, இவருடைய வீட்டுக்குத்தான் அவசரமாய்ச் சென்றேன். இவருடைய குழந்தை ஆபத்தான நிலையில் இருப்பதாய் அறிந்து நான் போனதும் இவர் என்ன சொன்னார் தெரியுமா! ‘டாக்டர்! இப்போது உங்களைத் தேடிக் கொண்டு ஒருவர் வந்தாரே! அவர் என் அத்யந்த நண்பர். அவர் குழந்தை அதிக அபாயமான நிலையில் உள்ளதாய்த் தெரிகிறது. அவர் ஒரு வாரமாய் ஆபீசுக்கும் லீவு போட்டு விட்டார். இப்போது அவர் உங்களிடம் வந்த அவசரத்தைப் பார்த்தபோது, குழந்தையின் நிலைமை மோசமாகி விட்டது என்று தோன்றுகிறது. நான் உங்களை அழைத்துவிட்டுத் திரும்பும்போது, அவர் உங்கள் வீட்டினுள் நுழைவதைக் கண்டு எல்லாவற்றையும் ஊகித்தேன். என் குழந்தையும் ஆபத்தான நிலையில்தா னிருக்கிறான். ஆண்டவன் விட்டபடி ஆகட்டும். முதலில் அவருடைய குழந்தையைக் கவனித்துவிட்டு வாருங்கள். எனக்கு ஒன்றுக்கு மூன்று குழந்தைகள் இருக்கின்றன. ஏதாவது விபரீதமாய் நேர்ந்தாலும், மற்ற இரு குழந்தைகளைப் பார்த்து, மனம் ஆறுதல் பெறலாம். ஆனால் அவருக்கு இருப்பது ஒரே குழந்தை. ஏதாவது விபரீதம் நேர்ந்தால், அவரைத் துயரம் அதிகமாய் வாட்டும். எனவே தயவுசெய்து அந்தக் குழந்தையை முதலில் கவனித்துவிட்டு வாருங்கள்’ என்று என்னைத் துரிதமாய் உங்கள் வீட்டுக்கு அனுப்பினார். உங்கள் நண்பருக்கு முதலில் நன்றி கூறுங்கள். இவருடைய தூய உள்ளமே இவருடைய குழந்தையையும் காப்பாற்றி விட்டது. தூய உள்ளமும் நேர்மையான புத்தியையும் படைத்தவர்களைக் கடவுள் கைவிடுவதில்லை” என்று கூறி முடித்தார் டாக்டர்.

ஆவேசம் வந்தவனைப் போல நான் என் நண்பன் ராஜகோபாலனைக் கட்டிக்கொண்டு, கண்ணீர் வடித்தேன். “ராஜு! என்னை மன்னிப்பாயா!” என்று நாத் தழுதழுக்கக் கூறினேன்.

“சீனு! மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது; மனிதன் செய்ய வேண்டிய தர்மத்தை யொட்டிய கடமையைத்தான் செய்தேன். போகட்டும். நமது இரு குடும்பங்களும் பிரிந்து போகச் சில காரணங்கள் ஏற்பட்டது போல, பழையபடி ஒன்று சேரவும் ஒரு காரணம் ஏற்பட்டது. அவ்வளவு தான்” என்றான் ராஜு.

இத்தனை உத்தமனான என் நண்பனும் அவன் மனைவியும் ஏன் என் பிள்ளையின் அட்சராப்பியாசத்திற்கு மட்டும் வரவில்லை என்ற சந்தேகம் எழுந்தது. அதற்குத் தக்க விடையும் கிடைத்தது. நான் அனுப்பிய அழைப்புச் சீட்டை, காரியாலயச் சேவகன் கைதவறி எங்கோ வைத்து விட்டு, ‘அவரிடம் கொடுத்தாகி விட்டது’ என்று புளுகி யிருந்தான். என் மனைவியும் ராஜுவின் மனைவியை அழைத்ததாய் என்னிடம் கூறியது பொய் என்று தெரிவித்தாள். தன்மானம் குறுக்கிட்டதால் அவள் பங்கஜத்தை அழைக்கச் செல்லவில்லை போலும்!

நானும் சரஸுவும் ராஜு தம்பதிகளைத் தலை நிமிர்ந்து பார்க்கவும் தைரியமில்லாமல் சில நாட்கள் திண்டாடினோம். இப்போது பழைய நிலைமை வந்து விட்டது. அதாவது எங்கள் ஒற்றுமையைத்தான் குறிப்பிடுகிறேன்! பிரிந்த குடும்பம் மறுபடியும் ஒன்று சேர்ந்தது.




# மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப்படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாசன நுரை அழுக்கை அகற்றி, சருமத்தினுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்குப் புஷ்டியும் மென்மையும் தரும். அபூர்வ மணம். நுட்பமான சருமத்திற்கும் ஹானியற்றது.

**A CALCHEMICO PRODUCT**

மதராஸ் ஆபீஸ்:

**5/149, ப்ராட்வே, மதராஸ்-1**




பிளாஸ்டிக் குழாய்களில் இப்பொழுது கிடைக்கும்.



## பைல் பீன்ஸ் மலச்சிக்கலையும் அசதியையும் போக்குகிறது.

மலச்சிக்கல், வயிற்றுக்கோளாறு, மற்றும் உங்கள் உடலை வாட்டி வதைத்து சக்தியை இழக்கச்செய்யும் நோய்களைத் தடுக்கிறது. டாக்டர்கள் சோதனை செய்து அங்கீகரிக்கும் பைல் பீன்ஸை இன்று முதல் கிரமமாக உபயோகித்து கட்டுதிட்டமாகவும், ஆரோக்கியமாகவும், வாலிபத்தோற்றத்தோடும் இருக்க முயலுங்கள்.




வாழ்க்கையை இன்பமாகக் கழியுங்கள்-டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொள்ளுங்கள்.

## பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸ்க்கு சோல் ஏஜண்ட்கள்: தாதா & கோ., பார்க்டவுன்

# தாய்க்குப் பின்...

வி. எஸ். ஸ்ரீநிவாஸன்

எறும்புக் கூட்டம் போல் நாலா புறங்களிலிருந்தும் குமாஸ்தா கும்பல்கள் வெகு வேகமாக 'விக்டோரியா டெர்மினஸ்' ஸ்டேஷனை நோக்கி வந்து கொண்டிருந்தன.

கையில் அன்றையத் தினப் பத்திரிகை, ஆபீஸ் பைல் கட்டு ஒன்று இத்யாதிகள் சகிதம் ராமநாதனும், எட்டாவது பிளாட்பாரத்தில் மாதுங்காவிற்குப் புறப்படத் தயாராக இருந்த மின்சார ரயிலில் ஏறி உட்கார்ந்தார்.

ராமநாதன் ரயில்வேயில் ஒரு குமாஸ்தா. முப்பத்தி ஐந்து அல்லது முப்பத்தி ஆறாவது வயதை எட்டிப் பார்க்கும் அவர், பார்ப்பவர்கள் கூட ஐந்து வயதைச் சேர்த்து மதிப்பிடும் அளவிற்கு முதிர்ச்சி யடைந்திருந்தார். நரையோடிய அவரது தலையும், சுருக்கம் பல விழுந்து களையிழந்த முகமும், அவர் வாழ்க்கையில் மேடு பள்ளங்கள் அதிகம் என்பதற்கு அத்தாட்சியாக இருந்தன. ஆச்சரியம் என்னவென்றால் அவர் அதுவரை மணம் செய்து கொள்ளாமல் தனியாக வாழ்க்கை நடத்தி வந்ததுதான்!

தாங்க முடியாத ஜனக் கூட்டத்தைச் சுமந்து கொண்டு அந்த மின்சார ரயில் 'விக்டோரியா டெர்மினஸ்'ஸை விட்டுப் புறப்பட்டது.

ராமநாதன் பத்திரிகையைப் பிரித்துச் செய்திகளில் கண்ணோட்டத்தை விடுத்தார். படிப்பதில் சிறிது நேரத்தில் அவருக்கு அலுப்புத் தட்டியது. சாவதானமாகப் பத்திரிகையை மடித்து வைத்து விட்டு ஜன்னல் பக்கமாக வரிசை வரிசையாகக் கடந்து சென்ற பம்பாய் நகரத்தின் தனிப் பெரும் செல்வமான பிரம்மாண்டமான கட்டிடங்களையும், தொழிற்சாலைகளையும் எதிரே அசுர வேகத்துடன் காலியாக வரும் மின்சார வண்டிகளையும் பார்வை விடுவதில் ஈடுபட்டார்.



சில தினங்களாகவே ராமநாதனின் உடல் நிலை சரியாக இல்லாமலிருந்தது. அதுவும் அன்று காலை முதல் இடைவிடாத தலைவலி, அத்துடன் மனவேதனை அதிகமாக இருந்ததால் காரியாலயத்தில் வழக்கம் போல் வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை.

சென்ற சில தினங்களாக அவரை வாட்டி வதைக்கும் அந்தப் பிரச்னை மறுபடி அவர் உள்ளத்தில் 'தான் யாருக்காக அப்படி உழைக்க வேண்டும்!' என்று கேள்விக் குறி யிட்டு நின்றது.

ராமநாதன் சிறுவயதிலேயே தாய் தந்தையரை இழந்த துரதிருஷ்டசாலி. தவிர இரண்டு சகோதரிகளையும் அவரையும் காப்பாற்றும் பொறுப் பேற்றுக் கொண்ட அவர் மாமா, ராமநாதன் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறி உத்தியோகத்தில் அமர்ந்ததும், இனி தம் பொறுப்பு விட்டது என்ற முடிவிற்கு வந்தவர் போல் கண்ணை மூடிக் கொண்டார்.

இரண்டு பெண்களுக்கு வரன் தேடி மணம் செய்து முடிக்கும் பொறுப்பு சுலபமானதா! ராமநாதனின் மூத்த சகோதரியின் கல்யாணம் நடந்ததும், அவருக்கு 'கோவாப்பரேடிவ் பாங்கி'யில் மூவாயிரம் ரூபாய் கடன் ஏற்பட்டது. அதை அடைப்பதற்குள் பல வருடங்கள் சகடக்கால் போல் உருண்டு ஓடின.

அவர் முப்பதாவது வயதை எட்டிப் பிடிக்கும் போது இரண்டாவது சகோதரி பார்வதம் திருமணப் பருவத்தைத் தாண்டிக் குதிர்போல் வளர்ந்து நின்றாள்! ராமநாதன் மறுபடி வரனுக்காக அலைந்தார். மற்றுமொரு தடவை பெரும் கடன் சுமையை ஏற்றுக் கொண்டு, பெரிய இடமாக இல்லா விட்டாலும் 'மோசமில்லாத' ஓர் குடும்பத்தில் பார்வதத்தின் மணம் நடந்தது. இரண்டாவது சகோதரியின் கல்யாணம் முடிந்ததும் கடமையைச் சரிவரச் செய்து முடித்த பெருமிதமும் ஆறுதலும் ஏற்பட்ட போதிலும், கூடவே குறைந்த சம்பளத்தில் மிகப் பெரிய கடனைத் தீர்க்க வேண்டிய கவலை, அவருக்குப் பயத்தைக் கொடுத்து நிம்மதியைப் பறித்துக் கொண்டது!

புக்ககம் சென்ற இரண்டு சகோதரிகளும் மாற்றி மாற்றி ராமநாதனுக்கு மேலும் செலவுகளை வைத்துக் கொண்டிருந்தனர். கடிதம் எழுதும் ஒவ்வொரு சமயமும் பம்பாயிலிருந்து தங்களுக்கு வாங்கி அனுப்ப வேண்டிய சாமான்களின் நீண்ட 'ஜாபிதா'வும் அனுப்ப அவர்கள் தவறியதில்லை! அதைக் கண்டதும் ராமநாதனுக்கு முதலில் கோபம் கோபமாக வந்தாலும், கூடவே தாய் தந்தையற்ற அவ்விரு ஜீவன்களுக்கும் தன்னை விட்டால் ஆதரவு யார் என்ற பரிவும் தளிர்விடுமாகையால் சகோதரிகள் எதைக் கேட்டாலும் 'இல்லை' என்ற பதிலை நாளதுவரை பெற்றதில்லை!

கடன் கொண்ட நெஞ்சம் கலக்க முற்றிருக்கையில் தன் சொந்தத் திருமணப் பிரச்னையைப் பற்றிச் சிந்தனை எப்படி இருக்க முடியும்? இவர் நிலையை அறிந்த பெண்ணைப் பெற்றவர்கள் அவரை அணுகவேயில்லை! தெரியாமல் வந்த ஓரிரண்டு வரன்களையும் 'தான் தற்பொழுது திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை' என்று அவரே தட்டி விட்டார்.

சில வருடங்கள் கழிந்ததும் தனிமை வாழ்க்கையில் சலிப்புக் கொண்ட அவர் தமக்கென்று ஒருத்தியை உடைமையாக்கிக் கொள்ளும் முடிவிற்கு வந்தார். இதையறிந்த, பெண்ணைப் பெற்று விட்டு வரனுக்கு அலைந்த பலர், ராமநாதனை வளைய வந்தனர். வயது அதிக

மாகி, பார்வைக்கும் அவ்வளவு திருப்திகரமாக இல்லாத போதிலும், இரண்டாம் தாரமாகத் தங்கள் பெண்களை வேறு இடத்தில் கொடுப் பதைவிட, ராமநாதனிடம் ஒப்படைப்பதே நல்லது என்ற எண்ணத்துடன் வந்தனர்.

இரண்டொரு இடங்களில் பெண் பார்க்கப் போன படலம் அவர் வாழ்க்கையில் மறக்க முடி யாத சம்பவங்களாகி விட்டன.

முதல் வரன். கடுத்தரமான குடும்பம். பெண் ராமநாதனுக்குப் பிடித்து விட்டது. ஆனால் அந்தப் பெண் இவரைக் கண்டதும் முகத்தைச் சுளித்துக் கொண்டது மன்றி "வரன் பார்ப்பதற்கு நன்றாக இல்லை" என்ற மணியான அபிப்பிராயத்தையும் தெரிவித்து விட்டாள்!

இதனால் அலுத்துப்போன ராமநாதன் சில மாதங்கள் வரை பெண் தேடு படலத்தின் இரண் டாவது அத்தியாயத்தைப் புரட்டவே தயங்கினார்.

"இந்த இடம் முடிந்துவிடும்! பெண் பரம சாது. இருக்கும் இடமே தெரியாது. பெற்றவர்கள் கீறிய கோட்டை நேற்றுவரை தாண்டியதில்லை" என்று அழுத்தமாகக் கூறிய தரகரின் வார்த் தைகள் அவருக்கு நம்பிக்கை ஊட்டின.

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை அந்தப் பெண் ணைப் பேட்டி காணச் சென்றார். பெண்ணைப் பற்றித் தரகர் சொன்னவைகள் உண்மைதான். பெண் வாயைத் திறக்கவே இல்லை! ஆனால் தன் மன அதிருப்தியை மளமள வென்று உதிர்த்த கண் ணீரால் பலர் முன்னிலையில் தெரிவித்து விட்டாள்!

மேற்படி சம்பவங்கள் பெண்ணினத்தின் மீதே அவருக்கு வெறுப்பு ஏற்படச் செய்தன. வீதியில் ஆணும் பெண்ணும் ஜோடியாகப் போவதைக் கண்டால் அவர் மனம் ஏனோ துடிதுடிக்கும். உலகத்தில் எத்தனையோ 'கோர ஸ்வரூபி'கள் கண்ணைப் பறிக்கும் அழகிகளின் கரங்களைப் பற்றிக் கொண்டு, சிட்டுக் குருவிகள் போல் வளைய வருகின்றனர். ராமநாதன் அழகை விரும்ப வில்லை. அவர் வேண்டியதெல்லாம் ஆதரவைத் தர ஓர் மனைவி. வாழ்க்கையில் இன்பத்தையும் துன்பத்தையும் தன்னுடன் பங்கிட்டுக் கொள்ள ஓர் பெண். அதற்கு ஏன் இந்த முட்டுக்கட்டை! அவர் தலையில் மட்டும் விதியின் கை அப்படி எழுதிவிட்டதா!

எதிர்பாராத சமயத்தில் அவர் நண்பன் நாக ராஜன் அந்தச் செய்தியைக் கொண்டு வந்தான்.

அவர் வசிக்கும் வீட்டுக்கு அரு காமையில் வாழ்ந்து வந்த ஓர் குடும்பம். அந்தக் குடும்பத்தில் ஒரு பெண். அந்தப் பெண் ராமநாதனை முன்பே பார்த்திருந்தாள். அவரும் அவளைப் பார்த்திருக்கிறார்.

"அவளுக்கு உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளப் பூரண சம்மதம். நீ சரியென்றால் முகூர்த்தம் வைத்து விட வேண்டியது தான்" என்றான் நண்பன் நாகராஜன்.

அன்றுதான் அவர் தம் வாழ்வில் மகத்தான தவறைச் செய்தார்! இதில் ஏதோ 'கோளாறு இருக்க வேண்டும்' என்ற சந்தேகத்தினால் உந்தப் பட்டு, அந்தப் பெண் தமக்குப் பிடிக்கவில்லை என்று கூறிவிட்டார். நண்பன் பலவாறு சொல்லிப் பார்த்தும் பயனில்லை. ஆனால் கசந்து போன உள்ளத்தில் தன்னம்பிக்கை உணர்ச்சி மறைந்திருந்தது. வாழ்க் கையில் எஞ்சியுள்ள வருடங்களைப் பிரம்மச்சாரி யாகக் கழித்து விடுவது என்ற வைராக்கியம் அவ ருடைய மனத்தை இரும்பாக்கி விட்டது!

* * *

சிதறி ஓடும் சிந்தனைகளை அடக்க முயன்றார் ராமநாதன். ஓடும் ரயில் 'பைக்குல்லா' என்ற ஸ்டேஷனில் ஒரு நிமிடம் நின்றுவிட்டுப் புறப் பட்டது. கலகலவென்று சிரித்துக் கொண்டே வந்த ஓர் இளம் தம்பதிகள் ராமநாதனுக்கு எதிரில் உள்ள பெஞ்சியில் வந்து அமர்ந்தார்கள். பக்கத்தில் பலர் இருக்கும் உணர்வே இல்லாமல் அந்த இளைஞன் அவளிடம் சல்லாபம் செய்ய ஆரம் பித்தான். அவன் எதைச் சொன்னாலும் அவள் சிரித்தாள்! அவள் எப்படிச் சிரித்தாலும் அவன் அதை ரசித்தான்! சிரிப்பும் வேடிக்கையுமாக அவர்கள் இருந்தாலும் அந்த யுவதியின் கரங்கள் மட்டும் நூலைப் பின்னி 'ஸ்வெட்டர்' செய்வதில் ஈடுபட்டிருந்தன.

சரஸ-சகஜ சுபாவமுள்ள அந்த ஆனந்த தம்பதி களைத் தினம் தவறாமல் ஓடும் ரயிலில் வீடு திரும்பும் ராமநாதன் பார்க்கத் தவறியதில்லை. அப்பொழு தெல்லாம் அவர்கள் மீது காரணமற்ற வெறுப் புணர்ச்சி தோன்றி அவர் மனதில் வளர்ந்து வந்தது.

ரயில் மேலே செல்லாமல் 'டக்'கென்று நின்றது. அதைத் தொடர்ந்து பிரயாணிகளின் அரட்டைகள் எழுந்தன.

"இந்த ரயில் என்றைக்குத்தான் நடு வழியில் நிற்காமல் போகுமோ!" என்று அங்கலாய்த்தார் ஓர் தமிழ் இளைஞர்

"தம்பி! உனக்கு இப்பொழுதுதான் கல்யாண மாகி வீட்டு வாசலில் மனைவி ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறாள் என்பதற்காக இந்த ரயில் தன் நீண்ட நாள் பழக்கத்தை மாற்றிக் கொண்டு விடுமா, என்ன! ஒரு நாளைக்குத்தான் நாழி கழித் துப் போகட்டுமே!" என்று சம்மனில்லாமல் குறுக் கிட்டார் இளைஞனை முன்பே நன்கு அறிந்திருந்த ஓர் குடும்பஸ்தர்.

"இல்லையப்பா, மல்லிகைப் பூ வாங்கி வைத் திருக்கிறான் ஆசையாக மனைவிக்கு. அது வாடுவதற் குள் மாதுங்கா போக வேண்டாமா!"—இது மற் றொரு பிரயாணியின் கற்பனைக் காரணம்.



"அதற்கு இறங்கி நடந்தே போய் விடுவதுதானே!" என்றார் வேறொருவர்.

இந்தப் பேச்சுக்களின் என்ன நாஸ்யத்தைக் கண்டானோ, அந்த இளைஞன் அசட்டுப் புன்னகை புரிந்தான்.

ரயில் மறுபடி ஊர்ந்து, விரைந்து, பறந்து—காற்றைப் போல்.

'கடகட' வென்ற சப்தம் ரயில் மாதுங்கா பாயிண்ட்ஸ்களை அணுகி விட்டதை அறிவித்தது. ராமநாத னது மூடியிருந்த இமைகள் பழக் கத்தினால் ஸ்டேஷன் அணுகியதும் தாமாகவே திறந்து கொண்டன.

ரயிலை விட்டு இறங்கியதும், கால்கள் நண்பன் அருணாசலத்தின் வீட்டை நோக்கி நடந்தன. அருணா சலம் இரண்டு தினங்களாகக் காரியாலயத்துக்கு வரவில்லை.



"என்னப்பா அருணாசலம், உடம்பிற்கு என்ன!" என்று கனிவுடன் விசாரித்துக் கொண்டு உட்கார்ந்தார் ராமநாதன்.

"ஒன்றுமில்லை! இரண்டு நாட்களாகச் சன்னக் கடுப்பும் காய்ச்சலும். இன்று சரியாகி விட்டது. நாளை ஆபீஸிற்கு வந்து விடுவேன். அந்தப் பாவி ஹெட்கிளார்க் பர்வாஸ்கர் என் மேஜையைத் திறந்து 'பெண்டிங் பேப்பர்'களைப் பார்த்து விட்டானோ!" என்று பயத்துடன் விசாரித்தான் அருணாசலம்.

அப்போது அருணாசலத்தின் மனைவி சாந்தா இடை மறித்தாள்.

"ஐயா! இரண்டு நாளாக இவர் படும்பாடு சொல்லி முடியாது. நேற்று இருந்த ஜுரத்தைப் பார்த்து நான் பயந்தே போய்விட்டேன். நீங்களாவது புத்தி சொல்லி விட்டுப் போங்கள். ஆபீஸிற்கு ஒரு வாரமாவது லீவு போட்டு விட்டு நிம்மதியாக இருந்தால்தானே உடம்பு சற்றுத் தேறும்! சுவரை வைத்துக் கொண்டுதானே சித்திரம் எழுத வேண்டும்!" என்றாள் சாந்தா.

அருணாசலம் தன்னுடைய மனைவியின் கவலையைக் கண்டு சிரித்தான்!

* * *

நண்பன் வீட்டிலிருந்து விடைபெற்றுக் கொண்டு ஹோட்டலுக்கு ராமநாதன் நுழைந்ததும், 'டாண்' என்று ஏழு மணி யடித்து முதல் பந்திக்கு இலைகளைப் போட்டு விட்டு ஸர்வர் ராமசாமி தலையைத் தூக்கியதும் ஒன்றாக இருந்தன.

சாப்பாட்டில் ராமநாதனுக்குக் கவனம் செலுத்த முடியவில்லை. பளிங்கு மேஜையில் போடப்பட்டிருந்த பச்சை வாழையிலை போல் அவர் மனத் திரையில் பசுமையாக இருந்த பழைய சம்பவமொன்று நினைவிற்கு வந்தது.

பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் அச்சமயம் சிறுவனாக இருந்த ராமநாதனுக்குக் கண கணவென்று ஜுரம் அடிக்க ஆரம்பித்தது. அவன் தாயார் உயிரோடிருந்த காலம். அன்புடன் பிள்ளையைக் கட்டிலில் படுக்க வைத்துப் பிரமைபிடித்தவள் போன்று அவன் பக்கத்தில் உட்கார்ந்து விட்டாள் தாய்.

இரவு அவர் தகப்பனார் வந்ததும் ராமநாதன் உடம்பைத் தொட்டுப் பார்த்து விட்டு, "சாதாரண ஜுரம்தான். நாளை தானாகச் சரியாகி விடும். சொன்னால் கேட்டால்தானே! கிணற்றடியில் போய் நாள் பூராவும் வாசம் செய்கிறான், பின் ஜுரம் வராமல் என்ன செய்யும்!" என்று கோபப்பட்டார்.

மறுதினம் காலையில் ஜுர வேகம் சற்று அதிகரித்தது.

"ஆபீசுக்குப் போவதற்கு முன் டாக்டரை அழைத்து வாருங்கள். குழந்தையைப் பார்க்கவே எனக்குப் பயமாக இருக்கிறது" என்று மன்றாடி வேண்டினாள் தாயார்.

"வியாதி யென்று வந்தால் இரண்டு நாட்கள் படுத்துத்தான் விடும். டாக்டர் மட்டும் மந்திரவாதியா என்ன, கைப்பட்டதும் வியாதி பறந்து விட!" என்று சொல்லிப் போய்விட்டார் தந்தை.

தாயார் தன் கணவரின் பொறுப்பற்ற தன்மையை எண்ணி விசித்து அழுததும், பிற்பாடு பாக்கி விடாமல் பல தெய்வங்களுக்கு வேண்டிக் கொண்டதும், மைந்தனின் பக்கத்தை விட்டு அகலாமல் இமை கொட்டாது இரவு பகலாய்க் கண்விழித்துப் பணிபுரிந்ததும் மறக்க முடியுமா!

சாப்பாட்டை முடித்துக்கொண்டு ராமநாதன் தன் அறைக்கு வந்து உடுப்புக்களைக் களைந்து விட்டு நேராகப் படுக்கைக்குச் சென்றார். அவர் உள்ளம்போல் உடலும் ஏனோ நடுங்கியது!

இரண்டு தினங்களில் ராமநாதன் படுத்த படுக்கையாகி விட்டார். கடுமையான ஜுரம். ஹோட்டலிலிருந்து 'லெட்டி'ல் வந்த ஆறிப்போன ரஸம், சோறு வாய்க்குள் புக மறுத்தன. காலையிலும் மாலையிலும் நண்பர்கள் வந்து விசாரித்து விட்டுப் போனார்கள். ஆனால்...

தான் ஆதரவு அற்று அனாதை என்ற உணர்ச்சி அவர் உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்தது. கொழு கொம்பில்லாத கொடி உயிர் வாழ முடியுமா! கோலின் உதவியின்றிக் குருடன் நடப்பது எப்படிச் சாத்தியம்! கேவலம் பட்சி சாதிகள்கூட ஆணும் பெண்ணும் கூடி வாழ்க்கை நடத்தும்போது ஆறறிவுள்ள தான் செய்த அசட்டுக் காரியத்தின் பயனாக அல்லவா இப்படி வருந்த வேண்டியிருக்கிறது என்று நினைத்தார்.



பிரபல தோட்ட முதலாளியும், ஸ்ரீ நடராஜா பிரஸ் சொந்தக்காரருமான ஸ்ரீ ஆர். ஏ. நடேசனின் புதல்வி செல்வி கனகாம்பிகைக்கும் பழையனூர் ஸ்ரீ ராமச்சந்திர உடையாரின் புதல்வர் ஸ்ரீ ஆர். சீநிவாசமூர்த்திக்கும் கொழும்பில் சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

நண்பன் அருணாசலத்துக்குச் சாதாரணமாகத் தோன்றிய காய்ச்சல் அவன் மனைவியை எவ்வளவு பயமுறுத்தி விட்டது! தனக்கும் மனைவி என்று ஒருத்தி யிருந்தால், இன்று அவளும் இப்படி இரக்கப்படுவாள் அல்லவா! எனக்குச் சிசுருஷை செய்வாள் அல்லவா!

பக்கத்து வீட்டிலிருந்த ரேடியோ மூலம் 'சத்தியமாகவே, தாய்க்குப் பின் தாரம்...' என்ற இசை காற்றினில் தவழ்ந்து வந்தது! அந்த வாக்கில் தான் எவ்வளவு உண்மை!

ஒரு வாரமாகியும் ஜுர வேகம் தணியாததால் உதவிக்கு வரும்படி சென்னையிலிருந்த இரு சகோதரிகளுக்கும் ராமநாதன் கடிதங்கள் எழுதினார்.

மூன்று தினங்களில் மூத்த சகோதரி கல்யாணியிடமிருந்து பதில் வந்தது. கர்ப்பிணியாக இருக்கும் தன்னால் பம்பாய் வர முடியாமைக்கு வருந்தியதுடன், ராமநாதன் உடல் நிலை குறித்து மறு தபாலில் பதில் எழுதுமாறு கேட்டுக் கொண்டிருந்தாள். அடுத்த இரண்டு தினங்களில் இளையவளிடமிருந்தும் கடிதம் வந்தது.

''அவருக்கு என்னை விட்டுப் பிரிவதென்பது நினைக்கவும் முடியாதாம்! சற்றுக் குணமானதும் நீங்களே இங்கு வந்து இரண்டு மாதமாவது தங்கிப் போகலாம் என்று எழுதச் சொன்னார். வரும்பொழுது மறக்காமல் 'எவர் ஸில்வர்' தட்டுக்களில் அரை டஜனும், டம்ளரில் ஒரு டஜனும், முடிந்தால் எனக்கு 'வாயில்' புடவைகள் இரண்டும் வாங்கி வரவும்'' என்று பார்வதம் எழுதியிருந்தாள்.

இந்த இரு சகோதரிகளுக்காக ராமநாதன் பட்ட பாடு எவ்வளவு!

இப்பொழுதுதான் தன் அவல நிலையும் தான் செய்த தவறும் அவருக்குத் தெரிய வந்தன. நண்பன் நாகராஜன் கடைசியில் கொண்டு வந்த பெண்ணை ஏற்றுக் கொள்ளாதது எவ்வளவு மூடத்தனம் என்பதை உணர்ந்தார்.

வேதாந்தம் பேசிவிடலாம் 'பிரம்மச்சாரியாக இருந்து விடுவேன்' என்று! ஆனால் வாழ்க்கையின் பிற்பகுதியில், ஏன் வாழ்க்கை பூராவுமே, மனிதன் தளர்ந்து ஓயும்பொழுது, பெண்ணொருத்தியின் பந்தமின்றி வாழ்வது முடியும் செயலா!

வெள்ளத்தை எதிர்த்து நீந்த முற்பட்டது எவ்வளவு அசட்டுத்தனம்! உலக நியதிக்கு எதிராக இருக்க நினைத்து வாழ்வைப் பாழாக்கிக் கொண்டது ஏன்! எதற்காக! இனி யாருடைய நலனுக்காக, மாடுபோல் உழைக்க வேண்டும்!

மேற்படி சிந்தனையில் மூழ்கிய ராமநாதன், நள்ளிரவில் பாரம் தாங்காமல் குழந்தைபோல் தேம்பித் தேம்பிக் கதறினார்.

* * *

இரண்டு வருடங்கள் ஓடி மறைந்தன.

ரயில்வேக் காரியாலயத்தில் 'பிராவிடண்டு பண்டு' குமாஸ்தா பஞ்சாட்சரம் ஒரு கையால் தன் வழுக்கை மண்டையைத் தடவிக் கொண்டு மற்றொரு கையால் எழுதிக் கொண்டிருந்தார்.

''என்னடா பஞ்சு! 'லஞ்ச டைமில்' கூடவா வேலை! வாடா போகலாம் டிபனுக்கு'' என்று அருகில் வந்தார் சக்கரபாணி அய்யங்கார்.

''பாவம்! ராமநாதன் என்ற குமாஸ்தா மறைந்துபோய் இரண்டு வருஷங்களாகியும் அவர் பெயருக்கு இருந்த பிராவிடண்டு பண்டு நாலாயிரம் ரூபாய்களைக் கேட்டு 'மனு' ஒன்றும் வரவில்லை. சட்டப்படி அந்தப் பணத்தை 'இதர சிப்பந்திகளின் க்ஷேமலாப நிதி'க்குச் சேர்க்கும்படி எழுதி இன்றுதான் அந்தக் கேஸை முடித்தேன்'' என்று அனுதாபத்துடன் பதிலளித்து விட்டுப் புறப்பட்டார் பஞ்சாட்சரம்!

<u>வட்ட மேஜை</u>

## ராஜாஜியின் 'தண்ணிப் பால்'

பால்காரர்கள் என்றால் அறிவில்லாதவர்கள். இருதயம் என்று ஒன்று இல்லாதவர்கள், பணத்தாசையால் பாலில் தண்ணீர் கலப்பவர்கள், மூரடர்கள் என்று கற்பனைசெய்து கட்டுரை வரைந்த பலரைப் பார்த்துள்ளேன்.

அக்கரைப் பச்சை என்பார்களே அதே போல் பால்காரர்களின் அன்றாட வாழ்க்கையையும் சூழ்நிலையையும் உடனிருந்து பார்ப்பார்களேயானால் தாங்கள் எழுதியது எவ்வளவு பெரிய தவறு என்று பச்சாதாபப்பட்டே தீர்வார்கள் என்று எண்ணி நான் ஏங்கிய நாட்கள் பல.

இதற்கு மத்தியில் ''கல்கி''யில் வெளிவந்த (16-8-53) தண்ணிப் பால் என்னும் கட்டுரையைப் பார்த்தேன். குமுறிய என் உள்ளம் மற்ற எழுத்தாளர்கள் எழுதியவற்றைத் தழுவிச் சில நகைச் சுவையுடன் மிளிரும் என்று எண்ணியது. ஆனால் நான் அநேக ஆண்டுகளாக ராஜாஜியிடம் ஒரு பரிசுத்தமான அன்பும், ஒரு தெய்வீக பக்தியும் பூண்டவன். ராஜாஜி என்ன எழுதினாலும் என்ன பேசினாலும் அதைத் தவறாமல் படிக்கும் பழக்கமுடையவன். (ஏன் என்றால் அவற்றில் தவறாமல் என் அறிவிற்கு ஒரு விருந்திருக்கும்.) ஆக அதனைப் படித்தேன். என் அறிவீனத்தால் என்ன நினைத்தேனோ அதற்கு நேர் மாறாக இருந்தது அக் கட்டுரை. பெரும் வியப்படைந்தேன். ஏழைப் பால்காரர்களிடையே நெருங்கிப் பழகச் சந்தர்ப்பம் இல்லாதவர் எப்படி உள்ளதை உள்ளபடி அறிந்தார் என்று எண்ணி எண்ணி ஆச்சரியமடைந்தேன். திருவல்லிக்கேணியில் பல 'பால் டிப்போ'க்கள் இருக்கின்றன. அவைகளில் சுத்தமான பால் கறந்து வாங்கப்படுகிறது. உள்ளே பெரிய தவலைகளில் அரை பாகம் பவுடர் பால் கலந்த ஜலம் வைக்கப்பட்டிருக்கின்றது. கறந்த பால் அவைகளில் நிரப்பிய உடன் அவைகள் விற்பனை செய்யப்படுகின்றன. இது கண்கூடு. ஆனால் கார்ப்பரேஷன் உணவு பரிசோதகர்கள் வந்து 'சாம்பிள்' எடுக்கின்றனர். அவர்களுக்கு என்ன பால் எப்படி கொடுக்கப்படுகிறதோ, அவைகளில் கலப்படம் என்ற குற்றம் வருவதில்லை. அதற்குப் பதில் ஏழைகளாய், யாசிகளாய், பிழைக்க வேறு வழிதெரியாத தனமற்ற வயோதிக தாய் தந்தையர், புருஷனை இழந்த விதவை இவர்கள் ஒரு படி பாலை விலைக்கு வாங்கிச் சிறிதளவு தண்ணீர் கலந்து குறைந்த விலைக்கு விற்றால் கார்ப்பரேஷன் உணவுப் பரிசோதகர்கள் வேட்டையாடி கோர்ட்டில் கொண்டு நிறுத்துகின்றனர். அங்கு அவர்களுக்கு ரூ. 10 முதல் 100 வரை அபராதம் விதிக்க அந்த அபராதம் கட்ட வழி இல்லாமல் தவிப்பதைப் பார்க்க, நடுக்கடலிலே கப்பலில் சிக்கித் திசை காணாது தவிக்கும் ஒரு ஜீவனைப் போல் இருக்கிறது.

சென்னை
20-8-53 எம். ராமகிருஷ்ணன்

# குடலை ஒழுங்காக வைத்திருங்கள் — உற்சாகத்துடன் விளங்குங்கள்



ஆரோக்யமே சுகவாழ்வுக்கு அடிப்படை. ஆரோக்யம் பெறும் வழி, குடலில் விஷக்கழிவுகள் தங்காமலிருப்பது தான். தளதளக்கும் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள். அதன் சௌம்ய விரேசக குணத்தினால், ஹானிகரமான கழிவடைப் பொருள்கள் அவ்வப்பொழுது வெளியேற்றப் படுகின்றன. உங்கள் ரக்தமும் சுத்தியடைந்து, நீங்கள் பூரண ஆரோக்யமும் உற்சாகமும் பெற அது விசேஷ வகையில் உதவுகிறது.

# ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தென்பாகவும் சுறுசுறுப்பாகவும் வைத்திருக்கிறது




புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட்ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

ENO 6164

# உணர்ச்சிமிகுந்த ஆரோக்யத்திற்கு



**அடமின்**
(திராவகம்;
காப்ஸ்யூல்ஸ்)

ஒருங்கே
திரட்டிய
விடமின்கள்
'ஏ' & 'டி'

குழந்தைகள்,
பாலர்கள்,
வயோதிகர்களுக்கு



**எம். ஜி. பி.**
ஷார்க் லிவர் ஆயில்

விடமின் 'ஏ' 1300 I.U.
விடமின் 'டி' 100 I.U.
உள்ளது.



கவர்ன்மெண்ட் ஆயில்
பாக்டரி, கோழிக்கோடு.

சென்னை இண்டஸ்ட்ரீஸ் &
டிபார்ட்மெண்டின் பகுதி

SSTA'S-CO-20-TAMIL



வெள்ளிக்கோட்டோடு
கூடிய
சைக்கிள் டயர்



**GOODYEAR**
குட்இயர்

டிலக்ஸ்
சைக்கிள் டயர்களும்
டியூப்களும்






ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு : ரா. வீ.

## 14. புலம்பி என்ன பயன்?

மனோரமா தன் தோழி சம்பாவின் மீது பொங்கி வந்த ஆத்திரத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டாள்.

"பம்பாய் நகரத்தில் ஒருவன் தனித்து வாழ முடியாதா. என்ன? அவனை எந்த ஆசை மயக்கி விடுகிறது? இதைச் சொல்லாமல் ஏதோ தலைகால் தெரியாத விஷயத்தை யெல்லாம் சொல்லிக் குட்டையைக் குழப்பப் பார்க்கிறாயே! தெளிவாகத்தான் சொல்லேன். அதுமட்டும் இல்லை. 'என் கணவர் இதில் எல்லாம் மாட்டிக் கொள்ள மாட்டார்' என்று பெருமை வேறு பட்டுக் கொள்கிறாயே! உன் கணவர் அப்படி என்ன நல்லவர்? மாட்டிக் கொள்ள மாட்டார் என்பதுதான் என்ன நிச்சயம்?" என்று கேட்டாள்.

"ஊஹூம், அவர் எல்லாம் மாட்டிக் கொள்ள மாட்டார். அவருடைய சுபாவம் எனக்குத் தெரியாதா? புருஷனின் குணம் தெரியாத மனைவியும் உண்டா?"—சம்பாவின் குரலில் மனைவிக்கு இயல்பான செருக்குத் தொனித்தது; தன் கணவனிடம் தனக்கு எத்தகைய செல்வாக்கு இருக்கிறது என்னும் அகந்தையும் தொனித்தது. "அது மட்டும் அல்ல; நான் ஒருத்தி இருக்கிறேனே! என்னை மறந்து விட்டு இன்னொருத்தியை மனத்தினால் ஸ்பரிப்பாரா? அதனால் தான் பம்பாயில் இருப்பதென்றால் கல்யாண மானவர்கள் தான் இருக்க முடியும் என்று நான் தைரியமாகச் சொன்னேன். கல்யாண மாகாதவர்கள் கெடுவதற்கு வேண்டிய பல சந்தர்ப்பங்கள், பல சூழ்நிலைகள் அங்கே இருக்கின்றனவாம். கல்யாண மானவர்களா யிருந்தால் அந்தப் பயம் இல்லை." சம்பா தன் கணவன் மேல் தனக்கு உள்ள திட நம்பிக்கையையும் தெரிவித்தாள்.

இந்த உலகத்தில் எத்தனையோ கணவர்கள் இம்மாதிரியாக எத்தனை எத்தனை சம்பாக்களை ஏமாற்றிப் பிழைக்கவில்லை? இது அவளுக்குத் தெரிந்தால் இப்படிப் பேசுவாளா? ஒவ்வொரு கணவனும் தன் உள்ளத்தைத் தொட்டுச் சொல்லட்டும். சொல்லக் கூட வேண்டாம்; சிந்தித்துப் பார்க்கட்டும், போதும். ஆனால் இதைப் பரிசீலித்துப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. குறைந்த பட்சம் இந்தச் சமூகத்துக்கு அதைப் பற்றி அக்கறையே இல்லை. அந்த விஷயத்தில் இந்தச் சமூகம் அக்கறை காட்ட வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால் உண்மையை அறிபவர்கள் அவசியம் அறிவார்கள், மனைவியின் கண்களுக் கெதிரே இருக்கும் கணவனும், மனைவியின் கண் பார்வையிலிருந்து விலகியிருக்கும் கணவனும் வெவ்வேறானவர்கள்; மாறான மனப்பாங்கு படைத்தவர்கள் என்பதை. இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டுமே! இங்கே அதைப் பற்றி யாருக்கு அக்கறை? எதற்காக ஒருவர் ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டும்?

மனோரமாவின் மனத்தில் இவ்வாறான எண்ணங்கள் கோடிட்டு மறைந்தன. அவள் சம்பாவைப் பார்த்து, "நீ என்ன சொல்ல விரும்புகிறாய் என்பது எனக்கு விளங்கவே யில்லையே!" என்றாள்.

அதைக் கேட்ட சம்பா சிரித்தாள். "நல்ல வேடிக்கையடி, அம்மா! நீயா புரிந்து கொள்ள வில்லை? நன்றாக வேஷம் போடுகிறாயே!" என்று சொல்லி மனோரமாவின் தலையைப் பிடித்துத் தன் பக்கமாகத் திருப்பிக் கொண்டு அவள் காதோடு காதாக ஏதோ சொன்னாள். அறை காலியாக இருந்தது. அவர்கள் இருவரைத் தவிர மூன்றாமவர் அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டு விடக் கூடியவர்கள் அங்கே யாரும் இல்லை. அப்படியிருக்கும் பொழுதும் பயந்து பயந்து, நாற்புறமும் நன்றாகப் பார்த்து விட்டுக் குறு நகையுடன் மனோரமாவின் காதுகளில் சம்பா ஏதோ சொன்னாளே, அது என்னவா யிருக்கலாம்?

காதோடு காதாகச் சம்பா சொன்னதைக் கேட்டதும் மனோரமா கம்பீரமே உருவாக அமர்ந்து விட்டாள்.

"அங்கே போய் ருசிகண்ட பின் இங்கே ஏதாவது பிடிக்குமா?" "அங்கே, இங்கே"

என்ற இந்த இரண்டு சொற்களையும் சம்பா கம்பீரமான பொருள் தரும் தொனியில் சொன்னாள். பிறகு சிறிது நேரம் கழித்து, "உனக்குக்கூட அவனைத் தெரிந்திருக்கலாம் என்று எண்ணுகிறேன்!" என்றாள்.

"அடி அசடே! உன் கணவரின் தோழனை எனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் மனோரமா.

"நிஜமாகத் தான் சொல்கிறாயா? அவருடைய தோழனை உனக்கு நிஜமாகவே தெரியாதா? உன்னவருடைய தோழனாக இருந்திருந்தால் புரிந்து கொண்டிருப்பாய், இல்லையா?" என்றாள் சம்பா விஷமப் புன்னகையுடன்.

"போடி, போ! எனக்குத் தெரிந்திருந்தால் உன்னிடம் எதற்காக மறைக்கிறேன்?... ஆமாம், அவருடைய பெயர் என்னவாம்?" என்று கேட்டாள் மனோரமா. அந்தக் கேள்வியைக் கேட்கும்பொழுது அவளுடைய நெஞ்சு 'பட பட' வென்று அடித்துக் கொண்டது. ஏனெனில் அடிக்கடி சம்பாவின் கணவன் சுதாகரைப் பார்க்க அவளுடைய பக்கத்து வீட்டுக்கு வருவது உண்டல்லவா? அந்த நினைவு தான் அவளுடைய நெஞ்சத்தை அப்படிப் பட படக்கச் செய்தது. சம்பா யாருடைய பெயரைச் சொல்லப் போகிறாளோ என்று அவள் உள்ளம் தவித்தது.

"சுதாகர்!" என்றாள் சம்பா.

தனக்குப் பிரியமானவர்களின் பெயரை வேறு ஒருவர் சொன்னாலும் அது காதுக்கு ரம்யமாகத் தான் இருக்கிறது. வெகு நாட்களுக்கப்புறம் மனோரமா இந்தப் பெயரைக் கேட்க நேர்ந்தது. அதனால் அவள் அந்தரங்கத்திலே ஒரு விதத் திருப்தி நிலவியது.

"சுதாகரைப் புகழ்வதென்றால் அவருக்குச் சிறிதும் சலிப்பே தட்டாது. எந்த விஷயமாக இருந்தாலும் சுதாகரின் அபிப்பிராயத்தைக் கேளாமல் அவர் ஒன்றும் செய்யவே மாட்டார். 'சுதாகரைக் கேட்டேன். அப்படிச் சொல்கிறான், இப்படிச் சொல்கிறான்' என்பார். எனக்குத் தெரிந்த வரை சுதாகர் கிழிய கோட்டை அவர் மீறியதாகவே நினைவில்லை. ஆனால் இப்பொழுது அந்தக் காலம் எல்லாம் மலையேறி விட்டது. சுதாகர் கெட்ட சகவாசத்தில் இறங்கி விட்டானாம். போக்கிரிகள் கூட்டத்தில் சேர்ந்து சுற்றுகிறானாம். அடிதடி சண்டைக்கு அஞ்சுவதில்லையாம். சீரழிந்த பெண்களுடன் தொடர்பு கொண்டு அவர்கள் வீடே கதி என்று இருக்கத் தொடங்கி விட்டானாம். கடிதங்களில் இதையெல்லாம் எழுதும் பொழுது அவர் பிழியப் பிழிய அழுகிறார் என்றே தோன்றுகிறது. ஏனென்றால் எத்தனையோ எழுத்துக்கள் கண்ணீர்க் கறை பட்டுக் கெட்டிருக்கின்றன. சுதாகர் என்றால் அவருக்கு அவ்வளவு உயிர். அப்படிப் பட்ட உயிருக்குயிரான தோழன் இப்படிச் சீரழிந்து கெட்டழிந்தால் யாருக்குத்தான் மன வருத்தம் இராது?" என்றாள் சம்பா.

அதைக் கேட்ட மனோரமா வியப்பினால் வாய் அடைத்துப் போய் விட்டாள். சுதாகர் எங்கே? சுதாகரைப் பற்றிக் காது கொண்டு கேட்க முடியாத இந்த விஷயங்கள் எங்கே? மெத்தப் படித்த, நாகரிகம் வாய்ந்த நல்ல அறிவாளியான சுதாகரா இத்தகைய கெட்ட சகவாசத்தில் சிக்கிச் சீரழிவான்? அவளால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. 'இதற்கு என்ன செய்வது?' ஒன்றும் அவளுக்குப் புரியவில்லை. அவள் உள்ளத்தை வருத்தமும் வேதனையும் குடைந்து எடுத்தன. சம்பாவின் சொற்களை அவளால் என்னதான் முயன்றும் நம்ப முடியவில்லை. ஆத்திரமுற்றுச் சம்பா சொல்வது அத்தனையும் பொய் என்று சாதிக்கவும் தொடங்கி விட்டாள்.

சம்பா தன் கணவன் தனக்கு எழுதியிருந்த கடிதத்தை மனோரமாவுக்குக் காட்டினாள். அதைப் படித்த மனோரமா அப்படியே கண்ணீர் வடித்தவாறு கல்லாகச் சமைந்து விட்டாள். காரணம், அந்தக் கடிதத்தில் சம்பாவின் கணவன் சுதாகரின் சீரழிந்த நிலைக்கு வருந்திக் கண்ணீர் வடித்திருந்ததுதான்.

"இதனால்தான் பம்பாய் போன்ற நகரம் மணமானவர்களுக்குத்தான் உகந்தது என்று நான் சொன்னேன்!" என்றாள் சம்பா.

சுதாகருக்குக் கடிதம் எழுதினால் என்ன? அல்லது தானே பம்பாய்க்குப் போய்ச் சுதாகரைக் கெட்ட சகவாசத்திலிருந்து காப்பாற்றினால் என்ன என்று எண்ணினாள் மனோரமா. அறிவிற் சிறந்த பெண்மணிகள் தீய வழியில் செல்லும் தங்கள் கணவன்மார்களை எப்படித் திருத்தி நேரான பாதையில் கொண்டு வருகிறார்கள் என்பதைப் பற்றி அவள் புத்தகங்களில் படித்திருந்தாள். ஆனால் இந்தக் காரியத்தை மனைவிமார்கள் அல்லவா செய்ய முடியும்? அவள் யார்? சுதாகர் யார்? அவளுக்கும் சுதாகருக்கும் என்ன சம்பந்தம்? என்ன உறவு? அப்படியிருக்கும் பொழுது அயலானுக்காக அவளுடைய உள்ளத்தில் இவ்வளவு உணர்ச்சியும் கவலையும் துயரமும் ஏற்படுவானேன்?

அவள் உள்ளம் உடைந்து விட்டது. அவளுக்கும் சுதாகருக்கும் ஒரு விதமான சம்பந்தமும் இல்லை. அப்படியிருந்தும் அவள் உள்ளம் அவனை நாடிற்று. அவள் மனம் அவனைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. என்ன வேடிக்கை!

சம்பா விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டாள். மனோரமா அதற்கப்புறம் அவளிடம் அதிகமாக ஒன்றும் பேசவில்லை. வார்த்தை கொடுக்கவில்லை. அவள் சம்பாவைக் கேட்டுச் சுதாகரின் விலாசத்தைத் தெரிந்து கொள்ள விரும்பினாள். ஆனால் வெட்கம் கேட்க வொட்டாமல் அவள் வாயை மூடிவிட்டது. அவள் மனத்தில் எண்ணியது மனத்துக்குள்ளேயே தங்கி விட்டது.

சம்பா சென்றதும் அவள் ஒன்றியாகி விடவே, மறுபடியும் யோசனையில் ஆழ்ந்து விட்டாள். எத்தனை நேரம் வரை அவள் வருத்தத்திலும் வேதனையிலும் உழன்றாளோ, தெரியாது. பிறகு ஏதோ ஒரு பாட்டை முணு முணுக்கத் தொடங்கினாள். இருதயத்தின் அடித்தளத்தில் குமுறிக் கொண்டிருந்த வருத்தமும் வேதனையும் அழுகையாக மாறிப் பின் பாட்டாக உருவெடுத்து வெளி வந்தன. அவன் அந்தப் பாட்டை முணு முணுக்கலானாள் :—

★ குமாரி சசி, பேபி கலா இவ்விருவரின் பரத நாட்டிய அரங்கேற்றம் ஆகஸ்டு மாதம் 16-ம் தேதி, சென்னை அண்ணாமலை மன்றத்தில் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி தலைமையில் நடைபெற்றது.

பல பிரமுகர்களும், பத்திரிகாசிரியர்களும், நாட்டிய மணிகளும் வந்திருந்து சிறுமிகளுக்கு ஆசி கூறி, பரிசுகள் வழங்கினார்கள்.



பூ வுள்ளத்தை வீதீ வாட்டிய பின்
புலம்பி என்ன பயன், பேதை நெஞ்சே ?
உள்ளத்து நம்பிக்கை உதிர்ந்த பின்
உன் கண் நீர் வடிப்பதேன், பேதை நெஞ்சே?

இதைப் பாடிக் கொண்டே வந்த மனோரமா உண்மையாகவே அழத் தொடங்கி விட்டாள். அவள் யாருக்காக அழவேண்டும்? எதற்காக அழ வேண்டும்? அவளுடைய சுதாகர் அவள் கையை விட்டுச் சென்று விட்டான். அவளுடைய சுதாகரா? அவளுக்குச் சுதாகர் என்ன உறவு ஆக வேண்டும்? அவனுக்காக அவள் எதற்காக அழ வேண்டும்? இருந்தாலும் அவள் அவனுக்காக அழுதாள் ; கண்ணீர் வடித்தாள்.

* * *

செல்வத்தில் புரளும் ஜமீன்தாரான மாதவப் பிரஸாதுக்குக் குடும்பத்தைக் கவனிக்க ஒரு பெண்-அதாவது மனைவி இல்லாத தனால் வீடு-வாசல், பணம்-காசு, நில-புலன் ஆகியவை வீணாகிக் கொண்டிருக்கின்றன என்றே தோன்றிற்று. தன்னுடைய நன்னடத்தை புயலில் சிக்கிய படகாகச் சக்கரம் சுற்றத் தொடங்கிவிட்டது என்னும் விஷயத்திலும் அவருக்கு என்னளவும் சந்தேகம் எழவில்லை. வேலைக்காரி லக்ஷ்மி அவருடைய வீட்டிலேயேதான் இருந்தாள். தனது எஜமானரின் இருதயத்தை வெற்றி கொள்வதற்காக அவள் செய்து வந்த முயற்சிகள் தொடர்ந்து நடந்த வண்ணம் இருந்தன. தன் மனம் மாறித் தீய வழியில் இறங்கத் துணிந்து விட்டால் என்ன ஆவது என்ற பயம் சதா சர்வ காலமும் மாதவப் பிரஸாதை ஆட் கொண்டிருந்தது.

இந்த உலகமும் மாதவப் பிரஸாதைப் போன்ற நன்னடத்தை வாய்ந்த செல்வவந்தருடன் சம்பந்தம் செய்து கொள்வதைத் தனக்கு ஒரு பெரிய கௌரவமாகக் கூடக் கருதுகிறது. எனவே, விவாகத்துக் கேற்ற வயது வந்த பெண்கள், வயது வராத பெண்கள் ஆகிய எத்தனையோ பெண்களுடைய தகப்பன்மார்கள் 'நான் பெண் கொடுக்கிறேன், நான் பெண் கொடுக்கிறேன்' என்று மாதவப் பிரஸாதைத் தேடி வரலாயினர். எத்தனையோ இடங்களிலிருந்து எத்தனையோ பெண்களைப் பற்றி ஏகமாகச் சிபார்சுகள் வந்து குவியலாயின. தினம் தினம் மாதவப் பிரஸாத் பல பெண்களின் ரூப லாவண்யங்கள், குணாதிசயங்கள், அவர்களின் பெற்றோர்கள், அந்தக் குடும்பங்களின் நிலைமைகள் ஆகிய சகல வரலாறுகளையும் காது புளிக்கக் கேட்டுத் தீர்க்க வேண்டியிருந்தது. தன் பொருளை வாங்குபவர்களின் தலையில் எப்படியாவது கட்டியே தீர்ப்பது என்று கடைக்காரன் எண்ணி ஏகமாக வர்ணிப்பானே, அதே ஆசை பல பெண்களின் தகப்பனார்களிடம் காணப்பட்டது. எத்தனையோ தகப்பன் மார்கள் தங்கள் பெண்களின் ரூபலாவண்யத்தையும் குணாதிசயத்தையும் தாமே வர்ணிப்பார்கள். அதுவும் எப்படி? பிறவிக் கவிஞன் என்று சொல்கிறோமே, அவன்கூட அவர்களிடம் பிச்சை வாங்க வேண்டும். அவ்வளவு அழகிய பாஷையில் வர்ணித்தார்கள். அவர்களுடைய அந்த வர்ணனைகளை மாதவப் பிரஸாத் விரும்பியோ விரும்பாமலோ கேட்டே தீரவேண்டியிருந்தது.

அவர்களோ பெற்றவர்கள். அவர்கள் தங்கள் தங்கள் பெண்களைப் பற்றி வர்ணித்த அதே வர்ணனைகளை வேறு ஒருவன் அவர்கள் எதிரிலேயே வர்ணிக்கத் தொடங்கினால், ஆத்திரத்தினால் குமுறி அவனுடன் அவர்கள் ஒருவேளை சண்டையிடத் தொடங்கினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

வர்ணித்ததோடு மட்டும் அல்ல ; அவர்கள் தங்கள் பெண்களை மாதவப் பிரஸாதுக்குக் காட்டவும் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தார்கள். பெண் என்றால் பணக்காரனின் கழுத்தில் கட்ட வேண்டிய பொருளா? விவாகம் என்பது ஒரு வியாபாரமா? இதையெல்லாம் அவர்களிடம் யார் கேட்பார்கள்? யார் சொல்லுவார்கள்?

இதையெல்லாம் கேட்கக் கேட்க மாதவப் பிரஸாதின் மனத்தை என்னவோ செய்தது.

எதிலும் அவருடைய மனம் ஈடுபாடு கொள்ள வில்லை. எதற்காக அவர் மணம் செய்து கொள்ள வேண்டும்? வேலைக்காரி லக்ஷ்மிதான் மாதவப் பிரஸாதைக் கண்ணும் கருத்து மாகக் கவனித்து வந்தாளே! அவருக்கு வேண்டிய சிசுருஷைகள் அனைத்தும் அவள் தான் செய்து வந்தாளே!

ஆனால்...

லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு வண்டி யில் ஹாய்யாகக் காற்று வாங்கப் போக முடியுமா? அவளைத் தன் சொத்துக்கு எஜமானியாகத்தான் ஆக்க முடியுமா? என்ன தான் இருந்தாலும் அவள் வேலைக்காரி வேலைக்காரிதானே?

யோசித்துப் பார்க்கும் பொழுது, ராம லாலின் பெண் மனோரமா ஒருத்திதான் மாதவப் பிரஸாதின் மனைவியின் ஸ்தானத் தைப் பெற அருகதை உள்ளவளாகத் தோன் றினாள். முதல் மனைவியின் நினைவை மாற்றி மறந்துவிடச் செய்யக்கூடிய அளவுக்கு அவ ளிடம் சௌந்தரியம் குடி கொண்டிருந்தது.

பார்க்கக் கூடப் பிடிக்காதவர்களுடன் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்றால் எப்படிக் கல்யாணம் செய்து கொள்ளுவது? ராமலாலோ சுபத்திராவோ மாதவப் பிரஸாதின் இஷ்டத்துக்கு விரோத மாகப் போகக் கூடியவர்கள் அல்ல. மாதவப் பிரஸாத் தமது பிறந்த நாள் வந்த பொழுது மனோரமாவுக்குப் பரிசளிக்க விரும்



பினார். ராமலால் தம் பெண் மனோரமா வுக்கு அவர் பரிசளிக்க விரும்பிய விஷயத்தில் மாறு சொல்லவில்லை; மகிழ்ச்சியுடன் சம் மதம்தான் தெரிவித்திருந்தார். அப்படி அவர் சம்மதம் தெரிவித்ததற்கு என்ன பொருளா யிருக்கலாம்? அவர் அதற்குச் சம்மதித்தி ருந்து என்ன குறைவாகிறது? மாதவப் பிரஸாத் மனோரமாவை மணக்க விரும்பினால் மணந்து கொள்ளலாம் என்பதுதானே?

அவர் மனோரமாவை ஏன் மணந்து கொள் ளக் கூடாது? அவரை விட நல்ல வரன் அவளுக்கு வேறு எங்கே கிடைத்துவிடக் கூடும்? மனோரமாவுக்கு இன்பம் அளிக்கக் கூடிய ஆற்றல் அவரைக் காட்டிலும் வேறு யாருக்கு இருக்க முடியும்?

மாதவப் பிரஸாதின் பணம் படைத்த உள்ளம் தன் ஆசையைத் தீர்த்துக் கொள்ள இவ்வாறு வழி தேடியது. மனோரமாவை மணந்து கொள்வதுதான் எவ்விதத்திலும் உசிதம் என்று கோட்டை கட்டியது. கோட்டை மட்டுமா? முடிவேகூடக் கட்டி விட்டது. அப்புறம் மனோரமாவை எப்படி யெல்லாம் சந்தோஷப் படுத்தலாம் என்று திட்டம் போடத் தொடங்கி விட்டது.

அவர் தம் பணத்தினால், நில-புலன்களி னால், அருமை-பெருமைகளினால், வேலைக் கார — வேலைக்காரிகளினால் மனோரமாவை இன்ப உலகத்துக்கே இட்டுச் சென்று விட லாம் என்று எண்ணமிட்டார். அப்படி அவர் எண்ணமிட்டது இயல்புதானே? ஏனெனில் அவர் அவர் தங்கள் தங்கள் அந்தஸ்தையும் செல்வாக்கையும் பெருமை யையும் எண்ணிப் பூரிப்பதில், பெருமிதம் கொள்வதில் தவறு என்ன? அதுவும், அந் தஸ்தும் செல்வாக்கும் பெருமையும் பிறரைச் சந்தோஷப் படுத்துவதற்கு உபயோகப்படு கிறது என்றால் பெருமையும் பூரிப்பும் மட்டும் என்ன, செருக்குக் கூடக் கொள்ளலாமே!

பிரம்பைக் காட்டிப் பையன்களைப் பய முறுத்தும் உபாத்தியாயர் என்ன எண்ணு கிறார்? தம் செல்வாக்கை உபயோகித்து, அதை நிலை நாட்டிப் பையன்களைச் சீர்திருத் திச் சரியான பாதையில் தாம் கொண்டு வருவதாகத்தானே எண்ணுகிறார்? ஆனால் தமது அந்தச் செய்கைக்குள் என்ன பொருள் பொதிந்திருக்கிறது என்பதை அவர் கடுகள வாவது சிந்தித்துப் பார்க்கிறாரா? சிந்தித்துப் பார்த்தால், பிரம்பைக் காட்டிப் பையன் களைப் பயமுறுத்திச் சீர்திருத்தப் பார்க்கும் அவருக்குத் தமது சீர்திருத்தம் அர்த்தமற்றது, தீங்கு விளைவிப்பதாகக் கூடச் சில சமயம் முடியலாம் என்பது விளங்கி யிராதா? ஒரு வேளை மாதவப் பிரஸாதின் மனக் கோட்டை களும் அத்தகையதாகி விடுமோ?

மாதவப்பிரஸாத் தலை நிமிர்ந்து பார்த்தார் எதிரே மாட்டப் பட்டிருந்த அவருடைய மனைவியின் படம் அவரைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. (தொடரும்)

# சோஷலிஸம் ஏன் வேண்டும்?

— எம். சுப்பு



ஒரு வளைகுடாக் கடலின் ஓரத்தில் ஒதுங்கும் மீன்களைப் பிடித்துத் தின்று சில ஆலாப் பறவைகள் ஜீவித்து வந்தன. சிறிது காலத்தில் அங்கு, மீன் பிடிக்கும் செம்படவர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் வலை வீசி அதில் பிடிபடும் பெரிய மீன்களை எடுத்துக் கொண்டு சிறிய மீன்களைக் கரையில் எறிந்து விடுவது வழக்கமாக இருந்தது. அந்தச் சிறு மீன்களை ஆலாப் பறவைகள் சுலபமாகப் பொறுக்கித் தின்றுவிட்டு நிம்மதியாக இருந்து வந்தன. முன்போல் அவைகள் தண்ணீரில் மிதந்து சென்று தங்களுடைய அலகுகளினால் மீன் பிடிக்கும் தொந்தரவு தினசரி இல்லாமல் போய் விட்டது. இவ்விதம் ஆலாப் பறவைகள் சுலபமாகச் சில காலம் வாழ்க்கை நடத்திய பிறகு, வயதான பறவைகள் இறந்து போய் விட்டன. இளம் பறவைகள் பெற்றோர்களைப் பின் பற்றி, செம்படவர்கள் எறிந்துவிட்டுச் செல்லும் சிறு மீன்களைச் சுலபமாகப் பொறுக்கித் தின்று கொண்டு வந்தன. இவ்விதச் சூழ் நிலையில், திடீரென அக் குடாக் கடலில் மீன்கள் நடமாடுவது குறைய ஆரம்பித்து விட்டது. அதனால் செம்படவர்கள் அங்கு வருவதை நிறுத்திக் கொண்டு விட்டனர். இளம் ஆலாப் பறவைகளுக்குச் செம்படவர்கள் விட்டெறியும் சிறு மீன்கள் இல்லாமற் போய்விட்டன. அவைகள் தாங்களாகக் கடலின் தண்ணீரில் மிதந்து சென்று அலகுகளினால் மீன் பிடிக்கும் யுக்தி பழகியிராத காரணத்தால், பட்டினியால்வாடி, கடைசியாக உயிர் துறக்கவும் நேரிட்டு விட்டது.

இந்தக் கதையை முதலாளித்துவ நாடுகள் கம்யூனிஸ்டுக் கொள்கையைப் பரிகசிப்பதற்காகச் சொல்வது வழக்கம். கம்யூனிஸ்டு ராஜ்யத்தில் சர்க்கார் ஒவ்வொருவருக்கும் ஜீவனோபாயத்திற்கு வசதிகள் அளித்து, அவர்கள் இட்ட வேலையை அடிமைகளைப்போன்று ஒவ்வொருவரையும் செய்யச் செய்து பொருளாதாரத் துறையில் காரியம் நடத்தி வருகிறார்கள். திடீரென சர்க்காருக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டு நிலை குலைந்து விடுமானால், ஜனங்கள் தாங்கள் சுயேச்சையாக வேலை செய்து தங்களுடைய ஜீவனோபாய வசதிகளைத் தேடிக் கொள்ளத் தெரியாமல், மேற்சொன்ன கதையில் ஆலாப் பறவைகள் பட்டினியால் வாடி மடிந்து போனதுபோல் மடிந்து விடுவார்கள் என்பது அந்தக் கதையின் உட்பொருளாகும்.

அமெரிக்கா தேசத்தில் சில நகரங்களில் உள்ள பெரிய பெரிய கடைகளில் சில விநோதமான சரக்குகள் விற்பனையாகின்றன. வீட்டில் வளர்க்கும் நாய்களுக்குக் குளிர் காலத்தில் போர்த்திக் கொள்வதற்காக விலையுயர்ந்த 'பர்' கோட்டுகள் விற்கப் படுகின்றன. பாதங்களில் அணிவதற்காக விலையுயர்ந்த செருப்புகள் விற்கப்படுகின்றன. கழுத்தில் அணியும் வாருக்கு ரத்தினங்கள் பதித்து விற்கப் படுகின்றன.

அதே குபேர அமெரிக்க நாட்டில், வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டு உடுக்க உடையும், சரியான போஜனமு மில்லாது தவிக்கின்ற ஏழைகள்—ஆறறிவு பெற்ற மனிதர்கள் லட்சக் கணக்கில் இருக்கத்தான் செய்கிறார்கள்.

நமது இந்தியா தேசத்தில் சர்தார் பட்டேல் மகாராஜாக்களையும், ஜமீன்தார்களையும் மூட்டை கட்டி அனுப்புவதற்கு முன் நடந்த சம்பவங்களில் ஒன்று: ஒரு மகாராஜா சீமைக்குச் சென்றிருந்த போது பந்தயத்தில் ஜெயித்த ஒரு குதிரையைப் பிரியத்தோடு சுமார் இரண்டு லட்ச ரூபாய்கள் கொடுத்து விலைக்கு வாங்கினார். அதை இந்தியாவில் தமது சமஸ்தானத்திற்குக் கொண்டு வந்து, சிறந்த சாரதிகளைக் கொண்டு பழக்கித் தாம் சவாரி செய்வதற்காக அதன்மேல் ஆசையுடன் ஏறி உட்கார்ந்தார். ஆனால் அந்தக் குதிரை இடக்குப் பண்ண ஆரம்பித்தது. சாரதிகள் எவ்வளவோ முயன்றும், அந்தக் குதிரை அடங்கி நடக்க மறுத்து விட்டது. மகாராஜாவுக்குத் தமது ஆசை நிறைவேறாமல் போனது குறித்துக் கோபம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது. குதிரையின் மேல் பெட்ரோலை ஊற்றி நெருப்பை மூட்டிவிட உத்தரவிட்டார்! ஒரு நிமிஷத்தில் இரண்டு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள குதிரை எரிந்து சாம்பலாய்ப் போய் விட்டது. அதே இந்தியா தேசத்தில் அரை வயிற்றுக் கஞ்சிக்குக்கூட வழியில்லாமல் தவிக்கும் ஏழைகள் லட்சோப லட்சம் பேர் இருக்கத்தான் செய்தனர். அவர்களில் இருநூறு பேருக்கு அந்த இரண்டு லட்ச ரூபாயைத் தலைக்கு ஆயிரம் ரூபாய் விதம் பங்கிட்டுக் கொடுத்திருந்தால், ஒவ்வொருவருக்கும் ஒரு வருஷத்துக்



ஹென்றி போர்டு



குச் சாப்பாட்டுக்கு வசதி ஏற்பட்டிருக்கும். அல்லது இருநூறு பேர்களுக்கும் இருநூறு குடிசைகள் கட்ட முடிந்து குடி இருப்பு வசதிக் கவலை தீர்ந்திருக்கும். ஒரு நிமிஷத்தில் இரண்டு லட்ச ரூபாய்களும் மண்ணாகிப் போயிருந்திருக்காது.

இந்த இரு உபமானங்களையும் போன்ற அனேக உபமானங்களையும் கம்யூனிஸ்டுக் கட்சிக் காரர்கள், முதலாளித்துவக் கொள்கையை ஏளனம் செய்யும் முறையில் எடுத்துக் காட்டுவர். முதலாளித்துவ நாடுகளில் ஒரு பக்கம் பண வீக்கத்தால் பணம் வீண் விரயமாக்கப் படுவதும், மற்றொரு பக்கம் பஞ்சத்தால் வாடும் ஜனங்கள் பண மின்மையால், மரண வாயிலில் கடமாடிக் கொண்டிருப்பதும் சகஜமென்பது மேற் சொன்ன இரண்டு உபமானங்களின் உட்பொருளாகும்.

* * *

நாம் சிறிது ஆராய்ந்து பார்ப்போமானால், இரண்டு கட்சிகளிலும் உள்ள நன்மை தீமைகளை அறிந்து கொள்ளலாம்.

ஒரு கம்யூனிஸ்டு ராஜ்யத்தில் சர்க்கார் தாங்களே விவசாயம், வர்த்தகம், ஆலைத் தொழில், சுரங்கத் தொழில், போக்கு வரத்துச் சாதனங்கள் முதலிய எல்லாவித உற்பத்திச் சாதனங்களையும் எடுத்துப் பொது உடைமையாக்கி விடுவர். எல்லாப் பிரஜைகளுக்கும் ஜீவனோபாயத்துக்கு வசதிகளைத் தேடித் தந்து அவர்கள் ஒவ்வொருவருக்கும் தகுந்த வேலையும் தருகிறார்கள்.

ஆனால் ஜனங்கள் தனித் தனியே தங்கள் ஊதியத்தைத் தாங்களே அடைவது என்ற மனப்பான்மையின் கீழ் வேலை செய்யும்போது இருக்கும் ஊக்கத்தைவிட, பொது உடைமையின் கீழ் அவர்கள் ஊழியம் செய்யும்போது அவர்களுக்கு இருக்கும் ஊக்கம் குறைவாகவே இருக்கும். ஏனென்றால் ஜனங்களின் சுபாவம் சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டது. ஏதோ சில மேதாவிகள் பொதுஉடைமையின் கீழ்ப் பொது நன்மைக்காக முழுமனதுடனும் பிரயாசையுடனும் வேலை செய்ய முன்வரலாம். பெரும்பாலான மக்கள் பொது உடைமையின் கீழ்ப் பொது நன்மைக் காகப் பூரண உற்சாகத்துடன் வேலைசெய்ய முன் வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது.

மேலும் ஒரு பொது உடைமை தொழிற்சாலையில் சர்க்கார் உத்தரவுப்படி மேலதிகாரிகள் திட்டம் வகுப்பார்கள். அந்த மேலதிகாரிகளின் உத்தரவுப்படி கீழேயுள்ள சிப்பந்திகள் தங்கள் தங்கள் கடமையைச் செய்யும்படி நேரிடும். இவ்விதமாக ஒவ்வொருவரும் மேலதிகாரிகளின் உத்தரவுப்படி நடக்க நேரிடுமே தவிரத் தங்கள் சுயபுத்தியுடனும், சுய மனோதர்மத்தைக் கொண்டும் ஒன்றும் செய்வதற்கு வசதி இருக்காது. உதாரணமாகச் சொல்வோமானால், பொது உடைமையின் கீழ் ஒரு ஹென்றி போர்டு (Henry Ford)போன்ற ஒரு தொழிலாளி மேதாவியைப் பார்ப்பது அரிது. ஹென்றி போர்டு, கடிகாரம் பழுது பார்க்கும் கூலியாளாக ஆரம்பித்துத் தம்முடைய சுயமுயற்சியினாலும், சாமர்த்தியத்தினாலும், மனோதர்மத்தினாலும், சலியாத உழைப்பினாலும் உலகத்திலேயே மாபெரும் தொழிற்சாலை எனப்படும் "போர்டு இயந்திரத்தொழிற்சாலை"யைத் தமது வாழ்நாளிலேயே ஸ்தாபித்து வெற்றி மாலை சூடினார். தமது சொந்தத் தொழிற்சாலையானதினால் அந்திய காலத்திலும் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல், தாம் காலமாகும் வரை தமது தொழில் விருத்தியைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டு வந்தார். அதே ஹென்றி போர்டு பொது உடைமையின் கீழ் வேலை செய்து வந்தாரானால் தமது பிரமிக்கத் தக்க ஆற்றலை வெளிப்படுத்தி இவ்விதம் உலகம் வியக்கும் ஒரு மாபெரும் தொழிற்சாலையை நிறுவி இருக்க மாட்டார் என்பது நிச்சயம்.

ஆனால்,—

கம்யூனிஸ்டு நாடுகளில், சுய ஊக்கத்துக்கும் சுயேச்சைக்கும் பங்கம் ஏற்பட்ட போதிலும், பொருளாதாரத்துறையில் நியாயமென்பது சரிவர காட்டப் படுகின்றது. மனிதனுக்கு மனிதன் பொருளாதாரத் துறையில் ஏற்றத் தாழ்வு, கம்யூனிஸ்டு ராஜ்யத்தில் இருக்க முடியாது. ஒவ்வொருவருக்கும் உண்ண உணவும், உடுக்க உடையும், வேலை செய்வதற்கு வசதியும் அளிக்கப்படுகின்றன. ஏழைமை என்பது இல்லை என்று ஆகி விடுகிறது. நமது அமரகவி பாரதியார், கூறியது போன்று "தனி ஒருவனுக்கு உணவில்லையெனின், ஜகத்தினை அழித்திடுவோம்" என்ற அடிப்படையைக் கம்யூனிஸ்டுக் கட்சிக்காரர்கள் கையாளுகிறார்கள். கம்யூனிஸ்டு ராஜ்யத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் என்பது இருக்க முடியாது. நியாய மன்றத்திலும், அரசியல் துறையிலும், மனிதனுக்கு மனிதன் சமத்துவமென்ற முறை எப்படி ஏற்பட்டிருக்கின்றதோ, அப்படியே பொருளாதாரத் துறையிலும் மனிதனுக்கு மனிதன் சரி நிகர் சமானமான நிலையை ஏற்படுத்தச் சர்க்கார் வேலை செய்வர்.

* * *

இன்று கம்யூனிஸ்டு கொள்கையினால் ஏற்படும் நன்மை தீமைகளைப் பார்த்தோம். அதே போல, முதலாளித்துவ கொள்கையினால் ஏற்படும் நன்மை தீமைகளையும் சற்றுக் கவனிப்போம்.





மேலே, பின்னால் சொன்ன இரு உபமானங்களைப் போல முதலாளித்துவ நாடுகளில் பண வீக்கத்தால் பணம் ஒரு பக்கம் வீணாக விரயமாக்கப்படும். மற்றொரு பக்கம் ஏழைகள் வறுமையில் அகப்பட்டுக் கஷ்டப்படுவர். பந்தயக் குதிரை உபமானத்தில் மகாராஜா ஒரு நிமிஷத்தில் இரண்டு லட்ச ரூபாயை எப்படி வீணாக்கினார் என்று கவனித்தோம். அந்த மகாராஜாவுக்கு இரண்டு லட்ச ரூபாய் கஷ்டம் தூசி மாத்திரமாக இருந்தது. இதைப் பொருளாதார சாஸ்திரிகள் அவருக்குப் பணம் பிரயோஜன எல்லை (Marginal Utility)யைக் கடந்து விட்டது என்பர்.

பிரயோஜன எல்லை (Marginal Utility) என்ன என்பதை விவரிக்க இன்னொரு உதாரணத்தைக் கவனித்தால் நன்கு விளங்கும்.

ஒருவன் நான்கு நாட்கள் பட்டினி கிடந்து பசியுடன் இருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவனிடம் உருண்டைச் சாதம் விற்பவனொருவன் வருகிறான் என்றும் வைத்துக் கொள்வோம். அந்தப் பசியாளி முதல் சாத உருண்டைக்கு என்ன பணம் வேண்டுமானாலும் கொடுப்பான். விற்பவன் இருபது ரூபாய் சொன்னால் இருபது ரூபாயும் கொடுத்து வாங்கிச் சாப்பிடுவான். முதல் உருண்டை வாங்கிச் சாப்பிட்டதும், அவனுக்குக் கால் வயிறு நிரம்பி விடுகிறது. அதனால் அடுத்த உருண்டைச் சாதத்துக்குப் பத்து ரூபாய் தான் கொடுக்க முன் வருவான். அதையும் சாப்பிட்ட பிறகு அவனுக்கு அரை வயிறு நிரம்பி விடுகிறது. மூன்றாவது உருண்டைக்கு அவன் ஐந்து ரூபாய்தான் கொடுக்க முன் வருவான். இப்படியாக அவனுக்குத் தேவை குறையக் குறைய உருண்டைச் சாதத்தின் பிரயோஜனமும் குறைந்து விடுகிறது. அதனால் அவனுக்கு, அதன் மதிப்பும் குறைந்து வருகிறது. ஐந்தாவது சாத உருண்டைக்கு நாலணாக்கள்தான் கொடுக்கச் சம்மதிப்பான். ஆறாவது உருண்டைச் சாதத்தை வயிறு நிரம்பி விட்டதால் சும்மா கொடுத்தாலும் வேண்டாமென்று சொல்லி விடுவான். அந்தப் பசியாளிக்கு ஐந்தாவது உருண்டைச் சாதத்தை "எல்லைப் பிரயோஜன" உருண்டைச் சாதம் என்று சொல்லலாம். ஆறாவது உருண்டைச் சாதம் அவனுக்கு "எல்லைப் பிரயோஜன"த்தைக் கடந்தது என்று சொல்லுவார்கள்.

இதைப்போலவே, பணம் ஒருவனுக்குப் பெருகப் பெருக, அவனுக்கு எல்லைப் பிரயோஜனத்தைக் கடந்து விடுகிறது. அதனால்தான் பணக்காரன் பணத்தை வீண் விரயம் செய்ய அஞ்சவதில்லை.



ஒரு சமுதாயத்தில் இரு நூறு பேர்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்தச் சமுதாயத்திலே இரண்டு கோடி ரூபாய் பெறுமானம் உள்ள செல்வம் கடமாடுவதாக வைத்துக் கொள்வோம். அப்பொழுது அந்த இரண்டு கோடி ரூபாயின் பிரயோஜனமும் சமுதாயத்துக்கு அதிக பட்சம் எப்பொழுது ஏற்படுகிறது என்றால், அந்த இரு நூறு பேருக்கு அந்த இரண்டு கோடி செல்வத்தையும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப்படும் போதுதான். அதற்குப் பதிலாக, இரண்டு பேரிடம் ஒரு கோடி தொண்ணூறு லட்ச ரூபாய் பெறுமான செல்வமும், மற்றவர்களிடம் பத்து லட்ச ரூபாய் பெறுமான செல்வமும் கொடுக்கப்படுமானால் அந்தச் செல்வத்தின் உபயோகம் சமுதாயத்துக்கு அவ்வளவு இருக்காது. ஆனால் முதலாளித்துவ நாடுகளில் இம்மாதிரியான அசட்டுத்தனமாகத்தான் செல்வம் விநியோகப் படுகிறது.

அமெரிக்கா போன்ற முதலாளித்துவ நாடுகளில் சர்க்கார் தனிப்பட்ட நபர்களின் சுயேச்சையில், குறிப்பாகப் பொருளாதாரத் துறையிலுள்ள சுயேச்சையில் தலையிடுவது இல்லை என்று பெருமை அடித்துக் கொள்வர். இதனால் என்ன விளைகிறது என்பதைக் கவனிப்போம். பொருளாதாரத் துறையில் மூலதனம் யாரிடம் இருக்கிறதோ, அவர்கள் மூலதனத்தை எந்தத் தொழிலிலாவது போட்டு மேலும் தங்கள் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள வசதி இருக்கிறது. ஆனால் மூலதனம் இல்லாத ஏழைகள் கூலி வேலை செய்து அன்றாடம் தேவைக்கே சம்பாதிக்க முடியாமல் திணற வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, பணக்காரர்கள் பணக்காரர்களாகிக் கொண்டும், ஏழைகள் ஏழைகளாக இருந்து கொண்டும், இருவர்களுக்கு மிடையே இருக்கும் வித்தியாசம் பெருகிக் கொண்டே போக ஆரம்பித்து விடுகிறது.

பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகிக் கொண்டு போகும் விந்தை சமயங்களில் எல்லை மீறிக் கூடப் போய் விடுவதுண்டு. பெரிய கம்பெனிகள் பொருளாதார உலகில் மிகவும் வல்லமை பெற்று, சில்லறைக் கம்பெனிகள் தங்களிடம் போட்டியிடா வண்ணம் அவைகள் தலை எடுக்கும்போதே நசுக்கி விடவும் செய்கின்றன. வேண்டுமென்றே, மேற்சொன்ன பெரிய கம்பெனிகள் தங்களிடம் இருக்கும் பண பலத்தின் செருக்கால், விற்பனை விலையை அடக்கத்துக்குக் குறைத்துச் சிறிய கம்பெனிகளை நஷ்டத்துக்குள்ளாக்கிக் கடையை மூடும்படி செய்து விடுவர். இதற்கு ஏகபோக வல்லமை என்று பொருளாதார சாஸ்திரிகள் பெயரிட்டிருக்கின்றனர்.

இவ்வித ஏகபோகக் கம்பெனிகளின் வளர்ச்சியால், பொருளாதாரத் துறையில் சுயேச்சை என்று முதலாளித்துவ நாடுகள் பறை சாற்றும் கூற்றுக்குப் பங்கம் விளைகிறது.

அமெரிக்காவில் ஏகபோக வல்லமை பெற்ற கம்பெனிகளை ஒடுக்குவதற்காகவும் அவர்களால் பொதுஜனப் பங்கம் ஏற்படாமல் இருக்கும் பொருட்டும், "ஷெர்மன் ஆன்டி டிரஸ்ட் லாஸ்" என்று சட்டங்கள் இயற்றியுள்ளனர். எனினும், சபீ

CBG/13A

அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில் - நாள்முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீர்கள்



டால்கம் பவுடர்



பள பளவென்று ஜொலிக்கும் புதுமைக்கு காஷ்மீர் புக்கே டால்கம் பவுடரை உங்கள் மேல் தாராளமாகத் தூவுங்கள். அது அதிக க்கசிவை உறிஞ்சுகிறது . . . எரிச்சலையும் அறிப்பையும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக் குளிமையுடனும் இனிய வாசனையுடனும், நாள்முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

# காஷ்மீர் புக்கே

## மாணிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்

1806லிருந்து கோல்கேட் உயர்ந்த ரகத்திற்குப் பெயர்போனது.

பத்தில் பெட்ரோல் விற்கும் மூன்று பெரிய கம்பெனிகள், சர்க்கார் மேற்படி சட்டத்தின் கீழ் அவைகளை விசாரணை நடத்த முற்பட்டபோது, சர்க்காருக்குத் தகவல் கொடுக்க மறுத்து விட்டனர். இதனால் என்ன நீதி ஏற்படுகிறது என்றால், ஏகபோக வல்லமை பெற்ற பெரிய கம்பெனிகள் முதலாளித்துவ நாடுகளில் சர்க்காரையும் எதிர்க்கக் கூடும் என்பதுதான்.

அமெரிக்காவில், "சுதந்திர சாஸனம்" என்ற ஒரு "மக்களின் உரிமைச் சாஸனத்தை", தாமஸ் ஜபர்ஸன் என்ற பிரசித்தி பெற்ற ஜனாதிபதி பிரகடனப் படுத்தினர். அதில் "எல்லா மனிதர்களும் சமத்துவமாகச் சிருஷ்டிக்கப் பட்டிருக்கின்றனர்" என்பது ஒரு முக்கியமான வாக்கியமாகும். இந்த உண்மையை, நாகரிகம் படைத்த எல்லா நாட்டுத் தத்துவ சாஸ்திரிகளும் ஒப்புக்கொண்டு, எல்லா அரசியல் திட்டங்களிலும் புகுத்தி இருக்கின்றனர். அந்த வாக்கியத்தின் அர்த்தம், எல்லா மனிதர்களும் சமமாக இருக்கிறார்கள் என்பது அல்ல. ஏனெனில், உலகத்திலுள்ள மனிதர்கள், சிலர் நெட்டையாகவும், சிலர் குட்டையாகவும், சிலர் அறிவாளிகளாகவும், சிலர் முட்டாள்களாகவும் பிறந்திருக்கின்றனர். ஆதலால் மேற்சொன்ன வாக்கியத்தின் உண்மை அர்த்தம் என்னவென்றால் சட்டத்தின் கீழ் மனிதனுக்கு மனிதன் ஏற்றத் தாழ்வு இல்லை என்பதுதான்.

ஒவ்வொரு மனிதனுக்கும் சமமான வோட்டுரிமை அளிக்கப்படுகிறது. ஒரு மனிதருக்கு ஒரு வோட்டுப்போட உரிமை என்றால் மற்றவர்களுக்கும் ஒவ்வொரு வோட்டுப்போட உரிமை உண்டு. ஒரு மனிதன் பருமனாக இருப்பதற்காக இரண்டு வோட்டுப் போடும் உரிமையும், இன்னொருவன் மெலிந்திருப்பதற்காக அரை வோட்டுப் போடும் உரிமையும் எந்த நாட்டிலும் இல்லை.



இதே ரீதியில் ஏனோ முதலாளித்துவ நாடுகளில் பொருளாதாரத் துறைகளில் சமத்துவம் அளிக்கப்படுவது இல்லை. அமெரிக்கா தேசத்தை எடுத்துக் கொள்வோம். ஹென்ரி போர்டு இறந்த பிறகு, அவருடைய பேரன், போர்டு ஜூனியர் அவரது ஆஸ்திகளுக்கு உரிமையாளனான். அதே போர்டு தொழிற்சாலையில் ஒரு தொழிலாளி இறப்பதாக வைத்துக் கொள்வோம். அவனுடைய மகன், தனக்குப் பிதுரார்ஜிதமாக ஒரு சொத்தும் கிடைக்காமல் அன்றாடம் தொழில் செய்து, வாய்க்கும் கைக்குமாக ஜீவனம்சம் செய்ய நேரிடுகிறது. இப்பொழுது அந்தத் தொழிலாளி மகனுக்கும், அனேக கோடி டாலருக்கு வாரிசதாரராக வந்த போர்டு ஜூனியருக்கும் சர்க்கார் பொருளாதாரத் துறையில் சம உரிமை அளித்தது என்று சொன்னால், அது நகைப்பிற்கிடமாகாதா! "போர்டு ஜூனியருக்கும், தொழிலாளி மகன் ஸ்மித்துக்கும் நாங்கள் பொருளாதாரத் துறையில் சுயேச்சை அளிக்கிறோம். அவர்களுடைய பொருளாதார விஷயத்தில் நாங்கள் தலையிடப் போவதில்லை. யார் தனது சாமர்த்தியத்தைக் கொண்டு பொருளாதாரத் துறையில் முன்னேறுகிறார்கள், பார்ப்போம்" என்று சர்க்கார் சொன்னால், அது நீதியாகுமா அல்லது சுயேச்சையாகுமா!

எனவே, முதலாளித்துவ நாடுகளில், பொருளாதாரத் துறையில் ஏழை, பணக்காரர் வித்தியாசம் பெருகி, சமுதாயத்தின் செல்வம் சமுதாயத்துக்கு வேண்டிய பூரண பிரயோஜனங்களை அளிக்காது வீண் விரயமாக்கப்படுவது ஒரு கெடுதல் எனச் சொல்லலாம். சட்ட மன்றத்திலும், அரசியல் துறையிலும் மனிதனுக்கு மனிதன் சமம் என்ற கொள்கையை, பொருளாதாரத் துறையில் அளிக்காதது மற்றொரு பெரும் அநீதியான கெடுதல். பணக்காரர்களிடம் பணம் பெருகிக் கொண்டே போய், ஏகபோக வல்லமை ஏற்பட்டு அவர்கள் மற்றவர்களின் பொருளாதார சுயேச்சைக்குப் பங்கம் விளைவிக்கவும், சர்க்காரையே எதிர்க்கும் அபாயமும் ஏற்படுவது இன்னுமொரு கெடுதல்.

ஆனால், முதலாளித்துவ நாடுகளில் பொருளாதாரத் துறையில், தனி மனிதன் தனது முழு ஊக்கத்தையும் காண்பித்து உற்சாகத்துடன் வேலை செய்யவும், தனது சொந்த மனோ தர்மத்தை உபயோகப்படுத்திப் புதிய புதிய ஆராய்ச்சிகள் செய்து உற்பத்திப் பெருக்கை வேண்டிய அளவு அதிகப்படுத்தவும் வசதிகள் இருக்கின்றன.

• • •

ஆகவே, கம்யூனிஸ்டுக் கொள்கையானாலும் சரி, முதலாளித்துவக் கொள்கையானாலும் சரி, இவைகள் ஒவ்வொன்றிலும் சில நன்மைகள் இருக்கின்றன; சில தீமைகளும் இருக்கின்றன என்பதை நாம் கவனித்தோம். அப்படியானால் நாம் எந்தவழியைப் பின்பற்றுவது என்ற வினா எழுகின்றது. அதற்கு நாம் நமது தெய்வப் புலவர் திருவள்ளுவர் கூறிய,

"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்"

என்ற அற மொழியைப் பின்பற்றினோமானால், நமக்கு ஒரு சரியான விடை கிடைக்கும். கம்யூனிஸ்டுக் கட்சியின் கொள்கையிலுள்ள நீதி முறையான சமதர்மக் கொள்கையாலும், முதலாளித்துவக் கட்சியிலுள்ள சுயேச்சை, சுய ஊக்கம் என்ற கொள்கையாலும் எடுத்துக் கொண்டு இரண்டு கட்சிகளிலுமுள்ள தீமைகளையும் நீக்கி ஒரு திட்டம் நிறுவினால் அதுவே ஒரு சமுதாயத்தை மேன்மைப்படுத்தும் திட்டமாகும். அந்த அருமையான சமதர்மத் திட்டத்தின் மறு பெயரே சோஷலிஸம் என்பதாகும்.

சோஷலிஸக் கட்சிக்காரர்கள் பொருளாதாரத் துறையில் நியாயமாக வழங்க வேண்டிய சமதர்மத்தை நிலை நாட்டுவதே அவர்களின் லட்சியமாகக் கருதுவர். அதாவது, கம்யூனிஸ்டுகளின் முக்கிய லட்சியத்தைத்தான் அவர்களும் பின்பற்றி வருவார்கள்.

ஆனால் அவர்கள் அடிப்படைத் தத்துவங்களில் சிறிய வித்தியாசமும், பின்பற்றும் வழிகளில் பெரிய வித்தியாசமும் இருக்கின்றன.

கம்யூனிஸ்டுக் கட்சிக்காரர்கள், "செல்வம் தொழிலாளர்களால் உண்டாக்கப் படுகிறது. அதனால் அது அவர்களுக்கே சொந்தம்" என்று சொல்வர். சோஷலிஸ்டுக் கட்சிக்காரர்கள், "செல்வம் சமுதாயத்திலிருந்து உண்டாகிறது. அது சமுதாயத்தில் பங்கிடப்பட வேண்டும்" என்பர். இதுவே, அவர்களின் அடிப்படைத் தத்துவங்களில் அமைந்துள்ள சிறிய வித்தியாசம்.

அடிப்படைத் தத்துவங்களை விடுத்து இரு கட்சிக்காரர்களும் பின்பற்றும் முறைகளை ஒப்

பிட்டோமானால் பிரமாதமான வித்தியாசங்கள் உண்டு என்பதை அறிவோம். கம்யூனிஸ்டுகள் தங்கள் லட்சியம் நிறைவேறுவதற்குப் பலாத்காரத்தைப் பகிரங்கமாக உபயோகப்படுத்துவர். ஜனங்களைப் பகிரங்கமாகப் பலாத்காரத்தை உபயோகப் படுத்துமாறு தூண்டுவார்கள். தொழிலாளி, முதலாளிகளுக் கிடையே ஜாதி வெறியை மூட்டி விட்டு, முதலாளி வர்க்கத்தை அடியோடு அனுப்பத் தயங்க மாட்டார்கள். தங்களுடைய லட்சியம், புனிதமான லட்சியம் என்ற காரணத்தால், அதை அடையும் வழிகள் எவ்வளவு கெடுதலாக இருந்தாலும் பரவாயில்லை என்று கருதுவார்கள்.

ஆனால் சோஷலிஸ்டுக் கட்சிக்காரர்கள் காந்திய வழியாகிய அஹிம்சை முறையைக் கையாளுவார்கள். ஜனங்களிடையே தங்களுடைய கொள்கைகளைப் பிரசாரப்படுத்தி அவர்களின் சம்மதத்தின் பேரிலேயே தங்களுடைய கொள்கைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக அமுலுக்குக் கொண்டு வருவர். ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசம் இருக்கக் கூடாது என்று கோரிய போதிலும், பணக்காரர்களை அதற்காகத் துவேஷித்து அவர்கள்மீது பலாத்காரத்தை உபயோகப் படுத்தவோ அல்லது உபயோகப் படுத்துமாறு தூண்டவோ நினைக்க மாட்டார்கள். நமது காந்தி மகான் அருளியபடி லட்சியம் எவ்வளவு நன்மையாக இருந்தாலும் அதை அடைவதற்கு நெறிதவறிய வழிகளைப் பின்பற்றக்கூடாது என்றும், லட்சியம் எவ்வளவு உயர்ந்திருக்கிறதோ அப்படியே அந்த லட்சியத்தை அடையும் வழிகளும் உயர்ந்த பண்பாடுடையதாக இருக்க வேண்டுமென்றும் சோஷலிஸ்டுகள் வற்புறுத்துவர்.





பலாத்காரம் இல்லை......

மேலும், பொருளாதாரத் துறையில் சமதர்ம நீதியை அவர்கள் புகுத்தும்போது ஜனங்களுடைய சுய ஊக்கம் குன்றி அதனால் உற்பத்திப் பெருக்கு குறையா வண்ணம் பாதுகாப்பர். அதே சமயத்தில், சுயேச்சையும் பாதிக்கப்படாமல் அவரவர்களின் சொந்த மனோதர்மத்தையும், அறிவு ஆற்றல்களையும் உபயோகப் படுத்த வசதிகளை அளிப்பர்.

இதை எப்படி அவர்கள் நிறைவேற்றுகிறார்கள் என்று ஒரு கேள்வி எழும். அதற்குச் சில உதாரணங்களைக் கவனித்தால் நன்கு விளங்கும். சோஷலிஸத் திட்டத்தின் கீழ், ஹென்றி போர்டைப் போன்ற ஒரு பெரும் ஆற்றல் படைத்த மனிதர் தமது சுய முயற்சியால் முன்னுக்கு வர வசதி இருக்கும். ஆனால் முதலாளித்துவ நாடுகளைப் போல் அல்லாது அதிகமாக வரியை விதித்து, அவருடைய வருமானத்தைக் குறைப்பர். இருப்பினும் அவர், அவரது ஆயுட்காலத்தில் தமது ஜீவியத்திற்குத் தகுந்தாற்போல் தமது சம்பாத்தியத்தைச் சேமித்து வைக்க அனுமதி கொடுக்கப்படுவார். அவர் இறக்கும்போது அவரது ஆஸ்திகளில் பெரும் பகுதியைச் சர்க்கார் மரண வரி மூலம் எடுத்துக் கொள்ளும். அதனால், அவருடைய பேரன் (போர்டு ஜூனியர்) வாழ்க்கையை ஆரம்பிக்கும்போது, சொற்ப முதலுடன்தான் ஆரம்பிக்க முடியும். அவர் தம் சுய முயற்சியினாலும் அறிவு ஆற்றலினாலும் தனது மூதாதையர் போர்டைப் போன்று முன்னுக்கு வரலாமே தவிர, முதலாளித்துவ நாட்டின் வழக்கப்படி இறந்து போன மூதாதையரின் சொத்தை வைத்துக் கொண்டு, அதன் பலத்தைக் கொண்டு பொருளாதாரத் துறையில் முன்னேறுவதற்கு ஒருகாலும் முடியாது.

சோஷலிஸ்டுகளின் ஆட்சியின் கீழ் உற்பத்திச் சாதனங்களைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு அந்தச் சாதனங்களினின்று வரும் லாபத்தைச் சர்க்கார் மூலம் ஜனங்களுக்கு அளிப்பார்கள். ஆனால் கம்யூனிஸ்டுகளைப் போன்று ஒரே காலில் எல்லா உற்பத்திச் சாதனங்களையும் கைப்பற்றிப் பொதுவுடைமையாக்க மாட்டார்கள். கொஞ்சம் கொஞ்சமாகப் போதிய காரணங்களோடு உற்பத்திச் சாதனங்களைப் பொது உடைமையாக்குவர். உதாரணமாக மேலே, பெட்ரோல் கம்பெனிகள் பண பலமிருந்து சர்க்காரையே எதிர்க்கும் நிலையில் இருக்கின்றன என்பதைப் பார்த்தோம். அந்தக் கம்பெனிகள் தங்களுக்குள்ளேயே ஒப்பந்தம் செய்து கொண்டு ஏகபோக பலத்தால் ஒரு ரூபாய் பெறுமான பெட்ரோலைப் பத்து ரூபாயாக விற்றுப் பொதுஜனங்களிடமிருந்து கொள்ளை லாபத்தைச் சம்பாதிக்கலாம். இவ்வித அபாயகரமான தொழிற் சாதனங்களைப் பொதுவுடைமையாக்கச் சோஷலிஸ்டு சர்க்கார் தயங்கமாட்டார்கள். அப்படிப் பொதுவுடைமை ஆக்குவதன்மூலம் அந்த ஸ்தாபனங்கள் ஏகபோக வல்லமையுடன் செய்யக்கூடிய அட்டூழியங்களிலிருந்து பொது ஜனங்களைக் காப்பாற்றுகின்றனர். அத்துடன் அந்த ஸ்தாபனங்களினால் ஏற்படும் அமித லாபத்தையும் சர்க்கார் மூலம் ஜனங்களுக்குக் கிட்டும்படி செய்கின்றனர். இன்னும் சில சந்தர்ப்பங்களில் தேசத்துக்கு அத்தியாவசியமான தொழிற் ஸ்தாபனங்களைப் போட்டியின் காரணமாகவும், மற்ற காரணங்களாலும் நஷ்டத்தால் நசித்து வருவது வழக்கம். அந்தமாதிரி காலங்களிலும் சோஷலிஸ சர்க்கார் தேச நன்மையின் பொருட்டு அந்த ஸ்தாபனங்களைப் பொதுவுடைமை ஆக்கிக் கொள்வர்.



ஏகபோக வல்லமை இல்லை......

அதற்கு உதாரணம் வேண்டுமென்றால் இங்கிலாந்தில் நிலக்கரிச் சுரங்கங்கள் தேசிய மயமாக்கப்பட்டதையும், இந்தியாவில் விமானப் போக்குவரத்து சமீபத்தில் தேசிய மயமாக்கப்பட்டதையும் எடுத்துச் சொல்லலாம். விவசாயத்தில் கம்யூனிஸ்டுகள் பூரா நிலத்தையும் சர்க்கார் மய


Alembic

மாக்கி, ஜனங்களைக் கூட்டுறவுப் பண்ணையில் பலவந்தமாக இணைத்து வேலை செய்யச் சொல்வர். சோஷலிஸ்டுக் கட்சிக்காரர்கள் தனித்தனி நபர், தாங்களே உழுது சாகுபடி செய்வதற்குத் தேவையான நிலங்களைத் தனி உரிமையாக வைத்துக் கொள்ள அனுமதி கொடுப்பர். எஞ்சி யுள்ள நிலங்களையும், "எங்கள் நெல் மரம் எட்டடி உயரத்தில் காய்க்கிறது" என்று சொல்லும் பெரிய நிலச்சுவான்தாரர்களிடமிருக்கும் நிலங்களையும் எடுத்து, சர்க்கார் பண்ணையில் வைத்து, வேலையில்லாதார்க்கும் நிலமில்லாதார்க்கும் அந்தப் பண்ணைகளில் வேலை செய்ய ஏற்பாடு செய்வார்கள்.



ஜனாதிபதி தாமஸ் ஜபர்ஸன்

சோஷலிஸத் திட்டத்தின் கீழ்ப் பணக்காரர்களின் மேல் அமித லாப வரி, மரண வரி போன்ற வரிகளை விதித்து, அவர்களுடைய பண வீக்கத்தைக் குறைப்பர். அந்த வரிகளின் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு, ஏழைகளின் சுகாதாரம், குடியிருப்பு வசதி முதலிய அத்தியாவசியங்களுக்காகச் செலவழிப்பார்கள். இங்கிலாந்து தேசத்தில் சுகாதார மந்திரி அனூரின் பீவான் இலவசமாக எல்லா பிரஜைகளுக்கும் சுகாதார வசதிகள் அளிக்க ஏற்படுத்திய திட்டம் உலகிற் கோர் எடுத்துக் காட்டாகும்.

சோஷலிஸ்டுத் திட்டத்தில் கூட்டுறவு இயக்கம் ஒரு பெரிய இடம்பெறும். கூட்டுறவு இயக்கத்தின் மூலம், கொள்முதல், விற்பனை, லேவாதேவி முதலிய சகல பொருளாதாரத் துறைகளிலும் நடுவில் நின்று கொள்ளை லாபம் அடிக்கும் வியாபாரிகளை ஒழித்துவிட்டு உண்மையில் உழைப்போருக்கு மேற்படி பொருளாதாரக் கூட்டுறவு சேவையினால் ஏற்படும் லாபத்தைக் கிடைக்கும்படி செய்வர்.

இவ்வளவு உத்தமமான முறைகளில் சமதர்மத்தைப் பொருளாதாரத் துறையில் காட்டும் சோஷலிஸத் திட்டம், நமது இந்திய தேசத்துக்கு ஏன் அவசியமென்பதை இனி சிறிது ஆராய்வோம்.

நமது இந்தியா தேசத்தில் பணக்காரர்கள் ஏழைகள் இவர்களுக் கிடையேயுள்ள வித்தியாசம் எந்த நாட்டையும் விட அதிகமாக இருக்கின்றது. ஒரு பக்கம் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் பரிதவிக்கும் ஏழை ஜனங்கள் நடைப் பிணங்களைப் போல், கோடிக் கணக்கில் நடமாடுவதைப் பார்க்கிறோம். மறு பக்கம் கோடிக் கணக்கான ஆஸ்திகளை வைத்துக்கொண்டு, இன்டுகளில் உறங்கும் பிரபுக்களையும் பார்க்கிறோம். இவ்வளவு தாரதம்மிய முள்ள நாடுகளில் தான் கம்யூனிஸம் தலைகாட்டுவதற்கு வசதிகள் இருக்கின்றன. பிரபுக்களின் கொடுங்கோல் ஆட்சி நடந்த ரஷ்ய தேசத்திலே தான் கம்யூனிஸ்டுக் கட்சிக்காரர்கள் இரத்த வெள்ளம் பெருக்கி அதிகாரத்தைக் கைப்பற்றினர். இந்தியாவிலும் தெலுங்கானா கலகங்களைப் போன்ற சம்பவத்தையும், சென்ற தேர்தலில் யாரும் எதிர்பாராத விதத்தில் கம்யூனிஸ்டுக் கட்சிக்காரர்கள் வெற்றி பெற்றதையும் நோக்குமிடத்து, கம்யூனிஸ அபாயம் எவ்வளவு அருகில் நெருங்கி இருக்கிறது என்பதை உணரலாம். அந்த அபாயத்திலிருந்து இந்தியாவைத் தவிர்க்க வேண்டுமானால், சோஷலிஸத்தைத் தவிர வேறு மார்க்கமில்லை.

மேல் நாடுகளில் பணக்காரர்களாய் இருந்த வகுப்பினர் அந்தந்த நாட்டுக் கலைகளின் வளர்ச்சிக்காகவும், விஞ்ஞான வளர்ச்சிக்காகவும் பாடுபட்டு, பேரும் புகழும் சம்பாதித்துக் கொடுத்திருக்கின்றனர். இங்கிலாந்து தேசத்தை எடுத்துக் கொள்வோமானால் லார்டு பைரன், ஷெல்லி, லார்டு டென்னிஸன், லார்டு கவண்டிஷ் போன்ற கலைஞர்கள், விஞ்ஞான நிபுணர்கள், தங்கள் வகுப்பாரின் மேன்மையை உயர்த்தி யிருக்கிறார்கள். ஆயிரத்து எண்ணூற்று முப்பதாம் வருஷத்துக்கு முன்னாலெல்லாம், இங்கிலாந்து தேசத்தில் அரசியல் அதிகாரம் பிரபுக்கள் கையிலேயே இருந்த போதிலும், அவர்கள் நாட்டு நலனையும் சுதந்திரத்தையும் காப்பாற்றி, திறம்பட நடத்தி வந்திருக்கிறார்கள். இதே போல் நமது இந்தியப் பிரபுக்களின் வமிச பரம்பரையில் யாரும் நடந்து வந்ததாக நாம் உதாரணம் சொல்ல முடியாது. மேலும், மேல்நாட்டுப் பிரபுக்கள் எனப்படுவோர், தங்களிடம் பணம் அதிகமாகச் சேரும் பட்சத்தில் பல கைத்தொழில்களை விருத்தி செய்து பலருக்கு வேலை கொடுப்பதோடு, பல ஆராய்ச்சிகளைத் தங்கள் தொழில்களில் நடத்தி, நாட்டுக்கு நன்மையும் செய்வர். ஆனால், நமது இந்தியாவில் அங்கு ஒருவரும் இங்கு ஒருவரும் தவிர ஏனைய பிரபுக்கள் தங்களுக்குப் பிதுரார்ஜிதமாகக் கிடைத்த ஐசுவரியத்தைக் கட்டிப் போட்டுக் கொண்டு தங்கள் தங்கள் மனோரதப்படி லீலைகள் புரிவதைத் தவிர ஆக்க வேலைகள் ஒன்றும் செய்ய மாட்டார்கள். எனவே நமது இந்தியப் பிரபுக்கள் ஒழிந்து போவார்களேயானால், எப்படி மகாராஜாக்கள் ஒழிந்தபோது ஜனங்கள் யாரும் வருத்தப்பட வில்லையோ, அதேமாதிரி ஒருவரும் துக்கப்பட மாட்டார்கள்.



முதலாளித்வம் இல்லை...

இந்தியாவில் சோஷலிஸத்தைப் புகுத்துவதால் இன்னுமொரு பிரயோஜனமும் ஏற்படக் கூடும். ஜாதி, மத, மாகாண வெறியர்கள் எல்லோருமாகச் சேர்ந்து இந்திய ஐக்கிய அரசியல் திட்டத்தைக் கவிழ்ப்பதற்காகக் கலகங்களைக் கிளப்பிக் கொண்டு வருகின்றனர். ஏற்கெனவே, ஜின்னாசாஹிப் முஸ்லிம்களைத் தட்டிவிட்டு "முஸ்லிம்களில் எந்த பிர்லாவாவது, டால்மியாவாவது, அம்பாலால் சாராபாயாவது இருக்கிறார்களா!" என்று கூச்சல் போட்டார். முஸ்லிம் ஜனங்கள் பெரும்பாலான ஹிந்துக்கள் ஏழைகள் என்பதை மறந்து, பணக்கார ஹிந்துக்களின் ஆதிக்கத்தில் தங்களுக்கு வசதிகளும்,

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## புதுக் கல்வியும் பாரதியும்

இந்த வாரம் நாம் பாரதியின் திருநாளைக் கொண்டாடுகிறோம். முப்பது வருஷங்களுக்கு முன் அவர் எழுதி வைத்துவிட்டுப் போனதைப் படித்தால் ஆச்சரியமா யிருக்கிறது. தேசியக் கல்வியைப் பற்றிப் பாரதியார் எழுதியுள்ளவை ராஜாஜியின் இன்றையப் புதுக் கல்வித் திட்டத்தை ஆதரித்து எழுதியதுபோல் தோன்றுகிறது. இப்பகுதிகளைப் பாருங்கள் :—

"இயன்றவரை மாணாக்கர்கள் எல்லாருக்கும், விசேஷமாகத் தொழிலாளிகளின் பிள்ளைக்கு, நெசவு முதலிய முக்கியமான கைத்தொழில்களிலும், நன்செய்ப் புன்செய்ப் பயிர்த் தொழில்களிலும், பூ, கனி, காய், கிழங்குகள் விளைவிக்கும் தோட்டத் தொழில்களிலும் சிறு வியாபாரங்களிலும் தகுந்த ஞானமும் அனுபவமும் ஏற்படும்படி செய்தல் நன்று. இதற்குத் தொழிலாளிகள் விவசாயிகள் வியாபாரிகளிலே சற்றுப் படிப்புத் தெரிந்தவர்களும் தக்க லௌகிகப் பயிற்சி யுடையவர்களுமான அனுபவஸ்தர்களைக் கொண்டு ஆரம்பப் பயிற்சி ஏற்படுத்திக் கொடுத்தல் மிகவும் நன்மை தரக்கூடிய விஷயமாகும்.

தோட்டத் தொழில்கள், கிணறுகளில் ஜலம் இறைத்தல் முதலியவற்றால் ஏற்படும் சரீரப் பயிற்சியே மிகவும் விசேஷமாகும். பிள்ளைகளுக்குக் காலையில் தாமே ஜலமிறைத்து ஸ்நானஞ் செய்தல், தத்தம் வேஷ்டி துணிகளைத் துவைத்தல் முதலிய அவசியமான காரியங்களில் ஏற்படும் சரீரப் பயிற்சியும் நன்றேயாம்... 'சுவரில்லாமல் சித்திரமெழுத முடியாது.' பிள்ளைகளுக்குச் சரீர பலம் ஏற்படுத்தாமல் வெறுமனே படிப்பு மாத்திரம் கொடுப்பதால், அவர்களுக்கு நாளுக்கு நாள் ஆரோக்கியம் குறைந்து அவர்கள் படித்த படிப்பெல்லாம் விழலாகி, அவர்கள் தீராத துக்கத்துக்கும் அற்பாயுளுக்கும் இரையாகும்படி நேரிடும்.

...இங்ஙனம் ஆரம்பப் பாடசாலைகளில் படித்துத் தேறும் பிள்ளைகள் அந்த அளவிலே ஏதேனும் தொழில் அல்லது வியாபாரத் துறையில் புகுந்து தக்க சம்பாத்தியம் செய்யத் தகுதியுடையோராய் விடுவார்கள். அங்ஙனமின்றி நாட்டிலுள்ள பல உயர்தரப் பாடசாலைகளில் அவர்கள் சேர்ந்து மேற்படிப்புப் படிக்க விரும்பினாலும் அதற்கு இப்பள்ளிக்கூடங்கள் தக்க சாதனங்களே யாகும்."

*[பாரதியின் கட்டுரைகள் : சமூகப் பகுதி. பக்கம் 65.]*

*மயிலாப்பூர்*
*6-9-53*

*ஸ்ரீநிவாஸன்*

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

அடங்கி விடும். ஏனெனில், வெறியர்கள் உண்டாவதற்கே அடிப்படையாக உள்ள காரணம் பொறாமைதான். "அடுத்தவன் பணக்காரனு யிருக்கும் போது, நான் ஏன் ஏழையாக இருக்க வேண்டும் !" என்று ஆத்திரப்பட நேரிடுகிறது—சமதர்மம் ஏற்பட்டால் இவ்வித ஆத்திரத்துக்கு இடமின்றி எல்லாரும் ஆக்க வேலையில் ஈடுபடுவர். இந்திய ஐக்கிய அரசியல் திட்டமும் சரியாக நிலைத்து ஜனங்கள் "நாமெல்லோரும் பாரத மக்கள்" என்று உணர்வர்.

பாரத நாடு, கலாச்சாரத்தில் பழைய நாடு தான். என்றாலும், மற்றொரு விதத்தில் அது ஒரு இளநாடாகும். அதன் இயற்கை வளங்கள் இன்னும் உபயோகிக்கப் படாது, பூமியின் கீழும், மலைகளின் சாரல்களிலுமாகப் பரவிக் கிடக்கின்றன. ஆறுகள் இன்னும் இந்திய ஜன சமுதாயத்துக்குப் பிரயோஜனப் படும்படி கட்டுப் படுத்தப்படவில்லை. இந்த நிலைமையில் இந்தியாவை ஒரு இள நாடென்று நாம் கூசாமல் சொல்லலாம். அந்த இயற்கை வளங்களைச் செயற்கையால் நமது பெரும் ஜன சமுதாயத்துக்குப் பயன் படும்படி செய்ய வேண்டும். இதற்கு இந்திய முதலாளிமார்கள் இதுவரை செலுத்தி யிருக்கும் கவனம் கொஞ்சமே யாகும். எனவே, ஒரு சோஷலிஸ சர்க்கார் நமது இயற்கை வளங்களை மக்களுக்குப் பிரயோஜனப் படும்படி பக்குவப் படுத்த, தொழிற்சாலைகள், சுரங்கங்கள், நீர்த் தேக்கங்கள், நீர்ப் பாசனங்கள் முதலியவற்றைச் செய்து, அதன் மூலம் கிடைக்கும் உற்பத்திப் பெருக்கை, சர்க்கார் மூலம் பொது ஜனங்கள் அனுபவிக்க உதவி செய்தால், பட்டினியால் வாடும் கோடிக் கணக்கான ஏழை ஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த ஏதுவிருக்கும். அதற்கு மாறாக தனிப்பட்ட முதலாளிமார்களை மேற் சொன்ன காரியங்களைச் செய்யச் சொன்னால், பணவீக்கம் அவர்களுக்கு ஏற்பட்டு நாம் முதலாளித்துவ நாடுகளில் உள்ளதாகக் கவனித்த பண வீரயம், மனிதனுக்கு மனிதன் பொருளாதாரத் துறையில் ஏற்ற தாழ்வு, ஏகபோக வல்லமை போன்ற பல கெடுதல்கள் ஏற்படும். இவைகளை வளர விட்டுவிட்டுப் பின்னால் அடக்க முயற்சி செய்யாமல் முன் கூட்டியே சோஷலிஸத்தின் மூலம் நமது இயற்கைவளங்களைப் பத்திரப்படுத்தினால் எவ்வளவோ சகாயங்கள் இருக்கின்றன.

சலுகைகளும் இருக்காது என்று நம்பி ஜின்னாவின் பிரிவினைக் கோஷத்துக்குத் தாளம் போட்டனர். அதன் பலனாக நாடு இரண்டு பக்கத்திலும் துண்டிக்கப்பட்டு, இரத்த ஆறு ஓடி, அதனால் ஏற்பட்ட புண் இன்னும் ஆறாமலேயே இருக்கிறது. இந்த நிலைமையையும் மறந்து, மேற் சொன்ன ஜாதி, மத, மாகாண வெறியர்கள் கலகங்களைச் செய்து கொண்டிருக்கின்றனர். ஆனால் சோஷலிஸம் ஏற்பட்டு, சமதர்மக் கொள்கை இந்தியாவில் ஏற்பட்டு விடுமானால், ஜாதி, மத, மாகாண வெறியர்களின் ஆர்ப்பாட்டங்கள் தாமாகவே

கடைசியாக, சோஷலிஸம், இந்தியாவின் புகழ் பெற்ற அரசியல் தலைவரான மகாத்மா காந்திஜியின் சாத்வீக முறையைப் பின் பற்றி இருப்பதினால், இந்தியர்கள் சோஷலிஸத்தைக் கடைப் பிடிப்பது மிகவும் எளிதான காரியம் ; நமது நாட்டுப் பழமைக்கும் பண்பாட்டுக்கும் மிகவும் உகந்தது. அரசியல் துறையில் சுதந்திரப் போரை சாத்வீக முறையில் நடத்தி, வெற்றி கண்டது போல பொருளாதாரத் துறையிலும் சமதர்மக் கொள்கையை, நாம் சாத்வீக முறையில் நிலை நாட்டினால், நமது தேசத்தின் கௌரவம் உயரும்.


10 Saridon
BRAND ANALGESIC TABLETS
ஸாரிடன் 'ரோஷ்'
ஸாரிடன்
உதவி புரியும்


உயர்தர
சிகரெட்டுகள்
SCISSORS
CIGARETTES
SPECIAL ARMY QUALITY
W.D.&H.O.WILLS.
BRISTOL & LONDON.




"எட்டு மாதங்களாக எனது கீழ் முதுகுப் பாகத்தில் பொறுக்க முடியாத வலி யிருந்தது. சில சமயங்களில் வலியின் கொடுமையால் என்னால் ஒன்றும் முடியாமலும், மிகுந்த க்ஷீண மாயும் இருந்தது. பிறகு "க்ருஷன்" உபயோகித்துப் பார்த்தேன். இரண்டு வாரங்களுக்குப் பின்னர் நான் ஒரு வேற்று மனிதனாயிருக்கிறேன். எனது வலி முழுதுமே விட்டொழிந்து விட்டது.—H.W.S.

மூத்திரக் காய்கள் சரிவரக் கழிவு பதார்த்தங்களை வெளியேற்றுவிடில், ரத்தக் குழாய்களில் விஷச் சத்துக்களில் சேமிக்கப்பட்டு அவை முதுகு வலியை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னின் ஆறுவித உப்புக்கள் மந்தித்துப்போன மூத்திரக் காய்களை மெதுவாகத் தூண்டி அவற்றைச் சரிவர இயக்கி ரத்தக் குழாய்களை சுத்தமாக்கச் செய்விக்கின்றன. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உட்கொள்வது உங்களை முதுகு வலியினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 6




சீதா

## 10. மாய மோதிரம்

சங்கீத வித்வானின் பிரார்த்தனை சீக்கிரத்திலேயே பலித்து விட்டது. பாடிக் கொண்டிருந்த வித்வான், தம் பாட்டை முடித்து விட்டுக் கண்ணைத் திறந்து பார்த்த போது எதிரில் உண்மையிலேயே மந்திரவாதி நிற்பதைக் கண்டார். அதுவும் எப்படிப்பட்ட நிலைமையில் ......! கண்களை மூடித் தியானத்தில் மூழ்கி நிற்கக் கண்டார். சங்கீத வித்வானுக்கு வெலவெலத்துப்போய் விட்டது. தம் இடத்தை விட்டு எழுந்து நிற்கலானார்.

அப்போது, '' இன்னொரு பாட்டு ஆண்டவன் மீது பாடுங்கள் '' என்று வேண்டிக் கொண்டான் மந்திரவாதி.

'' ரொம்ப நேரமாகப் பாடிக் கொண்டிருக்கிறேன். இன்னும் என்னால் பாட முடியாது, தொண்டை யெல்லாம் வலிக்கிறது '' என்றார் வித்வான்.

'' அப்படியானால் என்னுடன் வீட்டுக்கு வாருங்கள். பிரபா இருக்கிறாள், சூடான பசும்பால் தருவாள்! தொண்டைக்கு இதமாக இருக்கும் '' என்று அன்புடன் கூறி அழைத்தான். இதைக் கேட்டதும் அவருக்குக் கலவரம் அதிகமாகி விட்டது.

'மந்திரவாதியுடன் போவதா? போனால் மந்திரவாதி ஏதாகிலும் செய்து விட்டால் என்ன செய்வது?' என்று முதலில் ஐயமுற்றார். 'போகாமல் இருப்பதனால், கோபமுற்று ஏதாகிலும் செய்தால் என்ன செய்வது' என்ற ஐயமும் எழுந்தது. ஆகவே, போனாலும் கஷ்டம், போகா விட்டாலும் தொல்லை என்ற நிலை ஏற்படவே 'போய்த்தான் பார்ப்போமே' என்று தைரியத்துடன் சங்கீத வித்வான் மந்திரவாதியுடன் போக உடன் பட்டார்.

மாளிகையை அடைந்ததும் மந்திரவாதி '' பிரபா, பிரபா! உனக்குச் சங்கீதம் என்றால் ரொம்பப் பிடிக்குமே! உனக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்க இதோ பார், ஒரு சங்கீத வித்வானை அழைத்து வந்திருக்கிறேன்... இவருக்குக் கொஞ்சம் சூடாகப் பால் இருந்தால் கொண்டு வந்து கொடு, அம்மா!'' என்றான்.

பிரபா சற்று நேரத்தில் ஒரு குவளையில் சூடான பால் கொண்டுவந்து கொடுத்தாள். சங்கீத வித்வானுக்கு ரொம்பவும் இதமாக இருந்தது! 'அப்பாடா ரொம்ப சுகமாக இருக்கிறது!' என்று தம்மை மறந்து கூறினார்.

'' இங்கேயே சில நாட்கள் என்னுடன் தங்கியிருக்க வேண்டும். உங்களுக்கு வேண்டிய சௌகரியம் பண்ணித் தருகிறேன்!'' என்று கூறினான் மந்திரவாதி.

இதைக் கேட்டதும் சங்கீத வித்வான் மந்திரவாதியின் வேண்டுகோளுக்கு மிகவும் உற்சாகத்துடன் இணங்கினார்.

இப்படிப் பிரமாத உபசரணைகளுடன் சங்கீத வித்வான் மந்திர வாதியின் மாளிகையிலேயே தங்கி விட்டார். தினம் காலையிலும், மாலையிலும் பக்தி மயமான பாட்டுகளைச் சங்கீத வித்வானைப் பாடச் செய்து மந்திரவாதி மெய் மறந்து கேட்டு அனுபவிப்பான். மற்ற நேரங்களில், சங்கீத வித்வானை அம் மாளிகையிலேயே விட்டு விட்டு, மந்திரவாதி தன் காரியங்களைக் கவனிக்க வெளியே போய் விடுவான்.

மந்திரவாதி வெளியே போய் விடும் நேரங்களில் பிரபாவும், சங்கீத வித்வானும் பேசுவதற்குச் சந்தர்ப்பம் வாய்க்கும். இருவரும் இந்த மாளிகையை விட்டு எப்படித் தப்பிச் செல்வது என்பதைப்பற்றி ஆலோசிப்பார்கள்!

ஒரு நாள் சங்கீத வித்வான், "பிரபா, இந்த மந்திரவாதியின் சக்தியெல்லாம் எங்கிருக்கிறது என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"மந்திரவாதி கையில் அணிந்திருக்கும் மோதிரத்தில்தான் எல்லாச் சக்திகளும் இருக்கின்றன! அந்த மோதிரம் இல்லையென்றால், மந்திரவாதியினால் ஒன்றுமே செய்ய முடியாது!" என்று கூறினாள்.

"அப்படியானால் நீ அந்த மோதிரத்தை மந்திரவாதி தூங்கும்போது திருடிக் கொடுத்து விடு, பிரபா! பின்னர் எல்லாம் சுலபமாக முடிந்து விடும்! நீ விடுதலையடையலாம்; நந்தகுமாரனைப் பார்க்கலாம்; அவனைக் கலியாணம் செய்து கொண்டு இன்பமாக வாழலாம்!" என்று கூறினார் வித்வான்.

"திருடுவதா? யார்? நானா? என்ன துணிச்சல் உமக்கு இப்படிச் சொல்லுவதற்கு? என்னை இத்தனை ஆண்டுகள் காப்பாற்றி வரும் தாத்தாவிடமிருந்து திருடுவதா? முடியவே முடியாது! நான் இந்தக் காட்டிலிருந்து ஆயுள் முடியத் தவிக்க வேண்டியிருந்தாலும் நான் திருடமாட்டேன். என் தாத்தாவுக்குத் துரோகம் நினைக்க மாட்டேன்!" என்றாள் பிரபா.

இதைக் கேட்டதும், சங்கீத வித்வானுக்குச் சோர்வு தட்டி விட்டது. 'இனி இந்தப் பெண்ணை விடுதலை செய்து அழைத்துப் போவது என்பது முடியாத காரியம்! எதுவும் அவரவர்கள் விதிப்படி தான் நடக்கும். இவள் இந்தக் காட்டில் கிடந்து நாள் எல்லாம் தவிக்க வேண்டுமென்றால் யாரால் என்ன செய்ய முடியும்! யார் விதியின் எழுத்தை மாற்றி எழுத முடியும்!" என்று நினைத்தார்.

மறு நாள் காலை சங்கீத வித்வான் மெய்யுருகப் பாடினார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த மந்திரவாதி சிந்தையுருகிப் போய் நின்றான். இப்படி ஒரு மணி நேரத்துக்குமேல் பாடினார்.

இந்தப் பாட்டு முடிந்தது. சங்கீத வித்வான் தம் ஆசனத்தை விட்டு எழுந்து மந்திரவாதியினிடம் சென்றார். "ஐயா, நகர்ப்புறத்திலேயே வசித்த எனக்குக் காட்டின் தனிமையை அனுபவிக்க முடியாமல் இருந்தது. தங்கள் தயவால் இத்தனை நாள் அனுபவித்தாகி விட்டது! இனி நான் போய் வருகிறேன்!" என்றார்.

இதைக் கேட்ட மந்திரவாதி திடுக்கிட்டுப் போனான். "என்ன? அதற்குள்ளாகவா போகிறீர்கள்?" என்றான் நாக்குழற.

"ஆமாம், நான் போய்த்தான் ஆக வேண்டும்! நான் ஊரை விட்டு வந்து வெகு நாட்களாகி விட்டன!" என்றார்.

"அப்படியானால் நான் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் இங்கு இருந்த நாட்கள் எனக்கு எவ்வளவோ இன்பமாக இருந்தது. உங்களுடைய தேவாமிர்தமான கான மழையைக் கேட்டு நான் இதுகாறும் கண்டறியாத இன்பமெல்லாம் கண்டேன்! இதற்கு என்னால் என்ன கைம்மாறு செய்வதென்பதே எனக்குப் புரியவில்லை!" என்று கூறினான் மந்திரவாதி.

"அப்படியானால் நான் ஒன்று கேட்கிறேன் கொடுப்பீர்களா?" என்று கேட்டார் சங்கீத வித்வான்.

"எது வேண்டுமானாலும் கேளுங்கள் தருகிறேன்" என்றான் மந்திரவாதி.

"உங்கள் ஞாபகார்த்தமாக எனக்கு உங்கள் விரலில் அணிந்திருக்கும் மோதிரத்தை அளியுங்கள்!" என்று கேட்டார் சங்கீத வித்வான். ஆம், அவருக்கு அந்த மோதிரத்தில் தான் கருத்தெல்லாம் இருந்தது. அதனால் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் கேட்டு வைத்தார்.

"மோதிரம்தானே? இது என்ன பிரமாதம் எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று மந்திரவாதி கழற்றிக் கொடுக்கப்போனான். அந்தச் சமயத்தில், "தாத்தா வேண்டாம்! கொடுக்காதீர்கள்!" என்று பிரபா கூக்குரலிட்டாள்.

இதைக் கேட்டுச் சங்கீத வித்வான் நடுங்கிப் போய் விட்டார். எங்கே தன் குட்டை வெளிப் படுத்தி விடுவாளோ பிரபா என்று பயந்து போய் விட்டார்.

மந்திரவாதி, "ஏனம்மா! கொடுத்தால் என்ன?" என்றான்.

"மந்திர மோதிரமல்லவா தாத்தா அது. அதில் அல்லவா உங்கள் மந்திர சக்தியெல்லாம் இருக்கிறது?" என்றாள்.

"அதனால் என்ன! அவருடைய சங்கீதமும் பாட்டும், மந்திரவாதிகளுள் தலை சிறந்த மந்திரவாதி யார் என்பதை எனக்கு உணர்த்தி விட்டது! அவர்தான் கடவுள். இவ்வுலகம், இந்தப் புஷ்பங்கள், மனிதர்கள், மிருகங்கள், நட்சத்திரங்கள், ருதுக்கள், சந்திரன், சூரியன் யாவும் அவருடைய மந்திர சக்தியின் விளைவல்லவா? அவர் முன் நான் எம்மாத்திரம்! இப்படி மந்திரவாதிகளுள் எல்லாம் வைத்துப் பெரிய மந்திரவாதி கடவுள்தான் என்று உணர்த்திய இந்தச் சங்கீத வித்வானுக்கு என்னால் என்ன கைம்மாறு செய்ய முடியும்? இவருக்கு என் மோதிரத்தைக் கொடுத்து விடுவதனால் எனக்கு ஒரு நஷ்டமுமில்லையம்மா!" என்றான் மந்திரவாதி.

இதைக் கேட்ட பிரபாவின் கண்களில் கண்ணீர் பெருகிற்று. (தொடரும்)

# Firestone

# பயர்ஸ்டோன் டிரக் பஸ் டயர்களே

## மிக மிகக் குறைந்த செலவில் நீங்கள் இன்று உபயோகிக்கக் கூடியவை!

### உங்கள் மைலேஜ் ரிகார்டுகளே இதை ருஜுப்படுத்தும்!

உங்கள் ஸ்தாபனத்தில் பராமரிக்கப்படும் வண்டிகளிலேயே பயர்ஸ்டோன் டிரக் பஸ் டயர்களைப் பூட்டி மைலேஜ் பரிசோதனை செய்து பாருங்கள்.

பயர்ஸ்டோன் டிரக் பஸ் டயர்கள்தான் ஒரு மைலுக்கு ஏற்படும் செலவு மிக மிகக் குறைவானது என்பதை உங்களுடைய மைலேஜ் ரிகார்டுகளே ருஜுப்படுத்தும்!




அடிப்படையிலே மைலேஜ் செலவுகளை சிக்கனப்படுத்தி, குறைந்த செலவில் அதிகப்படி திறமையாக சேவை செய்யக் கூடிய பிரத்யேகமான நன்மைகளை அளிப்பது பயர்ஸ்டோன் டயர்கள்தான்.

வாங்கச் சிறந்தது டிரக் பஸ் டயர், ஏனெனில் அவைகளின் திறமையான சேவை உங்களுக்கு உற்ற துணையா இருக்கிறது.

உறுதியானது, நீடித்த நாட்களுக்கு உராய்தலால் ஏற்படும் தேய்மானத்தைத் தாங்கக் கூடிய வடிவுடன்.

அதிகப்படியான பந்தோபஸ்துடன் சுகமாக ஓடும்படி அமைக்கப்பட்டுள்ளது

அபிவிருத்தி செய்யப்பட்ட அதிகப்படியான வடிவு அடுக்குகள்

அதிர்ச்சி தாங்குமாறு, உயர்தர கம்-டிப்பிடு முறையில் இணைக்கப்பட்ட நூல்கள் கொண்டது. இதுவரை தயாரிக்கப்பட்டதைவிட உறுதியானது.

ப்ரேக் போடுவதினால் ஏற்படும் உஷ்ணத்தைத் தடுக்குமாறு விசேஷ முறையில் தயாரிக்கப்பட்டது

முட்டை வடிவமான டிசைன்

காற்று நிரப்பியவுடன் தட்டை வடிவத்துடன் சுகமாக ஓடுகிறது. கஷ்டங்களையும் சேதங்களையும் தவிர்க்கிறது. தேய்மானம், வெடிப்புகளுக்கு எதிராக அதிகமான பாதுகாப்பு அளிக்கிறது.

# சகோதரி நீலா

கி. துளசிஜயராமன்





டாண்! டாண்! டாண்! என்று மணி ஆறு அடித்து ஓய்ந்தது. கொக்கரக்கோ என்று கோழி கூவிற்று. அவசரம் அவசரமாக எழுந்தேன். என் படுக்கைக்கு எதிரே மாட்டியிருந்த கிருஷ்ணன் படத்தைப் பார்த்துக் கை கூப்பி வணங்கினேன். அன்று என் மனம் ஒரே குதூகலமாயிருந்தது. கூண்டிலிருந்த கிளியைத் திறந்து விட்டது போல் ஒரு விடுதலை உணர்ச்சி, சுதந்திர நினைவு என் உள்ளத்தில் நிறைந்திருந்தது. அந்த உற்சாகத்திலேயே என் காலை வேலைகளை யெல்லாம் முடித்து விட்டு, என்னை நன்றாக அலங்காரம் செய்து கொண்டு நிலைக் கண்ணாடிக்கு எதிரில் நின்று என்னையே நான் பார்த்துக் கொண்டேன். என் அழகில் நானே ஒரு கணம் மெய் மறந்தேன்! அதே நேரத்தில் என் அறைக்கு வந்து ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்க முயன்றேன். கண்கள் தான் ஏட்டில் இருந்ததே யொழிய எண்ணங்கள் எங்கெல்லாமோ வட்ட மிட்டுச் சுழன்று கொண்டிருந்தன.

எங்கள் குடும்பம் ஒரு பெரிய குடும்பம். குடும்பம்தான் பெரிதே ஒழிய வருவாய் கிடையாது. எங்கள் குடும்பத்தோடு குடும்பமாய் வறுமையும் சேர்ந்து வாழ்ந்து வந்தது. நாங்கள் ஐந்து பெண்கள் இரண்டு ஆண்கள், எங்கள் தாய் தந்தையருக்கு. எங்கள் குடும்பம் ஏழ்மையிலிருந்த போதிலும் என் தந்தையின் சலியாத முயற்சியால் சகோதர சகோதரிகள் யாவருக்கும் நல்ல இடத்திலே விவாகம் நடந்தேறியது. எனக்கும் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் என் சகோதரி நீலாவுக்கும்தான் இன்னும் கல்யாணமாகவில்லை. எனக்கும் பெரிய இடத்தில் அதாவது பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வாலிபருக்கும் அடுத்த வாரம் விவாகம் நடக்கப் போகிறது. நீலாவுக்கும் ஒரு நல்ல கணவன் கிடைத்துவிட்டால்......

"என்ன அக்கா! மாப்பிள்ளை வருகிற ஜோரில், பொழுது எப்பொழுது விடியும் என்று காத்துக் கொண்டிருந்தாயாக்கும். எங்களுக்கு முன்னாலேயே எழுந்து சீவிச் சிங்காரித்துக் கொண்டு தயாராகக் காத்துக் கொண்டு இருக்கிறாய் போலிருக்கே......!" என்று கேட்டாள் நீலா. கல கலவென்று சிரித்தாள்.

"நீலா! உனக்கு எப்பொழுதும் கேலிதான். அது இருக்கட்டும். எனக்குக் கொஞ்சம் சமையற் கட்டில் ஆதரவாயிருந்து பலகாரம் செய்ய வருகிறாயா!" என்று அவள் பேச்சை மாற்றினேன்.

"ஆகா! அப்படியே வருகிறேன். கல்யாணமாகப் போகும் பெண்ணுக்குச் செய்யாமல் வேறு யாருக்குச் செய்யப் போகிறேன்!" என்று பேச்சை விடாமலே எனக்கு ஆக வேண்டிய காரியங்களையும் செய்து முடித்தாள்.

"மீனா! மீனா!" இது என் தாயின் குரல்.

"ஏன், அம்மா......!"

"மாப்பிள்ளை வந்து விட்டார், பலகார மெல்லாம் எடுத்துக் கொண்டு போய் வை" என்று என்னை அவசரப்படுத்தினார் என் தாயார்.

"நீங்களே எடுத்துக் கொண்டு வையுங்கள், அம்மா! எனக்கு வெட்கமா யிருக்கு!" என்றேன். அதற்குள் என் தகப்பனார் உள்ளே வந்தார். "மீனா!" என்று கூப்பிட்டார்.

"ஏன் அப்பா!"

"முதலில் வந்து மாப்பிள்ளைக்கு வணக்கம் செய்து கொள். பிறகு பலகார மெல்லாம், கொண்டு வரலாம், வா" என்று சொல்லி என்னை அழைத்துக் கொண்டு போனார்.

சேகரன்—அவர்தான் என்னை மணக்கப்போகும் மணமகன்!—நாற்காலியில் கம்பீரமாக அமர்ந்திருந்தார். எங்களைக் கண்டதும் எழுந்தார்.

"நீங்கள் உட்காருங்கள்! உட்காருங்கள்!" என்று உபசரித்தார் அப்பா.

நான் அவரை வணங்கினேன். அவர் என் வணக்கத்தை ஏற்றுக் கொண்டு என்னை மலர்ந்த முகத்துடன் பார்த்தார். அப்பொழுது அவர் நடந்து கொண்ட விதம் மிக உயர்ந்த குணமுள்ள பண்பு நிறைந்தவர் என்பதை எடுத்துக் காட்டியது. அதோடு அவருடைய அழகிய உருவமும் கச்சிதமாக அணிந்திருந்த உடையும் அவர் கலை உணர்ச்சியையும் குண அழகையும் இன்னும் மெருகு போட்டுக் காட்டியது.

என் உள்ளம் அவரைச் சுற்றியே வட்டமிட்டது. என் இதயம் அவருடைய மென்மையான இதயத்தைத் தொட்டு விட்டது போலிருந்தது. என் கரங்கள் அவருடைய பலம் பொருந்திய கரங்களைப் பற்றிக் கொண்டு எங்கோ வான வெளியில், கவலையற்ற உலகை நோக்கி மேக மண்டலங்களைத் தாண்டி மேலே மேலே சென்று கொண்டிருப்பது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது. இந்த உணர்ச்சிகள் எல்லாம் ஒரு கண நேரம்தான்.

"அக்கா! அக்கா!" என்று அழைத்துக் கொண்டே புள்ளிமான்போல துள்ளிக் குதித்துக் கொண்டு உள்ளே வந்தாள் நீலா.

"நீலா! இப்படி ஏன் கத்துகிறாய்! கொஞ்சம் அடக்கமாகத்தான் பேசேன்!" என்றேன், சற்று அமைதி இழந்தவளாய்.

"அடேயப்பா! அதற்குள்ளேயே இவ்வளவு பவ்யமாக நடக்க ஆரம்பித்து விட்டாயா! ஆஹா! உன் பெருமையே பெருமை. அக்கா! மாப்பிள்ளை உன்னைப் பற்றி என்ன சொன்னார் தெரியுமா!..." என்ற கேள்வியோடு நிறுத்திவிட்டாள் நீலா.

"என்ன சொன்னார் நீலா! என்ன சொன்னார்! சொல்லேன், சொல்லேன்" என்று என்னையும் மீறிய ஒரு ஆவலில் கேட்டு விட்டேன்.

"என்ன சொன்னாரா!" என்று கேட்டுக் கொண்டே, நிமிர்ந்து நின்று ஒரு நடிப்பு நடித்தாள். "'அழகும் குணமும் உருவாயிருக்கும் உங்கள் பெண்ணை மணக்கச் சித்தமாயிருக்கிறேன்!' என்று நாடக மேடையில் நடிகன் உணர்ச்சியுடன் பேசுவதுபோலப் பேசிய உன் கணவனைக் கண்டு ஒரு கணம் கிரி கிரி என்று சிரித்தேன்!" என்றாள். மீண்டும் வெண்கல ஓசை போலக் கலீரெனச் சிரித்தாள்.

"போக்கிரி......" என்றவாறே அந்தக் கபடமற்ற கல்லூரி மாணவியான நீலாவின் காதைத் திருகப் போனேன். அவள் அதுவரையில் நின்று கொண்டிருப்பாளா! சிட்டாகப் பறந்துவிட்டாள்.

* * *

எனக்கும் சேகருக்கும் ஒரு நல்ல முகூர்த்தத்தில் அக்னி சாட்சியாகத் திருமணம் நடந்தது.

சேகரன் அவர் குடும்பத்துக்கு ஒரே பிள்ளை. சின்ன வயதிலேயே தந்தையை இழந்து விட்டார். அவரைப் பெற்ற தாயார் மாத்திரம் இருந்தார். என் மாமியார் ஒரு விசித்திரப் பிறவி. நல்லவர்களைத் துச்சமாக நினைப்பதும், தீயவர்களுக்கு ஆதரவளிப்பதும் அவர் சுபாவம். பணம் என்றால் அவ்வளவுதான். அதற்காக எதையும் செய்து விடுவார். தம்முடைய வாழ்வு பணத்தில்தான் பதுங்கி யிருக்கிறது என்ற உறுதி படைத்தவர்.

சேகரன், அவர்தான் என் அருமைக் கணவர், தம் போக்கிலே, தம் இஷ்டப்படி வளர்ந்தவர். நல்லது கெட்டது தெரிந்து கொள்ளும் குணம் படைத்தவர். உலகம் தெரிந்தவர். ஆனால் எதையும் எடுத்தவுடன் நம்பிவிட மாட்டார்.

எல்லாவற்றிலும், எதற்கெடுத்தாலும் சந்தேகம், சந்தேகம், சந்தேகம்தான்!

அவருடைய அந்தமாதிரி சந்தேகம் என் வாழ்வுக்கே உலைவைத்து விடும் போலிருந்ததை இன்று நினைத்தால்கூட எனக்கு உடல் சிலிர்க்கிறது.

* * *

ஒரு நாள். சமையற்கார சாமியப்பன் என் முன் கண்களில் நீர் ததும்ப வந்து நின்றான். எனக்கு அவனைப் பார்த்ததும் ஒன்றும் புரியவில்லை. "என்ன சாமியப்பா! ஏன் இப்படிக் கண் கலங்கி நிற்கிறாய்!" என்று கேட்டேன்.

"அம்மா, உங்களுக்கு மனமறியத் தவறு செய்யும்படி நேர்ந்து விட்டது" என்றான்.

"அப்படி என்ன செய்து விட்டாய்!" என்றேன்.

"அதைச் சொல்லி உங்கள் மனதை மேலும் நோகச் செய்வதைவிட இந்த வேலையை விட்டே போய் விடலாம் என்றிருக்கிறேன்."

"எனக்காக நீ வேலையை விடக்கூடாது."

"அதற்காக உங்கள் மாமியார் சொல்லுவதை எல்லாம் கேட்டுக் கொண்டு இந்த வீட்டில் வேலை செய்து கொண்டிருக்க முடியாது."

"அப்படி என்ன சொல்கிறார்கள்!"

"காலையில் உங்களுக்குக் காப்பி கொண்டு வந்தேன். அந்தக் காப்பியை வாங்கிப் பாதிக்கு மேல் கீழே கொட்டிவிட்டு, அதில் வெந்நீரை விட்டுக் கொடுக்கும்படி சொன்னார்கள். அந்தப் பாதகத்தை நான் தினமும் செய்ய முடியாது. நான் வேலையை விட்டுப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு என் பதிலைக்கூட எதிர்பார்க்காமல் அங்கிருந்து அப்போதே போய் விட்டான்.

சாதாரணமாகப் பணம் படைத்தவர்களிடத்திலிருக்கும் வேலைக்காரர்களின் சுபாவமே தனியாகயிருக்கும். அவர்கள் அந்த வீட்டில் நடக்கும் விஷயங்களைக் கூட்டி ஜோடித்து, வருகிறவர்கள், போகிறவர்களைக் கூப்பிட்டு வைத்துச் சொல்லி அனுப்பினால் தான் அவர்கள் மனம் நிம்மதியடையும். அப்படி இல்லாமல் சாமியப்பனைப் போல் தர்ம நியாயத்துக்குப் பயந்து உண்மையாக உழைக்கும் சிலர் இருக்கத்தானிருக்கிறார்கள்.




சாமியப்பனுக்கு இருக்கும் கருணையில் என் மாமியாருக்குக் கடுகளவுகூட இல்லையே என்று அவர் மீது எனக்கு இரக்கம்தான் ஏற்பட்டது!

என் எண்ணங்கள் மறுபடியும் சிறகடித்துக் கொண்டு பழைய சம்பவங்களைத் தேடிப் பறந்து திரிய ஆரம்பித்து விட்டன.

என் கணவர் என்னை மணந்துகொள்வதற்கு அவர் தாயாரைச் சம்மதம் கேட்ட



பொழுது நடந்தவற்றை ஒரு தரம் சொல்லியிருக்கிறார் :

“அம்மா! மீனுவை நிச்சயம் செய்து விட வேண்டியது தானே!”

“நம்முடைய அந்தஸ்துக்கு இது போன்ற தரித்திரம் பிடித்தவர்கள் பெண்ணைக் கொள்ளக் கூடாது.”

“நமக்குத்தான் ஏராளமாகச் சொத்து இருக்கிறதே. நமக்கு ஏன் பணக்கார வீட்டுப் பெண்! நமக்கு வேண்டியதெல்லாம், அழகும் குணமும் நிறைந்த பெண்தானே. அது இரண்டும் மீனுவிடம் பொருந்தி யிருக்கிறது.”

“ஏன் திருப்பித் திருப்பிக் கேட்கிறாய்! அந்தத் தரித்திரம் பிடித்த குடும்பத்துப் பெண் நமக்கு வேண்டாம். அவ்வளவுதான்.”

“நீங்கள் என்ன சொன்னாலும் சரி! நான் அந்தப் பெண்ணையேதான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். அதற்கு முடிவு செய்து விட்டேன்.”

“அப்படிச் செய்வதா யிருந்தால் நான் இன்றைக்கே இந்த வீட்டை விட்டுப் போகிறேன்” என்று சொல்லித் தஞ்சைக்கு, அவருடைய பிறந்த வீட்டுக்குக் கிளம்பிப் போய் விட்டார்.

என் கணவர் அம்மாவுக்கு ஏற்ற பிள்ளைதான். என்னமோ ஆவேசம் வந்தவர்போல இந்தக் கல்யாணத்தை முடித்து விட்டே மறு காரியம் பார்ப்பது என்று ஒற்றைக் காலில் நின்று கலியாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டார்.

கல்யாண நாள் நெருங்கி விட்டது. என் கணவரின் தாயாரைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. அவர் கல்யாணத்துக்கு வராவிட்டாலும் கல்யாணத்தை நடத்தி விடுவது என்று தீர்மானித்தார்.

பெற்ற மனம் கேட்கவில்லையோ; இல்லை வேறு ஏதாவது சதி செய்ய எண்ணினாரோ தெரியவில்லை. கல்யாணத்துக்கு முதல் நாளே தஞ்சையிலிருந்து திரும்பி வந்து விட்டார். இது என் மாமியாரின் முதல் ஒத்துழையாமை!

காலம் சென்ற என் மாமனார் வரப்போகும் மருமகளுக்கென்று இருபதினாயிரம் ரூபாய்க்கு வைர நகைகள் செய்து வைத்திருந்தாராம். என் கல்யாணத்தின்போது அந்த நகைகளைத் தரும்படி தன் தாயாரை என் கணவர் கேட்டார்.

“இந்தத் தரித்திரம் பிடித்த பெண்ணுக்கு நகை வேறு கேடா! வீதியில் கிடந்தவளுக்குப் பட்டாபிஷேகம்! அதிலிருந்து ஒரு திருகாணிகூட என்னிடமிருந்து கிடைக்காது போ...” என்று திட்டினார்.

இதைக் கேட்டதும் என் தலையில் மாடி இடிந்து விழுந்து சுக்கு நூறாக ஆனது போலிருந்தது.

இன்னும் என் கழுத்தில் தாலிகூட ஏறவில்லை. அதற்குள் இந்தக் கொடுமை! அதற்குள் இந்த அமளி துமளியா! பெற்ற தாய் தன் மகனுக்குக் காட்டும் அன்பா இது! நான்தான் நேற்று வந்தவள், அவர் என்ன பண்ணினார்! பாக்கி நாட்களை நான் இவரிடம் எப்படிக் கழிப்பேன்!

எப்படியோ கல்யாணத்துக்கு முன் என்னுடைய மேனியை என் மாமனார் தம் மருமகளுக்கென்றே வாங்கி வைத்திருந்த வைர நகைகள் அலங்கரித்துக் கொண்டிருந்ததை நினைத்து எனக்கே ஆச்சரியமா யிருந்தது.

திருமணம் முடிந்தது. ஆனால் திருமணத்துக்கு முன் ஆரம்பமான என்னுடைய மாமியாரின் கெடுபிடி அத்துடன் முடிந்து விட வில்லை.

திருமணவிருந்துக்குப் பிறகு நாங்கள் எல்லோரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்பொழுது என் மாமியார் கண்களில் கோபம் தெறிக்க, எங்களையெல்லாம் ஒரு முறை சுட்டு எரித்து விடுவதுபோல் பார்த்தார்.

“நீங்களெல்லாம் உருப்படுவீர்களா! சொன்னத்தைக் கேட்டுக் கொண்டிருந்த என் பிள்ளையை மயக்கி இப்படிப் பூட்டியிருந்த அலமாரியையும் உடைத்து, நகைகளை யெடுக்குமளவுக்கு என்னடியம்மா சொக்குப்பொடி போட்டே!” என்று சில பெண்களுக்கே உரித்தான, பிரம்மாண்டமான குரலில் வாய் கிழியக் கத்தினார்.

“உங்கள் பிள்ளையை மயக்கி இங்கு யாரும் மூக்தாணையில் கட்டிக் கொள்ளவில்லை. உங்கள் பவுசைக் கண்டு அவருக்கே தாங்கவில்லை. அப்படி என்ன பண்ணிவிட்டார். அவர் தகப்பனார் செய்து வைத்த நகைகளை எடுத்து அவர் மனைவிக்குப் போடச் சுதந்திரம் கிடையாதா!” என்று ஆத்திரம் தீர, சுடச் சுட, பேசிவிட வேண்டுமென்று என் இளம் நாக்கு துடியாய்த் துடித்தது.

என் உள்ளக் குமுறலைப் புரிந்து கொண்ட என் தாய் என்னை ஒருமாதிரி பார்த்தாள். அந்தக் கருணை நிறைந்த பார்வை, “வந்த இடத்தில் கொஞ்சம் அடக்கமா யிரும்மா. அதுதான் பெண்களுக்கு அழகு!” என்று எனக்குச் சமாதானம் சொல்லுவது போலிருந்தது. அன்பிற்கு யார் தான் கட்டுப்பட மாட்டார்கள்!

“அட பாவமே! லட்சுமி தேவி போலிருக்கும் பெண். அதுக்கு வாய்ச்சிருக்குபார் மாமியார். பணமிருந்தால் அதற்காக இப்படி எண்ணெயில் போட்ட பணியாரம் போல் குதிக்கணுமா!” இது ஒரு மூலையிலிருந்து வந்த ஒரு மாதரசியின் குரல்.

“அட மாமியார்தான், தாண்டி ‘தப்பு’ ‘திப்பு’ என்று குதிக்கிறாள். தடியன்மாதிரி யிருக்கானே பையன், அவன் தாயை கெறியோடு வைத்திருந்தால் இப்படி வந்து பத்துப் பேர் மத்தியில் மானத்தை விமானத்தில் பறக்க விடுவாளா!” என்றது இன்னொரு பெண் குரல். என் காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போலிருந்தது. அதற்குமேல் அந்தக் கூட்டத்தில் உட்கார்ந்திருக்க எனக்கென்ன பைத்தியமா!

மாமியின் இச் செய்கையைக் கண்டு என் மனம் விம்மியது. என் வாழ்வு பூராவும் இப்படியே இருக்குமா! மாமியாரடித்தாலும் என் கணவராவது என்னை அணைப்பாரா! இப்படி என் பேதையுள்ளம் விபரீத எண்ணங்கள் எண்ணித் தவித்தது. இளம் உள்ளத்தில் பட்ட எந்தக் காயமும் லேசில் ஆறுவதில்லை. அது சில சமயங்களில் தழும்பு மாறாத வடுவாகவே மாறி விடுகிறது.

## சங்கீத ரத்தினம்



வேலூர், அட்வகேட் ஸ்ரீ என். ஸ்ரீநிவாசாச்சாரியார் அவர்களின் பேத்தி குமாரி சகுந்தலாவின் இனிமையான சங்கீதத்தைக் கேட்டு ரசித்து, சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள், "சங்கீத ரத்தினம்" என்னும் பெயரை அந்தச் சிறுமிக்கு அளித்தார்கள். படத்தில் சுவாமிகளுக்கு அருகில் குமாரி சகுந்தலா நிற்பதைக் காணலாம்.

---

கணவரும் நானும் என் பிறந்தகம் சென்ற பொழுதுகூட என் மாமியார், "அந்தப் பிச்சைக்காரி வீட்டுக்குள் கால்களைக்கூட எடுத்துவைக்க மாட்டேன்!" என்ற நல்ல வார்த்தைகளால் எங்களுக்கு ஆசி கூறி வழியனுப்பி வைத்தார்.

ஒரு வாரத்துக்குப் பிறகு நான் என் பெற்றோர்களை விட்டுப் பிரிந்து என் கணவருடன் ஊருக்குப் புறப்பட்டேன். என் தந்தை, என்னை அருமையோடு வளர்த்த என் தகப்பனார் கண்களில் நீர் மல்க என்னைப் பார்த்தார். என் தலையை அன்போடு வருடிவிட்டுச் சொன்னார்.

"மீனா! நாம் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான்; ஆனால் பண்பிழந்தவர்களல்ல. பணக்காரர்கள் எதையும் துணிந்து பேசுவார்கள், பயமின்றிச் செய்வார்கள். ஆபத்து நேரிட்டால் பணம் அதை மூடிவிடும். ஆனால் நீ தர்மத்தோடும் நியாயமாகவும் வாழ வேண்டும். அடக்கமும் ஒழுக்கமும்தான் வாழ்வைப் பேணி வளர்க்கும். அதோடு நீ சீனிவாசப் பிள்ளையின் பெண் என்பதையும் மறந்து விடாதே!" என்றார்.

அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் என் மனத்துக்குத் தைரியத்தையும், வாழ்வுக்கு நம்பிக்கையையும் ஊட்டியது.

"என் பெண் எப்பொழுதும் பொறுமை இழக்க மாட்டாள்!" என்ற என் தாயின் வார்த்தைகள் என் மனத்தை உருக்கி விட்டது.

நானும் என் கணவரும் என் பெற்றோர்களை வணங்கி விடைபெற்றுக் கொண்டோம். என் தந்தை என் கணவரைச் சற்றுத் தனிமையாக அழைத்து அவரிடம் சொன்னார்.

"மாப்பிள்ளை! ஏழைமையிலும் என் பெண்ணைக் கண் கலங்காமல் வளர்த்திருக்கிறேன். சீராக நிறையப் பணத்தைக் கொடுக்கா விட்டாலும், பெண்ணென்ற உருவத்தில் அன்பென்னும் பொக்கிஷத்தை, உங்கள் கையில் நம்பி ஒப்படைக்கிறேன். குழந்தையைக் கலங்க விடாமல் பண்போடும் கண்யமாகவும் நடத்துவது உங்கள் கடமை!" என்றார். அந்தச் சொற்கள் என் நெஞ்சை என்னென்னவோ செய்தது.

"ஆகட்டும் மாமா!" என்ற வார்த்தைகள் புன்னகை ததும்ப உறுதியோடு என் கணவரிடம் இருந்து வெளிவந்தது.

நான் என் கணவர் வீட்டுக்கு வந்ததும், நீரிலிருந்த மீனைத் தரையில் தூக்கிப் போட்டாற் போல் ஒவ்வொரு விநாடியும் என் மாமியாரோடு அமைதியான வாழ்வுக்குத் துடிதுடித்துப் போராடிக் கொண்டிருந்தேன். எவ்வளவோ விபரீதக் கொடுமைகளையும் சகித்தேன். அதுவும் எனக்கு ஒரு பாடமாகத்தானிருந்தது.

* * *

சுதந்திரத் திருநாள் வந்தது. பெண்களின் நல்வாழ்வுக்காக அமைந்திருக்கும் "காரயினி மன்ற"த்தில் அன்று திருவிழா கோலாகலமாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்தார்கள். அதில் கலந்துகொள்ள வரவேண்டும் என்று என்னையும் அழைத்திருந்தார்கள்.

என் கணவரும் அந்த விழாவுக்குப் போய் வரச் சொல்லி என்னிடம் சொல்லி யிருந்தார். நானும் காரயினி மன்றத்துக்குப் போய்விட்டு வந்தேன். நான் வீட்டில் இல்லாத சமயத்தில் வெளியில் சென்றிருந்த என் கணவர் உடல் நலம் சரியில்லாமல் வீட்டுக்குத் திரும்பி வந்திருக்கிறார். இந்தச் செய்தியை வீட்டுக்குள் நுழையும்போதே வேலைக்காரப் பையன் என்னிடம் சொன்னான். அதைக் கேட்டதும் நான் திடுக்கிட்டேன்.

நேராக என் கணவரின் அறைக்கு விரைந்து சென்றேன். என் கணவருக்கு அருகில் என் மாமியார் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்ததும் "புருஷன் படுக்கையில் கிடக்கிறான் நீ மகமாயி மன்றத்துக்கும், காரயினி கூடத்துக்கும் போய்ச் சீட்டாடி விட்டு, அங்கே வருகிறவனோடு வம்பளந்து விட்டு வரத்தானே உனக்கு நேரமிருக்கு! நிமிஷத்துக்கு ஒரு புடவை நிமிஷத்திற்கு ஒரு ஜாக்கெட், இப்படிக் குடித்தனம் நடத்தினால் குடும்பம் உருப்பட்டாற் போலத்தான். எங்கேயாவது கெட்டுப் போங்கள். நீயாச்சு உன் அருமைப் புருஷனாச்சு, எனக்கென்ன!" என்று இரைந்தார். இதைக்கேட்ட என் கணவருடைய மனம்கூட மாறி விட்டது என்பதற்கு அறிகுறியாக அவர் முகம் வாட்ட முற்றது.

அம்மாவுக்கு நல்ல பிள்ளையாகவும் எனக்கும் நல்லவராகவும் நடந்துகொள்ள நினைத்த அவர் "மீனா! அம்மா சொல்லுவதை யெல்லாம் நீ காதில் போட்டுக் கொள்ளாதே! அவர் சுபாவமே அப்படித்தான்! போகப் போக உன் குணத்தை யறிந்து அவர் தன் எண்ணத்தை மாற்றிக் கொள்ளுவார். நீ கவலைப்படாதே!" என்ற அவருடைய வார்த்தைகள் என் வயிற்றில் பாலை வார்த்தது போலிருந்தது.

"அத்தான்! இனி உங்களை விட்டு நான் ஒரு கணமும் பிரியேன். உங்கள் சந்தோஷமான வாழ்வுதானே என் வாழ்வு!" என்றேன்.

"மீனா!" என்று அழைத்தார்.

"அத்தான்!" என்று அவர் காலடியில் உட்கார்ந்தேன். அவர் பாதங்களை மெதுவாக அழுக்கிப் பிடித்தேன். அந்தப் பதி சேவையில் என்னை மறந்தேன்; மகிழ்ச்சி யடைந்தேன்.

* * *

வஸந்த காலம் வந்தது. கோடைக் கானலுக்கு நான், என் கணவர், சகோதரி நீலா, ஆகிய மூவரும் சென்றோம். கோடை, ஒரு அழகான ஊர். அங்கிருக்கும் பெரிய ஏரி கோடைக் கானலுக்கே ஒரு தனிச் சிறப்பைத் தந்து கொண்டிருக்கிறது.

இளந் தென்றலோடு கலந்து வரும் மலர்களின் மணமும், குயில்களும், கிளிகளும் கொஞ்சிக் கொஞ்சிப் பேசிக்கொண்டிருக்கும் அழகும், கூடிப் பேசிக் கொண்டது போல் பூத்துக் குலுங்கும் மலர்களின் அழகும் கண்ணுக் கெட்டிய தூரம் பசுமை பசுமை பசுமை என்றிருக்கும் இயற்கைக் காட்சிகளும் கண் கொள்ளாக் காட்சி.

இந்த அற்புதமான இயற்கைக் காட்சிகளுக்கிடையில் ஒருநாள் இரவு உலாவப்புறப்பட்டோம். நான், என் கணவர், சகோதரி நீலா, என் கணவரின் சிநேகிதர் ராஜு எல்லாருமாகப் பலப் பல கதைகளைப் பேசிக்கொண்டு சென்றோம். நிலா பால் போல் காய்ந்து கொண்டிருந்தது. நிலவொளியில் அங்கிருந்த பெரிய ஏரி வெள்ளிப் பாளம்போல் பள பள வென்று மின்னிக் கொண்டிருந்தது. ஏரிக் கரையில் ஒரு தோணி இருந்தது. தோணியைப் பார்த்ததும் எல்லாருக்குமே அதில் ஏறி அந்த ஏரியில் மிதந்து கொண்டே போகலாம் போல் தோன்றியது. "அந்தத் தோணியில் ஏறிப் போவோமா!" என்று ஒரே சமயத்தில் எல்லாரும் கேட்டோம். அப்படி எல்லோருடைய மனமும் இது விஷயத்தில் ஒத்து இருப்பதை எண்ணிச் சிரித்தோம். ஓடத்தில் ஏறி உட்கார்ந்ததும் நான் பாட ஆரம்பித்து விட்டேன். அவரும் பாட ஆரம்பித்து விட்டார். இப்படி எங்களையும் மறந்து நாங்கள் எவ்வளவு நேரம் பாடிக் கொண்டிருந்தோம் என்பது எங்களுக்கே தெரியாது. ஒரு வேளை எங்கள் இன்னிசையைக் கேட்டுக் கொண்டிருந்த அந்தப் பூர்ண சந்திரனுக்குத் தெரியுமோ! தெரியாதோ! அது அவனுக்குத்தான் வெளிச்சம்!

சில சமயங்களில் ராஜுவும் எங்களோடு கலந்து கொள்வார். ராஜுவின் இனிய சுபாவம் எல்லாரையும் ஆட் கொண்டு விடும். அவர் களங்கமற்றுப் பழகுவார். என் கணவரின் நெருங்கிய தோழர். உயர்ந்த குணம் படைத்தவர்.

எங்கள் குடும்பம் மட்டும் பணக்காரக் குடும்பமாக இருந்தால் நான் ராஜுவுக்குத்தான் மனைவியாக இருந்திருப்பேன். கல்யாணம் எல்லாம் நிச்சயமாகிக் கடைசியில் நாங்கள் ஏழை என்ற ஒரு காரணத்தால் கல்யாணம் நின்று விட்டது.

அதனால் நான் ராஜுவிடம் பேசுவதற்கே வெட்கப் பட்டேன். என் கணவரின் வற்புறுத்தலின்மீது அவரிடம் பேசினேன். என் சகோதரி நீலா ராஜுவைக் கேலி செய்து கொண்டே வந்தாள். அப்பொழுதெல்லாம் நீலாவுக்கு மட்டும் ராஜு கணவராக வாய்த்து விட்டால் என்று எண்ணினேன்.

இந்தச் சமயத்தில் "என்ன அக்கா! அத்தானோடு வானுலகத்தில் மிதப்பது போல நினைப்போ..." என்று கேட்டாள். என் கணவர், ராஜு எல்லாரும் 'கொல்'லென்று சிரித்து விட்டார்கள்.

இப்படியாகக் கொட்டமடித்து விட்டு நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்தோம். என் கணவருக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அந்தக் கடிதத்தை ஆவலுடன் படித்தார். அவர் முகம் மாறி விட்டது. கடிதத்தில் என்ன இருந்ததோ!

அன்று இரவு பத்து மணி யிருக்கும். குளிர் 'வெட வெட' வென்று உன் உடம்பை நடுக்கிக் கொண்டிருந்தது. என் கணவர் படுக்கையில் சாய்ந்து கொண்டு அந்தக் கடிதத்தையே மீண்டும் படித்துக் கொண் டிருந்தார். நான் பாலும் பழமும் எடுத்துக் கொண்டு அவர் அறைக்குச் சென்றேன். என் காலடிச் சத்தம் கேட்டு மறு பக்கம் திரும்பிக் கொண்டார். அவருடைய இச் செய்கை எனக்குப் புதிரா யிருந்தது.

மறு நாளே ஊருக்குக் கிளம்பிவிட்டோம். எங்களுடன் என் சகோதரி நீலாவும் வந்தாள். ராஜு மட்டும் அங்கிருந்தபடியே எங்களிடம் விடை பெற்றுக் கொண்டார்.

ஊருக்கு வந்த நாளிலிருந்து அவர் என்னிடம் பேசவில்லை. என்னைப் பார்த்தால் எரிந்து எரிந்து விழுவார். நான் ஏதாவது கேட்டால் பதில் ஒன்றுமே சொல்ல மாட்டார்.

இப்படி அவர் காரணம் இல்லாமல் என்னிடம் கோபித்துக் கொண்டிருப்பது என் உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்தது. என் மாமியார் இப்பொழுது மலர்ந்த முகத்துடன் இருந்தார். என் கணவர் என்மீது கோபித்துக் கொண்டிருப்பது அவருக்கு மிகவும் சந்தோஷத்தைக் கொடுத்தது.

என் சகோதரி நீலா உற்சாகமில்லாமல் இருந்தாள். எதையோ கண்டுபிடிக்க முயன்றுகொண்டிருப்பது போலிருந்தது அவள் செய்கை. ஒரு நாள் என்னிடம் வந்தாள்.

"அக்கா! நீ அத்தானைப் பார்த்து, 'என் மீது என்ன கோபம்!' என்று கேளு. ஏன் பயப்படுகிறாய்!" என்று சொன்னாள்.

நீலா சொன்னதும் எனக்குச் சரி என்று பட்டது.

அன்றிரவு என் கணவரிடம் சென்றேன். அவர் காலில் விழுந்தேன். "நான் என்ன தப்பு பண்ணி விட்டேன்! ஏன் என்னிடம் பேசுவதில்லை! சொல்லுங்கள். தயவு செய்து சொல்லுங்கள். என்னிடம் பேசாமல் என்னைக் கொல்லாதீர்கள்" என்றேன்; கண்ணீர் விட்டேன்; கதறினேன்.

கடைசியில் அவர் மனம் சற்று இளகியது.

என்னை ஒரு முறை வெறிக்கப் பார்த்தார். சினம் கொண்ட புலியின் பார்வை போலிருந்தது அது. நான் ஆடிப் போனேன். எழுந்து மேஜைக்கு அருகில் சென்றார். அதிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து என் முகத்தில் வீசி எறிந்தார். கைகள் நடுங்க மனம் படபடக்க அந்தக் கடிதத்தை எடுத்து ஆவலுடன் படித்தேன்.

என் கற்பிற்கும், மானத்துக்கும் என் குடும்பத்துக்கும் நான் ஒரு இழுக்குத் தேடியவள் என்ற முறையில் எந்தப் புண்ணியவானோ எழுதியிருந்தான். என் கண்கள் இருட்டியது, என் நெஞ்சு அடைத்தது. உடலெல்லாம் குப்பென்று வியர்த்தது. அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டேன்.

"படித்த பெண்களின் சுபாவமா இது! பெரியவர்களின் வார்த்தையைத் தட்டினாலே வாழ்வு குட்டிச்சுவர் தான். இப்பொழுது தெரிகிறது நீ ஏன் ராஜுவுடன் குழைந்து குழைந்து பேசினாய் என்பது" என்றார். இப்படி அவர் தனது சந்தேகங்களை யெல்லாம் என்மேல் அள்ளி வீசினார்.

நான் என்னத்தைச் சொல்ல! தேம்பினேன், புரண்டேன், என் பரிசுத்தமான எண்ணத்தையும் வாழ்க்கையையும் அவரிடம் சொன்னேன். ஆனால் எனக்கு எந்தவித ஆறுதலும் கிட்டவில்லை.

என் உயிர் இப்படியே பிரிந்துவிடக் கூடாதா என்று நினைத்து ஏங்கினேன். என்னைப் படைத்த அந்தக் கடவுள் சன்னிதிக்கு ஓடினேன். அவர் காலடியில் விழுந்தேன்; மன்றாடினேன், கெஞ்சினேன், புலம்பினேன். அப்படியும் என் மனக் குறை மட்டும் நீங்கவில்லை.

காலையில் எழுவதற்கு முயன்றேன். தலை ஒரே கனமாயிருந்தது. முகம் வீங்கியிருந்தது. உடலெல்லாம் கொதிப்பேறியிருந்தது. மனமும் அமைதியின்றி அலைந்து கொண்டிருந்தது.

"அக்கா!" என்ற என் சகோதரி நீலாவின் அன்பான வார்த்தை என் கண்களைத் திறந்தன. தாயைக் கண்ட சேய்போல் அவளைத் தழுவிக் கொண்டு நடந்ததை யெல்லாம் ஒரு முறை சொல்லி அழ வேண்டும் போலிருந்தது. என்னையும் அறியாமல் எல்லாவற்றையும் அவளிடம் கூறிக் கண்ணீர் வடித்தேன். என் கண்களில் நீர் வற்றிற்று. என் தேம்பலும் நின்றது. ஆனால் என் சகோதரி நீலா ஒரு கலக்கமுமின்றி இருந்தாள்.

படுத்த படுக்கையாக ஒரு வாரம் கிடந்தேன். டாக்டர் எனக்கு வியாதியில்லை, மனோ வியாதிதான் என்றும், ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் என் கணவரிடம் நேரடியாகவே சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அன்று மாலை என் தங்கை என்னோடு உட்கார்ந்து ஏதோ சமாதானம் சொல்லிக் கொண்டிருக்கையில் என் கணவர் அங்கு வந்து சேர்ந்தார். எங்களிருவரையும் ஒரு முறை வெறிக்கப் பார்த்தார். "இந்தச் சனியன்களால் எனக்குப் பெரிய தொல்லையாயிருக்கு!" என்று கத்தினார்.

"யார் சனியன்கள்! இந்த வீடேதான் சனீஸ்வரன் கோயில், இந்த வீட்டில் இருப்பவர்கள்தான் மூலைக்கு ஒருவராகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள் நீலா ஆத்திரத்தோடு.

"நீலா......" என்றேன், அமைதியிழந்து.

"நீ சும்மாயிரு அக்கா." என்ற அவள் சொல்லில் கோபம் தெறித்தது.

"இப்படி இவர்களுக்கு இடம் கொடுத்துக் கொடுத்துத் தான் உன் போன்ற உத்தமிகளுக்கு உலை வைக்கப் பார்க்கிறார்கள், இந்தப் பாவிகள். பெண் ஒருத்தி, ஒருத்தனை சகோதர முறையில் பார்த்தால் கூட அது உங்களுக்குப் பொறுப்பதில்லை. ஆனால் உங்களுக்கு மட்டும் கட்டுப்பாடு கிடையாது. மனைவியைக் கணவனே சந்தேகிக்க ஆரம்பித்தால், அவளைக் கொல்ல இதைவிடக் கொடிய ஆயுதம் வேறொன்றும் வேண்டியதில்லை. தன் கணவன் மற்றொரு பெண்ணை மனத்தால் இச்சிக்கின்றான் என்று தெரிந்தால் கூட அதை எந்தப் பெண் மனமும் பொறுக்காது. அது அவள் மனத்தை என்ன பாடுபடுத்தும் என்பது பெண்ணாகப் பிறந்தவளுக்குத்தான் தெரியுமே யொழிய உங்கள் போன்ற இதயமற்ற ஆண்களின் உள்ளத்திற்கு விளையாட்டாகவே யிருக்கும். பெண்ணைக் கொடுமைப் படுத்துவது ஆண்களின் செய்கை யல்ல. அது பேடித்தனம். அதோடு உங்கள் ஆண்மைக்கும் அது இழுக்கு. வீண் பழியை மூட்டை கட்டிக் கொள்ள வேண்டாம். பெண் பழி பெரிய பழி. அந்தக் கடிதம் உண்மையான கடிதமா! அது யாருடைய கற்பனை என்பதைச் சிந்தித்துப் பார்த்தீர்களா! அது இந்த வீட்டிலிருந்தே எழுதப்பட்டது. இதோ பாருங்கள் அதே மாதிரி இன்னொரு கடிதத்தை. இந்தக் கையெழுத்து யாருடையது! நன்றாகப் பாருங்கள். இந்தக் கடிதத்தைப் பார்த்து அந்தக் கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் கடிதத்தின் எழுத்தைப் பாருங்கள்" என்று பொழிந்து தள்ளினாள்.

என் கணவன் முகத்துக்கு நேரே அந்தக் கடிதத்தைத் தூக்கி எறிந்தாள். "நீங்களும் ஒரு ஆண் மகன்தானா!" என்று ஆவேசம் வந்தவள் போல் கேட்டாள்.

மிகுந்த சிரமத்துடன் எழுந்தேன், "நீலா, என் கணவனைத் திட்ட உனக்கென்ன உரிமை!" என்று கேட்டேன். அவள் கன்னத்தில் 'பளீர்' என்று அறைந்தேன். அதற்குமேல் எனக்குப் பலமில்லை. அப்படியே பொத்தென்று விழுந்து விட்டேன்.

அதற்குப் பிறகு என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது. நான் நினைவு பெற்றுக் கண் விழித்துப் பார்க்கும்போது என் கணவரின் மடியில் படுத்திருப்பதை உணர்ந்தேன். என் எதிரில் கவலையே உருவமாக என் அருமைச் சகோதரி நீலா நின்று கொண்டிருந்தாள்.

"மீனா! எல்லாவற்றையும் மறந்துவிடு. ஆத்திரத்தில் அறிவிழந்து விட்டேன். பண ஆசையில் நமக்கு வேண்டியவர்களே செய்துவிட்ட சதி இது. இந்த உண்மையைக் கண்டு பிடித்த நீலாவுக்கு நான் ஒரு பரிசு அளிக்கப் போகிறேன். உங்கள் பெற்றோர்களுக்குச் சிரமம் கொடுக்காமல் நானே நீலாவுக்கு வரன் பார்த்து மணம் முடிக்கப் போகிறேன். அந்த வரன் யார் தெரியுமா! என் தோழன் ராஜுதான்" என்றார்.

நீலாவின் அழகிய களங்கமற்ற முகம் செந்தாமரை மலர் போல் சிவந்து விட்டது.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10













# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான அழுக்கிலிருக்கும்,
கிருமிகளிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது




L. 231-50 TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*